# திவ்விய தேசங்கள் :
# திருக்குடந்தை (கும்பகோணம்) — ஓர் ஆய்வு

பிஎச்.டி. (முனைவர்) பட்டத்திற்காக
சென்னை பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு


மேற்பார்வையாளர்

Dr. V.K.S.N. ராகவன், M.A., Ph.D.
துறைத்தலைவர்
வைணவத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்

ஆய்வாளர்

திருமதி S.கோமளவல்லி, M.A.
வைணவத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்






வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
செப்டம்பர் 2004

# மேற்பார்வையாளரின் சான்றிதழ்

சென்னை 5
27.8.2004

Dr V.K.S.N. ராகவன், M.A.., Ph.D.
பேராசிரியர்
துறைத்தலைவர்
வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை 600 005

[illegible] திவ்விய தேசங்களு[illegible]: திருக்குடந்தை (கும்பகோணம்) — ஓராய்வு என்னும் பொருளில் திருமதி எஸ். கோமளவல்லி , எம்.ஏ. அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு சென்னைப் பல்கலைக் கழகத்தின் வைணவத்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இவ்வாய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

V. K. S. N. Raghavan
(V.K.S.N. ராகவன்)
மேற்பார்வையாளர்

# ஆய்வாளரின் உறுதிமொழி

சென்னை 5
27.8.2004

S.கோமளவல்லி, M.A.
ஆய்வாளர்
வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை 600 005

திவ்விய தேசங்கள் : திருக்குடந்தை (கும்பகோணம்) – ஓர் ஆய்வு என்னும் பொருளில் பிஎச்.டி. பட்டத்திற்காக மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வு என் முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கிறேன்.

S. Komalavalli

(S.கோமளவல்லி)
ஆய்வாளர்

## நன்றியுரை

திருமகள் கேள்வனாகிய எம்பெருமானின் திருவருளாலும், ஆசார்யர்களின் அருள் நோக்கினாலும் சென்னைப் பல்கலைக் கழகத்தின் வைணவத்துறையில் 1999 முதல் 2004 வரை யான் மேற்கொண்ட முழு நேர ஆய்வின் பயனாக திவ்விய தேசங்களுள் திருக்குடந்தை (கும்பகோணம்) — ஓராய்வு என்னும் இவ்வாய்வேடு உருவாகி நிறைவு பெறுகிறது.

வைணவத்துறையில் யான் M.A. பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்த பொழுதும் பின்னர் ஆய்வுக்காகப் பதிவு செய்து கொண்ட பொழுதும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட இந்நூலைப்பற்றிக் கூறி, இந்நூலையே ஆய்வு செய்யும்படி ஆலோசனையும் நல்லாசிகளும் அருளிச் செய்து ஊக்குவித்த அடியேனுடைய ஆசார்யர்களாகிய Dr M. நரசிம்மாச்சாரி, Dr M.A. வேங்கடகிருஷ்ணன் மற்றும் Dr V.K.S.N. ராகவன் ஆகியோரின் பொன்னடிகளில் என் வணக்கங்களையும் நன்றி யையும் ஸமர்ப்பிக்கிறேன்.

இவ்வாய்வேடு உருவாகி, செவ்வனே நிறைவடையத் தேவையான வழிமுறைகளையும் உரிய ஆலோசனைகளையும் தொடர்ந்து நல்கி உதவிய மேற்பார்வையாளராகிய வைணவத் துறைத் தலைவர் Dr. V.K..S.N. ராகவன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித் துக் கொள்கிறேன். மேலும் இந்த ஆய்வு குறித்து மேலான அறிவுரைகளும், ஆலோசனைகளும் வழங்கி ஊக்கமளித்த முன்னாள் வைணவத்துறைத் தலைவர் மற்றும் பேராசிரியர் Dr.M..நரஸிம்மாசாரி

அவர்களுக்கும், என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன். இவ்வாய்வேடு செவ்வனே அமைய அவ்வப்பொழுது இன்றியமையாத கருத்துக்களை வழங்கிய இத்துறைப்பேராசிரியர் Dr M.A. வேங்கட கிருஷ்ணன், மற்றும் Dr பூமா வேங்கடகிருஷ்ணன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்வாய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதியளித்துப் பேருதவி புரிந்த சென்னைப் பல்கலைக்கழக நிர்வாகத்தினர் அனைவருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைக் குறுகிய காலத்தில் மிக அழகிய முறையில் கணிப்பொறியில் வடிவமைத்துக் கொடுத்த என் உயிர்த் தோழி திருமதி லதா கிருஷ்ணன், என் நண்பர் திரு. S.முரளீதரன் (குரோம்பேட்டை) ஆகியோருக்கும் மற்றும் உறுதுணையாக நின்ற என் குடும்பத்தினர் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன். நன்றி.

# முன்னுரை

திருமகள் கேள்வனாகிய எம்பெருமானையே முழுமுதற் கடவுளாகவும், முதல் ஆசார்யனாகவும் பெற்றுள்ள இச்சமயம் வைணவ சமயம் என்று போற்றப்படுகிறது. இச்சமயத்தின் கோட்பாடுகள் அடங்கிய தத்துவம் "விசிஷ்டாத்வைத வேதாந்தம்" என்று வழங்கப்பெறுகிறது. ஆறுகளனைத்தும் ஆழ்கடலை நோக்கிச்செல்வது போல் பல்வேறு சமயங்களும் இறைவனை அடைய வேண்டும் என்பதையே இலக்காகக் கொண்டுள்ளன. அனைத்து உயிர்களும் இறைவனுடைய மேன்மையை உணர்ந்து அவனிடம் பக்தி செலுத்தவேண்டியது மிக இன்றியமை யாததாகும்.

இறைவனுடைய ஐவகை நிலைகளில் அருச்சை என்னும் தொழத்தக்க வடிவங்கள் பக்தியை வளம்பெறச்செய்ய உதவுபவை ஆகின்றன. ஆழ்வார்கள் அருளிச்செயல்களில் (திவ்யப்பிரபந்தத்தில்) 108 திவ்யதேசங்களின் முக்கியத்துவம் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இத்தகைய திவ்வியதேசங்களில் மிகச்சிறப்பு பெற்றவை திருவரங்கம், திரு வேங்கடம்,திருவத்தியூர்(காஞ்சீபுரம்), அழகர் கோவில் (திருமாலிருஞ் சோலை), திருக்குடந்தை (கும்பகோணம்) முதலானவை. இவற்றில் தனிச்சிறப்பு பெற்ற திருக்குடந்தை பற்றி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

தோற்றுவாய், ஆழ்வார்களும் திவ்ய தேசங்களும், திருக்குடந்தை: ஓர் அறிமுகம், ஆழ்வார்களும் திருக்குடந்தையும், திருக்குடந்தையின் அண்மையில் அமைந்துள்ள சில முக்கிய திவ்ய தேசங்கள், முடிவுரை ஆகிய ஆறு இயல்களில் அமைந்துள்ள இவ்வாய்வேடு திருக்குடந்தையின் சிறப்பினையும், சீர்மையையும் விரித்துரைக்கும் வகையில் இயற்றப் பட்டுள்ளது.

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

### *1. வைணவம்*

*திருமகள் கேள்வனாகிய விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொள்ளும் சித்தாந்தம் வைணவ சித்தாந்தமாகும். 'விஷ்ணு' என்னும் சொல் எம்பெருமானின் எங்கும் பரந்துள்ள தன்மையைக் குறிக்கிறது. நம்மாழ்வாரும் எம்பெருமானின் பரந்திருக்கும் தன்மையை, "உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்"[1] என்று குறிப்பிடுகிறார்.*

*பண்டைக்கால மக்களும் திருமாலையே முழுமுதற் கடவுளாகப் போற்றி வணங்கினர் - என்பதைச் சங்ககால இலக்கியங்களான முல்லைப் பாட்டு, பரிபாடல், ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரம் மூலமாகவும் அறியலாம். வைணவ சித்தாந்தத்திற்கு வேதங்கள் அடிப்படையாக இருப்பதால் இம்மதம் 'வைதிக மதம்' என்ற பெயரை நெடுங்காலமாகக் கொண்டுள்ளது.*

*மகாலட்சுமியுடன் கூடிய திருமாலைப் பரம்பொருளாக ஏற்றுக்கொள்ளும் தத்துவமே "ஸ்ரீவைஷ்ணவ தத்துவம்" என்று குறிப்பிடப்படுகிறது.*

*அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை[2] எம்பெருமானின் திருமார்பையே இருப்பிடமாகக் கொண்டு, எப்பொழுதும் எம்பெருமானைப் பிரியாதிருக்கிறாள். பிராட்டியின் இத்தன்மையை முன்னிட்டே, எம்பெருமானைப் பரம்பொருளாகத் தான்*

---

*1. திருவாய்மொழி, 1.1.7.*

*2. திருவாய்மொழி, 6.10.10.*

கண்டு அறிந்ததைத்

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்[1]

என்று பேயாழ்வாரும்,

'ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ'[2] முதலான வேத வாக்கியங்களும் தெளிவாகக் காட்டுகின்றன.

திருமகள் கொழுநனான ஸ்ரீமந் நாராயணனே பரமதத்துவம். 'அம்புயத்தாள் கணவன் தாளிணையில்'[3] செய்யும் பக்தியும், பிரபத்தியும், (சரணாகதியும்) தான் எம்பெருமானை அடைவதற்குத் தக்க நெறிகளாக அமைகின்றன. "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை"[4] என்ற ஆழ்வார் திருவாய்மொழிப்படி அவன் திருவடிகளில் கைங்கர்யம் (திருப்பணிவிடை) செய்து எம்பெருமானை மகிழ்விப்பதே பரம புருஷார்த்தம் என்னும் கொள்கையைத் தன்னகத்தே கொண்டுள்ளது, ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம்.

"தத்துவ ஜ்ஞாநாந் மோக்ஷ:" என்னும் கொள்கைப்படி வீடுபேறு பெறுவதற்குச் சேதநதத்துவம் அசேதநதத்துவம், ஈச்வரன் ஆகிய மூன்று தத்துவங்களையும், அவற்றை நன்கு விளக்கிக் கூறும் ரகசிய கிரந்தங்களின் அரிய கருத்துக்களையும் நன்கு அறிந்து தெளிய வேண்டியது மிக இன்றியமையாததாகும்.

## 2. மூன்று தத்துவங்கள் (தத்துவத்ரயம்)

### ஜீவன் (சேதநதத்துவம்)

அணு ஸ்வரூபமாகிய சேதநன், ஞானத்தையும், ஆனந்தத்தையும் உடையவனாவான். சித், ஆத்மா, ஜீவன் என்றும் வழங்குவதுண்டு. ஜீவன் சரீரம், இந்திரியம், மனம், பிராணன், புத்தி என்னும் தத்துவங்களைக்

---

1. மூன்றாம் திருவந்தாதி, 1.
2. புருஷ ஸூக்தம் - உத்தர நாராயணாநுவாகம், 8.
3. அதிகாரஸங்கரஹம், 7.
4. திருவாய்மொழி, 3.3.1.

காட்டிலும் மாறுபட்டவன். ஜீவன் உத்பத்தியும் (உண்டாக்கல்) விநாசமும் (அழிவு) இன்றி நித்தியமாக என்றென்றும் இருப்பவன். சரீரந்தோறும் வேறுபட்டு நிற்பவன். ஜீவாத்மாக்களின் எண்ணிக்கை எண்ணிலடங்கா. ஜீவன் செயல்களைச் செய்யும் கர்த்தா(எழுவாய்) என்றும், பலனை அனுபவிக்கும் போக்தாவாகவும் இருக்கிறான். தான் கொண்ட சரீரத்தை ஏற்பவனாகவும், அச்சரீரத்திற்குள் சரீரி (உயிர்) ஆகவும் இருக்கும் ஜீவன், ஈச்வரனுக்கும் சரீரமாயிருக்கிறான். ஜீவர்கள் பத்தர், முக்தர், நித்யர் என்று மூன்று வகைப்படுவர்.

பத்தர்

இவர்கள் அனாதியான கர்மவினைக்கு உட்பட்டு, தொடர்ந்து வருவதான முடிவற்ற ஸம்ஸாரத்திலிருப்பவர்கள். நான்முகன் முதல் புழுக்கள் வரை உள்ள அனைத்து ஜீவர்களும் பத்த ஜீவர்களேயாவர். பிறவி[1] என்னும் பெரும் கடலில் கட்டுண்டவர்கள் இவ்வகையினர்.

முக்தர்

முக்தர்கள் கர்மபூமியில் ஆசார்ய ஸம்பந்தம் பெற்று, அவரது அருளால் மோக்ஷோபாயமாகிய பக்தி அல்லது பிரபத்தியை மேற்கொண்டு, சரீரத்தின் முடிவில் கர்மத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை அடைந்தவர்களாவர்.

நித்யர்

இவர்கள் எம்பெருமானைப் போன்று எப்போதும், எக்காலத்திலும் கர்மம், பிரகிருதி ஸம்பந்தம் இல்லாதவர்கள். இவர்களது ஞானம் எப்பொழுதும் மலர்ந்தே காணப்படும். நித்யர்கள் ஸ்ரீவைகுண்டத்தில் பகவான் உகந்த கைங்கர்யங்களையே செய்து வருகின்றனர். இவர்கள் அநந்தன், கருடன், விஷ்வக்ஸேநர் முதலானவர்கள் நித்யஸூரிகள் என்று இவர்கள் அழைக்கப்படு கின்றனர்.

அசேதந தத்துவம்

அறிவில்லாப் பொருட்கள் அசேதநங்களாகும். எப்பொழுதும் விகாரமடைந்துகொண்டே இருக்கும். இவற்றால் எந்த பலனையும்

---

1. ஒப்பிடுக:திருக்குறள், 10.

அனுபவிக்க இயலாது. அசேதநத்தால் கிடைக்கும் பலனை அனுபவிப்பவன் ஜீவனே. அசேதநம் - 1. பிரகிருதி, 2. காலம், 3. சுத்த ஸத்துவம் என மூவகைப்டும்.

### பிரகிருதி

பிரகிருதி ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்னும் முக்குணங்களையும் உடைய திரவியம். ஆதலால், திரிகுணம் என்று வழங்கப்படுகிறது. வேதங்களில் அக்ஷரம், அவித்யை, மாயை என்னும் சொற்களால் வழங்கப்படும். பிரகிருதி அழிவில்லாதது. பிரகிருதியில் மூன்று குணங்களும் சமமான அளவில் உள்ளபொழுது 'மஹாபிரளயம்' ஏற்படும். இதன் குணங்களில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படும் பொழுது படைப்பு உண்டாகிறது. அப்பொழுது இப் பிரகிருதி 'அவ்யக்தம்' என்று வழங்கப்படுகிறது.

### காலம்

எங்கும் பரந்து நிற்கும் காலம், கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று மூன்று வகைப்படும். இதற்கு ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் இல்லை. விநாடி, நிமிடம், நாழிகை, நாள், வருடம் இவை எல்லாம் காலத்தின் உட்பிரிவுகளாக அமைகின்றன. லீலாவிபூதியில் மாறுபாடுகளெல்லாம் காலத்திற்கு வசப்பட்டு எம்பெருமானின் இச்சையால் நடப்பவையாகும். நித்ய விபூதி என்னும் ஸ்ரீவைகுண்டத்தில் காலம் இருப்பினும், அதன் சம்பந்தமின்றி அனைத்தும் எம்பெருமானின் சங்கல்பத்தால் (திருக்குறிப்பால்) நடப்பவையாகும். எம்பெருமான் உலகை ஆக்கி, நிலைபெறுத்தி நீக்குவதற்குக் காலம் துணைக் கருவியாக உள்ளது.[1]

### சுத்த ஸத்துவம்

ரஜோ குணமும், தமோ குணமுமின்றி ஸத்துவ குணத்தை மட்டுமே உடையது. நித்தியர், முக்தர், ஈச்வரனுடைய திருமேனிகள் மற்றும் ஸ்ரீவைகுண்டத்திலுள்ள கோபுரம், விமாநம், மண்டபம் போன்ற

---

1. ஒப்பிடுக: கம்பராமாயணம், 1.1.1.

அனைத்துப் பொருட்களும் சுத்த ஸத்துவத்தால் ஆனவை. இது ஸ்வயம் பிரகாசமாக இருக்கும்.

### ஈச்வர தத்துவம்

வேதங்களில் புகழப்படுகின்ற ஸ்ரீமந் நாராயணனே ஸர்வேச்வரன் (எம்பெருமான்) ஆவான். ஞான ஸ்வரூபனாகவும், ஆனந்த ஸ்வரூபனாகவும் உள்ள எம்பெருமான் எப்பொழுதும் மாறுபடாத தன்மையை உடையவன் ஆவான். எங்கும் எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்திருக்கும் எம்பெருமானைத் தேசத்தாலும், காலத்தாலும், பொருளாலும் அளவிட்டுப் பேச முடியாது. அனைத்தையும் படைத்து, காத்து, அழித்துத் திகழும் எம்பெருமான் எல்லா கர்மங்களாலும் ஆராதிக்கப்பட்டு பலனைத் தருகிறான். அவன் தன்னை அடைந்தவர்களின் வினைகளை நீக்கி, அவர்களுக்கு உபாயமாகவும் (ஆறு), உபேயமாகவும் (பேறு) இருக்கிறான். அனைத்துக் கல்யாண குணங்களுக்கும் உறை விடமான எம்பெருமான் இழிகுணங்களற்றவன்; அவன் சேதநாசேதநங்கள் அடங்கிய உலகை தனக்குச் சரீரமாகக் கொண்டு, அவற்றுள் ஆத்மாவாக இயங்குகிறான். எம்பெருமான் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அருச்சை என ஐந்து நிலைகளில் இருப்பதாக வேதம் அறிவிக்கிறது.

### பரரூபம்

எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்தில் பரவாஸுதேவனாக எழுந் தருளியிருக்கும் நிலையே பரரூபமாகும். பகவானது இந்த ரூபத்தை நித்யர்களும், முக்தர்களும் அனுபவிக்கின்றனர்.

### வியூகம்

திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள பெருமானது ரூபம் வியூகம் எனப்படும். இந்த ரூபம் நான்முகன், இந்திரன் முதலான தேவர் கணங்களால் அனுபவிக்கப் படுவதாகும்.

விபவம்

"மீனோடு ஆமை, கேழல், அரி, குறளாய், முன்னும் இராமனாய்த் தானாய் பின்னும் இராமனாய்த் தாமோதரனாய் கல்கியும் ஆனான்"[1] என்ற திருமங்கை மன்னன் திருவாக்குப்படி அவதாரங்கள் எண்ணிறந்தவை. பிறப்பில் பல் பிறவிப் பெருமாளை அவ்வவ்வவதார காலத்தில் வாழ்ந்தவர்கள் மட்டுமே அனுபவித்தனர்.

அந்தர்யாமி

எம்பெருமான் அனைவருடைய இதயத்திலும் ஸூக்ஷ்மமாய் இருக்கும் நிலை அந்தர்யாமி எனப்படும். தவம் செய்பவர்கள், தம் தம் தவ வலிமையால் பெருமாளை தியானம் செய்வதற்கு ஏற்றவாறு அமைந்த நிலையாகும்.

அருச்சாரூபம்

எம்பெருமான் பக்தர்கள் வேண்டியபடியும், அனைவரும் அனுபவிக்கும் படியும் ஆங்காங்கே திருக் கோயில்களிலும், பிற இடங்களிலும் எழுந்தருளி இருக்கும் நிலை. பொதுவாகத் திருமால் திருக்கோயில்களில் மூன்று திருக்கோலங்களில் காட்சி யளிக்கிறான். அவை 1. சயனத் திருக்கோலம் 2. வீற்றிருந்த திருக்கோலம் 3. நின்ற திருக்கோலம் என் பன.

எம்பெருமான் கோயில் கொண்டுள்ள திருப்பதிகளை திவ்விய தேசம் என்று போற்றுவர். இத் திவ்விய தேசங்கள் உகந்தருளின நிலங்கள் என்றபடி சிறப்புப் பெறலாயின. எம்பெருமான் கோயில் கொண்டுள்ள திவ்விய தேசங்களில் ஆழ்வார்களால் பாடப் பெற்ற திவ்விய தேசங்கள் 108 எனக் கருதப்படுகிறது.

**2. மூன்று மந்திரங்கள் (ரஹஸ்யத்ரயம்)**

முக்தி (மோக்ஷம், வீடுபேறு, விடுதலை) என்று சொல்லப்படும் பெருவாழ்வை அடைய, திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்னும்

---

1. பெரியதிருமொழி, 8.8.10.

ரஹஸ்யத்ரயங்களின் பொருள்களை ஒவ்வொரு ஜீவனும் உணர வேண்டியது இன்றியமையாததாகும்.

அ. திருமந்திரம்

ஜீவர்கள் அனைவரும் உயர்நிலையை அடையும் வண்ணம் எம்பெருமான் திருமந்திரத்தை பதரிகாச்ரமத்தில் வெளியிட்டான். இம்மந்திரம் "எம்பெருமானுக்குச் சேஷமாய் இருப்பதே பாக்கியம்" என்று ஆத்ம ஸ்வரூபத்தைத் தெளிவித்து, அதற்கேற்ற பலனான மோக்ஷத்தில் ஆசையும், அதை விரைவில் பெறவேண்டும் என்கிற துடிப்பையும் உண்டாக்கி, அதற்கேற்ற உபாயத்தில் மூட்டும். அனைத்து வேதங்களின் ஸாரதமமான பொருள்களும் இதில் அடங்கியுள்ளன. 'சிறிய கண்ணாடி பெரிய உருவைக் காட்டுமாபோலே' எட்டு எழுத்துக்களடங்கிய இம் மந்திரம் தத்துவம், உபாயம் இவற்றை வெளியிட்டு அனைத்துப் பலன்களையும் அளிக்க வல்லது.

"பிரணவம்" "நம:" "நாராயணாய" என்ற மூன்று பதங்களை உடையது. பிரணவத்தில் "அ,உ,ம்" என்ற மூன்று எழுத்துக்களும் மூன்று சொற்களாக இருந்து, அகாரப்பொருளான (வாச்யனான) எம்பெருமானுக்கே, மகாரப்பொருளான ஜீவன் அடிமை என்று அறுதியிட்டு உரைக்கிறது. மத்யமபதமான "நம:" ஜீவன் தனக்குரியனல்லன், பிறருக்கும் உரியனல்லன் என்பதைக் காட்டும்.

மூன்றாம் (அந்திம) பதமான "நாராயணாய" நாராயண என்ற சப்தத்துடன் 'ஆய' என்ற நான்காம் வேற்றுமை உருபை ஸ்பஷ்டமாகக் கொண்டு உள்ளது. மகாரமான ஜீவன், ஸர்வ வஸ்துக்களிலும் நிறைந்தவனும், ஸர்வத்தையும் தனக்குள்ளே வைத்து ரக்ஷிப்பவனும் ஆன எம்பெருமானுக்கே அடிமை என்பதைக் காட்டும். ஈச்வரனான நாராயணனே அனைத்து உறவு (ஸர்வவித பந்து) என்பதும், எல்லா அடிமைகளும் நாராயணனுக்கே செய்யப்பெறுவேனாக வேண்டும் என்ற அவாவும் இம்மந்திரம் மூலம் பிறக்கும்.

## ஆ. துவயம்

திருமந்திரத்தாலே சொரூப ஞானம் பெறும் அதிகாரிக்கு அவன் சொரூபத்திற்குத் தக்கதான உபாய ஞானமும், புருஷார்த்த ஞானமும் பிறக்க வேண்டுகையாலே அவ்விரண்டையும் அறிவிக்கின்றது, துவய மந்த்ரம். காரியவைகுண்டத்தில், பிறவித்துயரில் அழுந்தும் சேதநர்களின் (உயிர்களின்) உய்வுக்காக (வீடுபேற்றுக்காக) வினவிய பிராட்டிக்கு எம் பெருமான் உபதேசித்தது இத் துவய மந்த்ரம். கடவல்லி உபநிஷத்தில் இரு வேறிடங்களில் உள்ள இரு வாக்கியங்களை ஒன்றாக இணைத்து இம் மந்திரமாக்கிச் சேதநனை (உயிரை) உய்விப்பதற்காக திருமாமகளுக்கு (இலக்குமி பிராட்டிக்கு) உபதேசம் (அருளிச்) செய்தான் எம்பெருமான்.

உபாயம், உபேயம் என்னும் இரண்டு அர்த்தங்களை உடையதாய் இரண்டு வாக்கியங்களாக அமைந்துள்ள படியால் இதற்கு துவயம் (இரட்டை) என்ற பெயர் அமைந்தது. இது "மந்த்ர ரத்னம்" என்று புகழப்படும். நம் ஆசார்யர்கள் விரும்பி அநுஸந்தித்தது என்ற பெருமை உடையது.

"பெரிய பிராட்டியோடு நித்யமாகக் கூடியிருக்கும் நாராயணனுடைய இரு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகிறேன்" என்பது பூர்வ வாக்கியத்தின் (முதல் கண்டத்தின்) பொதுப் பொருள். "பெரிய பிராட்டியோடு சேர்ந்த நாராயணனுக்கு எல்லா அடிமைகளையும் அஹங்கார மமகார மின்றிச் செய்ய வேண்டும்" என்பது அடுத்த வாக்கியத்தின் (இரண்டாம் கண்டத்தின்) பொருள்.

## இ. சரம சுலோகம்

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:।।

கண்ணன் எம்பெருமான், பாரதப் போர்க்களத்தில் கலக்கமடைந்த அருச்சுனனுக்கு சொல்லும் முகமாக நம் அனைவருக்கும் உபதேசித்தான். அருச்சுனனின் சோகத்தைப் போக்குவதற்காகப் பின்பற்ற (அநுஷ்டிக்க) எளியதும், சொரூபத்திற்குப் (தன் நிலைக்குப்) பொருந்தியதுமான ப்ரபத்தி

(அல்லது சரணாகதி) உபாயத்தை இச்சுலோகத்தாலே உபதேசித்தான். "எல்லா தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப் பற்று" என்பது சுலோகத்தின் முற்பாதியின் பொருள். "நான் உன்னை எல்லா பாபங்களினின்றும் விடுவிப்பேன், கவலைப்படாதே" என்பது பிற்பாதியின் பொருள்.

**3. அருத்த பஞ்சகம்**

சம்சாரியான சேதநனுக்குத் தத்துவ ஞானம் பிறந்து உஜ்ஜீவிக்கும் போது, அர்த்த பஞ்சக ஞானம் உண்டாக வேண்டும் என்பது ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர் திருவாக்கு. அர்த்த பஞ்சகம் என்றால் ஐந்து அர்த்தங்கள் -- ஐந்து பொருள்கள். அவையாவன:

1. அடையப் படுகின்றவனான இறைவனைப் பற்றி அறிகை.
2. அடைகின்றவனான ஆத்மாவை (தன்னை) அறிகை.
3. இறைவனை அடையும் உபாயத்தை அறிகை
4. அந்த உபாயத்தால் பெறும் பேற்றை அறிகை
5. இறைவனை அடைய விடாமல் தடுக்கும் விரோதிகளைப் பற்றி அறிகை.

இவை முறையே பரஸ்வரூபம், ஜீவஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் என வட மொழியில் வழங்கப்பெறும்.

சகல வேதங்களும் தர்ம சாஸ்திரங்களும், இதிஹாஸங்களும், புராணங்களும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களும், ஆசார்யர்களின் அருளுரைகளும் இவ்வைந்து பொருள்களையே விளக்குகின்றன.

**பரஸ்வரூபம் (ஈச்வரஸ்வரூபம்)**

**1) பரத்துவமாவது:** பரமபதத்திலே(வைகுந்தத்திலே) அவாக்யநாதா: என்று எழுந்தருளியிருக்கிற ஆதியஞ்சோதி உருவான பரவாஸுதேவர்.

**2) வ்யூஹமாவது:** ஸ்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹார-கர்த்தாக்களான ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன அநிருத்தர்கள்.

**3) விபவமாவது:** ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள்.

**4) அந்தர்யாமியாவது:** ஸகல(அனைத்து) ப்ரவ்ருத்தி நிவிருத்திகளையும்

ஸதாவலோகநம் பண்ணிக் கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு. இது இரண்டு படி பட்டிருக்கும்:

*(அ) 'அடியேனுள்ளான்'*[1] என்றும், *'எனதாவி'*[2] என்றும் 'என்னுயிர்' என்றும் சொல்லும்படி ஆத்மாவுக்குள்ளும், *'அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து'*[3] என்றும் *'உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறிதி'*[4] என்றும் சொல்லுகிறபடி லக்ஷ்மிஸஹிதனாய், விலக்ஷண விக்ரஹயுக்தனாய் இதய கமலத்துக்குள் ஹார்தனாகவும் இருக்கும் நிலை.

*(ஆ)* ஸர்வ(அனைத்து) வஸ்துக்களிலும், அசேதனம், மற்றும் சேதனம் ஆகியவற்றுக்குள்ளும் உட்புகுந்து நிறைந்து தரித்து நிர்வஹிக்கும் அந்தர்யாமியாகவும் இருக்கும் நிலை.

**5) அருச்சாவதாரமாவது:**

*"தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம் தானே*
*தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்."*[5]

என்கிறபடி தனக்கென ஓருருவும், ஓர் பெயரும் இன்றிக்கே ஆச்ரிதர் உகந்த வடிவே வடிவாகவும், அவர்களிட்ட பெயரே பெயராகவும் ஸர்வஜ்ஞராய் இருக்கச் செய்தே அஜ்ஞனைப் போலவும், ஸர்வ சக்தனாய் இருக்கச் செய்தே அசக்தனைப் போலவும், அவாப்த ஸமஸ்த காமனாய் இருக்கச் செய்தே ஸாபேக்ஷனைப் போலவும், ரக்ஷகனாய் இருக்கச் செய்தே ரக்ஷ்யம் போலவும், ஸ்வஸ்வாமி பாவத்தை மாறாடிக்கொண்டு கண்ணுக்கு விஷயமாகும்படி ஸர்வ ஸுலபனாய்க் கொண்டு, கோயில்களிலும்,

---

*1. திருவாய்மொழி, 8.8.1.*

*2. மேற்படி, 2.3.4.*

*3. பெரியாழ்வார் திருமொழி, 5.2.10.*

*4. திருமாலை, 34.*

*5. முதல் திருவந்தாதி, 44.*

இல்லங்களிலும், தேச, கால, அவதி இன்றிக்கே[1] எழுந்தருளி இருக்கும் நிலை.

**2. ஜீவஸ்வரூபம்:**

***நித்யர்:***

அநந்தன், கருடன், விஷ்வக்ஸேநர் முதலானோர் இறைவனது பரம் வியூஹம் முதலான அனைத்து நிலைகளிலும் தொடர்ந்து அடிமை செய்பவர்கள், ஒரு நாளும் ஸம்ஸார பந்தம் இல்லாதவர்கள். ஈச்வர நியமனத்தால் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைப் பண்ண சக்தியுள்ளவர்கள்.

***முக்தர் :***

பகவத் அனுக்கிரஹத்தினால் ப்ரக்ருதி ஸம்பந்தம் அழிந்து, புண்யபாபங்கள் கழிந்து, பகவத் ஸ்வரூப ரூபகுண விபவங்களை அநுபவித்து, அவ்வனுபவம் உள்ளடங்காமையாலே வாயாரப் புகழ்ந்து வைகுந்தத்திலே களித்து ஆனந்திப்பவர்கள்.

***பத்தர்:***

ஸம்ஸாரத்தில் கட்டுண்டவர்கள். வேர்த்த போது குளித்தும், பசித்தபோது உண்டும், களைத்தபோது உறங்கியும், ஸம்ஸாரத்திலே மூழ்கி, பகவத் விமுகரான சேதநர்கள், தேஹத்தையே ஆத்மா என்று பொய்யறிவு கொண்டு, சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தங்களால் ஏற்படும் இன்பத்தை அனுபவித்தலே பெரிய சுகமென்று இருப்பவர்கள்.

**கேவலர்:**

சாஸ்திரங்களை அறிந்ததனால் ஞானம் ஏற்பட்டு ப்ரக்ருதி, ஆத்மா என்ற விவேகம் பிறந்து, ஆத்மானுபவம் ஸுகம் என்றும், ப்ரக்ருதி - துக்கம் என்றும் தெளிந்து, நித்யனாய், அப்ராக்ருதனாய் இருக்கும் ஆகாரத்தை அனுஸந்தித்து, இந்த அல்ப ரஸத்திலே கால் தாழ்ந்து பகவானைப் பிரிந்து, ஞான யோகத்திலே நிஷ்டனாய், ஆத்மாநுபவத்தையே புருஷார்த்தமாக

---

1. ஒப்பிடுக: கம்பராமாயணம் - 'காலமும் கணக்கும் நீத்தகாரணன்'.

அனுபவித்து, ஸம்ஸார ஸம்பந்தமும், பகவத் ப்ராப்தியும் இல்லாமல் எப்போதும் அசரீரியாய்த் திரிபவர்.

**முமுக்ஷுக்கள்:**

மோக்ஷத்திலே இச்சை உடையவர், ஸம்ஸார ஸம்பந்தம் அற்று, பகவானை அடைந்து கைங்கர்யம் செய்வதே சிறந்த புருஷார்த்தம் என்று அறிந்து அதை அடைய விரும்புபவர்கள், என முமுக்ஷுக்கள் இருவகையினர் உண்டு. கர்ம ஞான யோகங்களைப் படிக்கட்டுக்களாகக் கொண்ட பக்தியை உபாயமாகப் பற்றியவர்களும், ச்ரிய: பதியையே உபாயமாகக் கொண்ட ப்ரபத்தி நிஷ்டர்களும் ஆவர்.

**3. உபாய ஸ்வரூபம்**

**1) கர்மயோகம்:**

பகவத் ஆராதன ரூபமான யாக, யஜ்ஞாதிகள், பகவானுக்குச் சரீரமான பிராணிகளுக்கு உபகாரமாகச் செய்யும் தானங்கள், கிணறு-குளம் வெட்டுதல்,[1] சத்திரம் சாலை அமைத்தல், பஞ்சமஹாயஜ்ஞங்களைக் கொண்ட வர்ணாச்சிரம தர்மங்களாகிய இவற்றைப் பலனை எதிர் பார்க்காமல் பகவத் கைங்கர்யமாகச் செய்தல்.

**2) ஞான யோகம்:**

கர்மாநுஷ்டானத்தாலே பாபங்கள் கழிந்து மனம் நிர்மலமாக, வைராக்யம் தலையெடுக்கும். பதஞ்ஜலி யோகஸூத்திர முறையில் அஷ்டாங்க யோகத்தால் மானஸ ஸாக்ஷாத்காரம் பண்ண முயன்று, சுபாச்ரயமாக தியானிக்கப் புகுந்தால், எம்பெருமான் விலக்ஷண விக்ரஹத்துடன், லக்ஷ்மியுடன் கூடியவனாக இருதயத்தில் தோன்றி அருள்வான். இத் திவ்விய மங்கள விக்ரஹத்தை தைல தாரையைப்போல இடைவிடாமல் தியானித்தல் ஞான யோகம் எனப்படும்.

---

1. ஒப்பிடுக: ஸ்ரீமத்பாகவதம் -- "பூர்த்தேஷ்ட-தத்த-நியம-வ்ரததேவ விப்ர-குர்வர்ச்சநாதிபிரலம் பகவாந் பரேச:"

**3) பக்தியோகம்:**

தியானத்தால் நேரில் காணும் எம்பெருமானை, "சுயமுயற்சியின் பலன்" என்று உலர்ந்த இருதயத்தால் அனுஸந்திக்காமல், ஈர நெஞ்சோடு நெகிழ்ந்து, பிரேமபூர்வமாக, பரம போக்கியமாக அனுஸந்தித்தல் (திரும்பத்திரும்பக் கண்ணுறுதல்) பக்தியோகம் எனப்படும்.

**4) பிரபத்தி:**

கர்ம, ஞான, பக்தி யோகங்கள் நம்மால் அனுஷ்டிக்க அரிது என அறிந்து, தன் சொரூபத்துக்கு ஏற்ப, எம்பெருமான் இட்ட வழக்காய் இருத்தலை உணர்ந்து, மற்ற எல்லாவகையான உபாயங்களையும் ருசி வாசனைகளோடு விட்டு, வேறேதும் உபாயமின்றி, ஆகிஞ்சன்யம் (கைமுதலின்மை), அனன்னியகதித்துவம் (வேறுபுகலின்மை) ஆகிய வற்றைக் கைக்கொண்டு, எம்பெருமானையன்றி வேறு கதியின்மையைச் சொல்லி, திருவுடன் கூடிய திருமாலின் திருவடிகளையே பற்றி, பிராட்டியை முன்னிட்டு "நின்னருளாங் கதியன்றி மற்றொன்றில்லேன்" (அமிருதாஸ்வாதிநீ) என்றபடி இருத்தல்.

**5) ஆசார்யாபிமானம்:**

ஆசார்யன்(ஸத்-குரு) கருணையே வடிவானவன். சிஷ்யனுடைய உஜ்ஜீவனத்தை விரும்புபவன். திருத்திப் பணி கொள்ளும் இயல்பினன். ஆகவே ஆசார்ய ஸம்பந்தம் மோக்ஷத்துக்கே காரணமாயிருக்கும். ஈசுவரனையே உபாயமாகப்பற்றி, ஆசார்யன் அபிமானத்திலே ஒதுங்கி, ஆசார்யனிட்ட வழக்காயிருக்கை ஆசார்யாபிமானம் எனப்படும். ஆந்திரபூர்ணர் என்னும் வடுகநம்பியும், கோதை என்னும் ஆண்டாளும், மதுரகவி ஆழ்வாரும் இந்நிஷ்டை உடையவர்கள்.

**4.புருஷார்த்த ஸ்வரூபம்:**

புருஷர்களால் (ஜீவர்களால்) அருத்தித்து (மிகவும் வேண்டப் பட்டு) முழுமுயற்சியுடன் பெறப்படுவது புருஷார்த்தம், ஜீவாத்மாக் களுக்குரிய பலன்.

**தர்மம்:**

வர்ண ஆச்ரம தர்மங்களும், சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட செய்யத் தக்கவை, செய்யக் கூடாதவை என்னும் யாக-யஜ்ஞாதிகளும் தான தர்மங்களும் இதிலடங்கும்.

**அர்த்தம்(பொருள்):**

பகவதாராதனம் செய்வதற்கும், யாகாதிகள், பித்ரு கார்யங்கள், அதிதி உபசாரங்கள், குடும்பப்பாதுகாப்பின் பொருட்டும் தனம் தான்யம் முதலிய பொருள்களைத் தேடிச் சேர்த்தல்.

**காமம்:**

தாம் விரும்பிய இஹலோக இன்பமான வீடு, உறவு, புத்திரன் முதலியவைகளையும், சொர்க்கம் முதலான உலகங்களின் இன்பத்தையும் பெற்று அனுபவித்தல்.

**ஆத்மாநுபவம்:**

பிறப்பு மூப்பு இறப்புக்களிலிருந்து விடுபட்டு ஈசுவரனைத் தியானித்து, பிரக்ருதி ஸம்பந்தம் கழியப்பெற்று, ஆத்மதத்துவம் உள்ளவரை சரீரமற்றவனாய், பகவத் அனுபவத்தையும் இழந்து, தன்னைத்தானே அனுபவித்துக் கொண்டிருத்தல் கைவல்ய மோக்ஷம் என்னும் ஆத்மாநுபவமாகும்.

**பகவதநுபவம்:**

பகவத் கருணையாலே ஸத்ஸங்கம்(பெரியோர் கேண்மை) ஏற்பட்டு ஸம்ஸாரத்தில் அருசி பிறந்து, ஆசார்ய ஸமாச்ரயணம் பண்ணி ஆசார்யன் மூலமாக பகவானைச் சரணம் புகுந்து, புண்ய பாபங்கள் கழியப் பெற்று, ஸ்தூல சரீரம் விட்டு, ஸூக்ஷ்ம சரீரத்தோடே அர்ச்சிராதிகதியாலே சென்று விரஜையில் மூழ்கி, ஸூக்ஷ்ம சரீரத்தையும் வாசனை யோடேவிட்டு, அமானவகரத்தாலே தீண்டப்பட்டு, அப்ராக்ருத திவ்விய சரீரம் பெற்று, திவ்விய மாதர்களால் திவ்விய அலங்காரம் பெற்று, முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள, வைகுந்த மாநகர் புக்கு, திருமாமணி மண்டபம் சேர்ந்து, ஸ்ரீதேவி, பூமிதேவி, நீளா தேவி நாயகனாய், சேஷ பர்யங்கத்தில்

வீற்றிருக்கும் பரவாஸுதேவனால் கைகொடுத்து வரவேற்கப் பெற்று, மடியிலிருத்தப் பெற்று, க்ஷேமநலன்கள் விசாரிக்கப்பெற்று, ஸ்ரீ வைகுண்ட நாதனை நித்யானுபவம் பண்ணி, வழுவிலா அடிமைகள் செய்து, பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டு பாடுதல் முதலிய வழுவிலாவடிமைசெய்பவனாக இருக்கை பகவதநுபவம் எனப்படும்.

**5. விரோதி ஸ்வரூபம்:**

விரும்பியதற்குத் தடையாய் இருப்பது விரோதி எனப்படும்.

**ஸ்வரூப விரோதி:**

தேஹமே ஆத்மா என்னும் எண்ணம். பிறருக்கு அடிமையாதல், தான் ஈசுவரனுக்கு அடிமையல்ல, சுதந்திரன் என்ற நினைவுடன் இருத்தல்.

**பரத்துவ விரோதி:**

இதர தெய்வங்களை பரமபுருஷனோடு சமமாக நினைத்தல், பகவதவதாரங்களை மனுஷ்ய, விலங்குகளாக நினைத்தல், அருச்சாவதாரத்தை கல், மரம், உலோகம், சுதை, ஓவியம் என்று நினைத்தல், அருச்சைக்கு சக்தி இல்லை என்று நினைத்தல் ஆகியவை.

**உபாய விரோதி:**

ஈசுவரனே நேர் உபாயம் (வழி) என்பதை விட்டு, மற்ற வழிகளால் பலன் கிடைப்பதாக நினைத்தல்; சரணாகதியை எளிய, சிறிய வழி என்று குறைத்து நினைத்தல்; தான் செய்யும் நற்காரியங்களே பலன் பெறும் வழியாக நினைத்தல் - போன்றவையாகும்.

**புருஷார்த்த விரோதி:**

உலக இன்பமான, புத்திரன், மனைவி, வீடு, உறவு, நிலம், மாடு முதலிய செல்வங்களை சிறந்த பிரயோஜனமாக நினைத்தல், சுவர்கம் முதலிய போகங்களை பெரும் பேறாக நினைத்தல், பகவத் கைங்கர்யங்களைத் தன் மகிழ்வுக்காகச் செய்வதும், ஐம்புலஇன்ப விஷயங்களில் ஈடுபாடும் புருஷார்த்த விரோதிகளாகும்.

**ப்ராப்தி விரோதி:**

பகவத், பாகவத அபசாரங்களும், ஈசுவரன் அவனடியார்களைக் காணப் பொறுக்க மாட்டாமையும், அவர்களுக்கு தீங்கிழைப்பதுமான அஸஹ்யாபசாரங்களும் பெரிய பாப வினைகள் ஆகியவை. பகவத் அபசாரத்தைவிட பாகவத அபசாரம் மிகக் கொடியது.

இத்தகைய அர்த்த பஞ்சகம் எனப்படும் ஐம்பொருள்களைப் பற்றி நன்கு தெளியக் கற்றாலே, எந்த விரோதங்களும் வராதபடி வையத்தில் வாழ்வாங்கு வாழலாம். இந்த ஐம்பொருளை, 'பட்டர்' என்ற ஆசாரியர், திருவாய்மொழிக்கு இட்ட தனியன்பாட்டில், மிக்க அழகுடன், பொருட் செறிவுடன் இயற்றியுள்ளார்.

*மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்*
*யாழினிசை வேதத் தியல்.*

# ஆழ்வார்களும் திவ்ய தேசங்களும்

## பகுதி - 1

### 1. ஆழ்வார்கள்

திருமகள் கேள்வனான (லக்ஷ்மீ நாதனான) எம்பெருமான் பிரமகுருவாகி (ப்ரதமாசார்யனாய்), பிரம்மாவிற்கு வேதங்களை உபதேசித்து, பின் அவை நான்முகனிடமிருந்து அபஹரிக்கப்பட்டபோது மீட்டுக் கொடுத்தும், நான்முகனைக் கொண்டே சாத்திரங்களைப் பரவச் செய்தான். மஹரிஷிகளைக் கொண்டு மஹாபாரதம் ப்ரஹ்ம ஸூத்ரம் ஆகியவற்றை அருளிச் செய்தான். தானே அன்னம், மீன், ஹயக்ரீவன், நர-நாராயணன், ராமக்ருஷ்ணாதி அவதாரங்களைப் பண்ணி தத்துவ ஹித புருஷார்த்தங்களை உலகுக்கு உபதேசித்தான். ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்திரத்தைத் தானே வெளியிட்டான். இவ்வளவின்றி பராங்குச பரகாலாதிகளான ஆழ்வார்களாக ஒரு அபிநவ தசாவதாரம் செய்து, மேகங்கள் ஸமுத்ர ஜலமான உப்புநீரை வாங்கி, அதை எல்லோருக்கும் பயன்படும்படியான நன்னீராக உமிழுவது போல, நான்கு வேதங்களின் ஸாரமான உட்பொருளை அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் தமிழ்மொழியிலேயே நாலாயிரம் பாசுரங்களாலே வெளியிட்டு அருளினான்.

எம்பெருமானாலே நேரிடையாக ஒப்புயர்வற்ற வேதாந்த (அத்யாத்ம) ஞானத்தையும் பக்தியையும் நன்றாக அருளப் பெற்ற ஆழ்வார்கள், எம்பெருமானுடைய ஸ்வரூபம், திவ்விய மங்கள விக்ரஹம், கல்யாண குணங்கள், உபய விபூதிகள், திவ்விய தேசங்கள் இவைகளை நன்கு அனுபவித்து, ஆழ்ந்து, இவற்றால் உண்டான ஆனந்தம் உள்ளடங்காமல் தங்களுடைய அனுபவங்களை நாலாயிரம் இனிய பாசுரங்களாக அருளிச் செய்து, உலகத்தை வாழ்வித்தருளினார்கள். இக்கருத்தை

"அந்தமிலா ஆரணங்கள் நாலாய் நின்ற
அதன் கருத்தை ஆழ்வார்கள் ஆய்ந்தெடுத்து
செந்தமிழால் அருள் செய்த வகை தொகையும்
சிந்தாமல் உலகங்கள் வாழவென்று..." (பிரபந்தஸாரம், 18)

என ஸ்வாமி தேசிகன் வலியுறுத்துகிறார்.

செய்ய தமிழ் மாலைகள் தெளிய வோதித்
தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே
(அதிகார ஸங்கிரஹம், 1)

என ஸ்வாமி தேசிகன், 'அருமறைகள் தமிழ் செய்த' ஆழ்வார்களுக்கு ஈண்டு நன்றி நவில்கிறார்.

அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த
ஆழ்வார்கள் பன்னிருவர்.[1]

என்றும்,

பொய்கையார் பூதத்தார் பேயார், புகழ்மழிசை
ஐயன் அருள் மாறன் சேரலர் கோன் - துய்யபட்ட
நாதன் அன்பர் தாள் தூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு.[2]

என்றும், மணவாள மாமுனிகள் அழ்வார்கள் பற்றிய விளக்கங்களை அருளிச் செய்துள்ளார்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாண் ஆழ்வார் மற்றும் திருமங்கையாழ்வார், ஆகியோர் அருளிச் செய்த திருமொழிகள் பிரபந்தங்கள் எனப் போற்றப்படுகின்றன. பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு தொடங்கி திருமங்கையாழ்வார் அருளிய பெரியதிருமடல் வரை 24 பிரபந்தங்களும், நாலாயிர திவ்விய பிரபந்தம் என்னும் தொகுதியில் அடங்கியுள்ளன. அதன் பட்டியல் பின்வருமாறு:

---

1. உபதேச ரத்தின மாலை, 5.
2. மேற்படி, 4.

## பாடல்கள்

### 1. முதலாயிரம்

| | |
|---|---|
| 01. திருப்பல்லாண்டு | 12 |
| 02. பெரியாழ்வார் திருமொழி | 461 |
| 03. திருப்பாவை | 30 |
| 04. நாச்சியார் திருமொழி | 143 |
| 05. பெருமாள் திருமொழி | 105 |
| 06. திருச்சந்த விருத்தம் | 120 |
| 07. திருமாலை | 45 |
| 08. திருப்பள்ளியெழுச்சி | 10 |
| 09. அமலனாதிபிரான் | 10 |
| 10. கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |

### 2. திருமொழியாயிரம்

| | |
|---|---|
| 01. பெரிய திருமொழி | 1084 |
| 02. திருக்குறுந்தாண்டகம் | 20 |
| 03. திருநெடுந்தாண்டகம் | 30 |

### 3. இயற்பா ஆயிரம்

| | |
|---|---|
| 01. முதல் திருவந்தாதி | 100 |
| 02. இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 03. மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 04. நான்முகன் திருவந்தாதி | 96 |
| 05. திருவிருத்தம் | 100 |
| 06. திருவாசிரியம் | 7 |
| 07. பெரிய திருவந்தாதி | 87 |
| 08. திருவெழுகூற்றிருக்கை | 1 |
| 09. சிறிய திருமடல் | 1 |
| 10. பெரிய திருமடல் | 1 |

### 4. திருவாய்மொழி ஆயிரம்

| | |
|---|---|
| 01. திருவாய்மொழி | 1102 |

## பகுதி - 2

### *2. திவ்ய தேசங்கள்*

*ச்ரிய:பதியான (மலர்மகள் மணாளனான) எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன் ஜகத் காரணனாகவும், ஜகத் ரக்ஷகனாகவும் இருக்கிறான். "அந்தர் பஹிஸ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:"* [1] *என்று வேதத்தில் நிர்தாரணம் செய்தபடியும், ஸ்வாமி ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீபாஷ்யத்தில் சரீர-சரீரி பாவத்தால் நிச்சயித்தபடியும், இம் மண்டலத்தை ரக்ஷிக்கிறான்.*

*பரித்ராணாய ஸாதூனாம் விநாசாயச துஷ்க்ருதாம் |*
*தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||*

*(ஸ்ரீமத்பகவத்கீதை, 4, 8)*

*என்று யுகந்தோறும் வந்து அவதரிக்கிறான். அவ்வெம்பெருமான் தன்னுடைய ஐந்து நிலைகளான, 1. பரம், 2. வியூஹம், 3. விபவம், 4. அந்தர்யாமி, 5. அர்ச்சை ஆகியவற்றைக் கொண்டு உபய விபூதிகளையும் (நித்ய விபூதி மற்றும் லீலா விபூதி) ஆள்பவனாய்த் தன்னை யண்டியவர்களைப் பாதுகாக்கிறான் .*

*முதலாவது நிலையான* **பரத்துவத்தில்** *அனைத்துக்கும் அடிப்படையாய் உள்ள எம்பெருமான் "ஸதா பச்யந்தி ஸூரய:" என்கிற கணக்கிலே பரவாசுதேவனாக ஸ்ரீபூமிநீளாஸமேதனாய், நித்ய முக்தர்களுடன் கூடியவனாய் எழுந்தருளி யிருக்கிறான். ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்கள் நிறைந்து பகவானாய்த் தெளிவிசும்பில் தெற்றென விளங்குகிறான்(ப்ரகாசிக்கிறான்).*

*இரண்டாவது நிலையான* **வியூஹத்தில்** *நான்கு மூர்த்திகளாகப் பிரிகிறான். வியூஹவாசுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன் மற்றும் அநிருத்தன் என நான்கு ரூபங்களாகிறான். பரவாசு தேவனுக்கும், வ்யூஹ*

---

*1. நாராயண ஸூக்தம், 5.*

வாஸுதேவனுக்கும் குணாதிகளில் மாறுபாடு இல்லை. மற்ற மூவரிடத்தில், ஆறு குணங்கள் அவரவர் மேற்கொண்ட செயல்களுக்கு ஏற்ப இரண்டு இரண்டாகப் பிரிந்து காணப்படுகின்றன.

பரமும் வ்யூஹமும் ப்ராக்ருத சரீரத்துடன் சென்று சேவிக்க இயலாதவை. மறுமைக்கு மருந்தாக இருப்பவை.

மூன்றாவது நிலையான **விபவம்** என்பது ஸ்ரீராமன் ஸ்ரீகிருஷ்ணன் முதலான அவதாரங்களைக் குறிக்கும். "ஆதியஞ்சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த..."[1] பிறப்பொடு மூப்பு ஒன்றில்லாதவனான எம்பெருமான் தன்மைகளைக் கொண்டவை. விபவங்கள் காட்டாற்று வெள்ளம் போல், அந்தந்த காலகட்டங்களில் இருந்த மஹான்களாலும் மகரிஷிகளாலும் மட்டுமே அனுபவிக்கப்பட்ட அவதாரவைபவங் களாகும்.

*அன்னமும், மீனுருவும் ஆளரியும் குறளும்*
*ஆமையும் ஆனவனே... (பெரியாழ்வார் திருமொழி, 1.6.11)*

நான்காவது நிலையான **அந்தர்யாமித்வம்** என்பது எம்பெருமான் சேதநர்களின் இதய கமலத்திலுள்ளே எழுந்தருளி இருக்கும் இருப்பாகும்.

ஐந்தாவது நிலையான **அர்ச்சாவதாரம்** என்பது "தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே..." என்ற பொய்கையாழ்வார் திருவாக்கின்படி அடியார்கள் எதைத் தமக்கு திருமேனியாகக் கொள்கின்றனரோ, அதையே தனக்கு வடிவமாகக் கொண்டு எம்பெருமான் எழுந்தருளிய நிலை. பொய்கையார் முதலாக திருமங்கையாழ்வார் வரை தத்தம் அருளிச் செயல்கள் அனைத்திலும் அர்ச்சாவதார ஆனந்த அனுபவத்திலே திளைத்த வெளிப்பாட்டைக் காட்டினர்.

திருமங்கை மன்னன், தம் சரம பிரபந்தமான திருநெடுந் தாண்டகத்தில், அர்ச்சாவதார அழகில் ஈடுபட்டு, 'பின்னானார் வணங்கும்

---

1. திருவாய்மொழி, 3.5.5.

சோதி...'[1] என்றருளிச் செய்தார். அர்ச்சை பற்றுவதற்கு எளிதாக இருக்க, அதை விட்டு பரத்துவத்தை நாடுவதில் என்ன பயன்? என்ற கருத்து வெளிப்பட, "ஏரார் முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே..."[2] என்று மடலூர்தலில் இழிந்தார்.

'இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்...'[3] என்று தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் அர்ச்சையின் மகிமையை சிறப்பித்தார்.

> நிரந்தரம் நிர்விசதஸ் த்வதீயம்
> அஸ்ப்ருஷ்ட சிந்தாபதம் ஆபிரூப்யம் |
> ஸத்யம் சபே வாரணசைலநாத
> வைகுண்டவாஸே'பி ந மே'பிலாஷ: || (வரதராஜ பஞ்சாசத், 50)

என்று மோக்ஷத்தில் கிடைக்கும் ஆனந்தானுபவம், அர்ச்சாவதாரத்தின் திருமேனி அழகில் ஈடுபடுவதனால் இங்கே கிடைக்கிறது. ஆகவே மோக்ஷவாஸத்தை அடையத் தமக்கு விருப்பமில்லை என்றருளிச் செய்கிறார் ஸ்வாமி தேசிகன்.

ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அருச்சைத் திருமேனியின் பேரழகைக் கண்டு, பலகாலம் அனுபவித்து, அதனால் ஏற்பட்ட போக்குவீடாக பலப்பல பிரபந்தங்கள் இயற்றினர். அர்ச்சாவதாரத் திருமேனியில் ஈடுபட்டபடியால் ஆழ்வார் ஆசார்யர்களுக்கு ஏற்றம், பரம பாகவதர்களான ஆழ்வாராதியரும் ஆசார்ய ஸார்வபௌமர்களும் அனுபவிக்கின்ற பெருமை பெற்றபடியால் எம்பெருமானுக்கு ஏற்றம்.

எம்பெருமான் தன்னை ஆச்ரயித்தவர்களை உஜ்ஜீவிப்பதற்காக அர்ச்சாவதார திருமூர்த்திகளாய், ஆஸேது ஹிமாசலம் கோயில் கொண்டு பலப்பல ஸ்தலங்களில் எழுந்தருளியுள்ள நிலைகளை ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

---

1. திருநெடுந்தாண்டகம், 10.
2. சிறிய திருமடல், கண்ணி: 8.
3. திருமாலை, 2.

அ. எவருடைய முயற்சியுமில்லாமல், தாமாகவே எம்பெருமான் ஆவிர்பவித்த திவ்விய தேசம் "ஸ்வயம் வ்யக்தம்" எனப்படும்.

ஆ. ஸித்த புருஷர்களான ஸனகாதி யோகிகளுக்காக எம்பெருமான் ஆவிர்பவித்தது 'ஸைத்தம்' எனப்படும்.

இ. ம்ருகண்டு, ப்ருகு முதலான ரிஷிகளின் தவத்திற்கிரங்கி எம்பெருமான் தோன்றி, அவர்களை அனுக்ரஹித்து, அவர்களின் வேண்டுகோளின் பேரில் அது முதல் நித்ய ஸாந்நித்யம் கொள்வது 'ஆர்ஷம்'எனப்படும்.

ஈ. எம்பெருமான் விபவாவதாரம் எடுத்த இடங்களையும், அவரது அவதாரத்துடன் தொடர்புடைய இடங்களையும் 'வைஷ்ணவம்' என்பர்.

உ. 'கோயிலில்லா ஊரிலே குடியிருக்க வேண்டாம்' என்ற முதுமொழிக்கிணங்க அக்ரஹார ப்ரதிஷ்டை செய்யும் முன்பு ஹரி ப்ரதிஷ்டை செய்யும் வழக்கப்படி அமைந்த க்ஷேத்ரங்கள் 'மாநுஷம்' எனப்படும்.

இவைகளிலும் பல உட்பிரிவுகளுண்டு, பௌராணிகம் என்றும், ஆழ்வார்களின் அருளிச் செயலைப் பெற்றது என்றும், ஆசார்யர்கள் உகந்தருளியது என்றும் பல வகைகளுண்டு. மற்றும் சில மிகவும் பிரபலமான அபிமான ஸ்தலங்களாகவும் காணப்படுகின்றன. அவற்றில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான்கள் மிகுந்த வரப்ரஸாதிகளாகவும் இருக்கின்றனர். அங்குள்ள திருமேனிகள் சாஸ்திரப்படி ப்ரதிஷ்டை செய்யப்பட்டவை தாம். ஆயினும் அவைகள் எல்லாம் திவ்ய தேசங்கள் என்று கருதப்படுவதில்லை.[1] திவ்விய தேசம் என்ற பட்டம் பெறுவதற்கு அந்தத் திருக்கோயிலில் குடி கொண்டிருக்கும் எம்பெருமானைக் குறித்து ஆழ்வார்களில் ஒருவராவது பாடியிருக்க வேண்டும். அனாதியானதும், அபௌருஷேயமானதுமான நான்கு வேதங்களை நித்ய பாராயணம் செய்தாலும் அந்தத் திருத்தலம் திவ்விய தேசமாகிவிட முடியாது.

பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்[2]

---

1. எம். ஸ்ரீநிவாஸன் (மாண்புமிகு நீதிபதி, இந்திய உச்ச நீதி மன்றம், புது டில்லி) "அணிந்துரை" - 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச விராஜமான திவ்ய தம்பத்யோ: நாமாவளி: லீலாம்ருதம்.

2. திருவாய்மொழி, 1.5.11.

தொண்டர்க்க முதுண்ணச் சொல்மாலைகள்[1]

பார் பரவு இன்கவி பாடும்[2]

என்றபடி தெளியாத மறைநிலங்கள் தெளிய வைப்பதாகவும், தத்துவ, ஹித, புருஷார்த்தங்களை உணர்த்துவதாகவும், எம்பெருமானை உள்ளபடியே அனுபவித்து, அவ்வனுபவம் உள்ளடங்காமல் ஆனந்தப் பெருக்கில் தோன்றிய ஈரச் சொற்களால் பாடப் பெற்ற காரணத்தினாலேயே திவ்விய தேசம் என்று ஏற்றம் பெற்ற திருத்தலங்கள் 108.

ஈரிருபதாம் சோழம் ஈரொன்பதாம் பாண்டி,
ஓர் பதின்மூன்றாம் மலை நாடு ஓர் இரண்டாம் - சீர்நடுநாடு
ஆறோடு ஈரெட்டுத் தொண்டை அவ்வட நாடு ஆறிரண்டு
கூறு திருநாடு ஒன்றாக் கொள். (108 திருப்பதி அந்தாதி, 6)

திவ்விய தேசங்களை மேற்படி பாசுரக் கணக்கின் படி பகுத்தறியலாம்.

| | |
|---|---|
| சோழநாடு | 40 |
| பாண்டிய நாடு | 18 |
| மலை நாடு | 13 |
| நடு நாடு | 2 |
| தொண்டை நாடு | 22 |
| வடநாடு | 12 |
| திரு நாடு | 1 |
| மொத்தம் | 108 |

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களும், மற்ற யோகிகளும் கண்டு களித்து வழிபட்ட திருக்கோயில்களே நமக்கு மிகவும் உகந்தவை. நாம் எம்பெருமானை தரிசித்து, மகிழ்ந்து, துதித்து, சரணடைந்து, குற்றேவல் செய்து, நல்வாழ்வு என்னும் மேன்மை பெற்று, இறுதியில் கிடைத்தற்கரிய பேரின்ப வீடுபெற இத்திருக்கோயில்கள் வழிகாட்டுகின்றன. திவ்விய ஸூரிகளால் (ஆழ்வார்களால்) பாடல்பெற்ற 108 திருப்பதிகளில் திருப்பாற்கடல் மற்றும் திருப்பரமபதம் என்ற இரு திருத்தலங்களை இவ்வுலகோர் இங்கேயே காண்பதற்கில்லை.

---

1. திருவாய் மொழி, 9.4.9.
2. மேற்படி, 7.9.5.

எம்பெருமானுடைய திவ்ய ஆத்ம ஸ்வரூபம், அவனுடைய திவ்ய திருக்கல்யாண குணங்கள், இரண்டையும் விட அவன் திவ்விய மங்கள விக்ரஹம் எனப்படும் திவ்விய திருமேனியே சிறந்தது என்று நம் முன்னோர் மொழிவர். எம்பெருமானின் திவ்விய கல்யாண குணங்களையும் திவ்விய ஆத்ம ஸ்வரூபத்தையும் அறிய முடியாது என்ற கருத்தை முன்னிட்டுப் பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை,

ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாச்ரயமான (ஸ்வரூபத்திலிருக்கிற)
குணங்களும் ப்ரகாசமாய் நிரதிசய போக்யமாய், காளமேக
நிபச்யாமளமாய் இருக்கும் வடிவு - அவனுடைய திருமேனி
தான் காட்ட வல்லது.

என்று அர்ச்சையின் ஏற்றத்தை அழகுற விளக்குகிறார்.

ஸ்ரீபௌஷ்கர ஸம்ஹிதை,

"ஆபீடாத் மௌலிபர்யந்தம் பச்யத: புருஷோத்தமம் |
பாதகாந்யாசு நச்யந்தி, கிம் புனஸ்தூபபாதகம் ||"

எம்பெருமான் திருமேனியை ஸேவித்த மாத்திரத்திலேயே காம க்ரோதாதிகள் அழியும், கெட்ட எண்ணங்களும், கோணல் புத்தியும், கெட்ட முடிவுகளும் நாஸ்திக வாதம் முதலியனவும் தொலையும் என்று பயனைக் காட்டுகிறது.

திருமகள்கேள்வனான எம்பெருமான் கரையில்லாக் கருணையினால், மிக அழகிய வடிவுடன்,

அம்பஸ்ய பாரே புவநஸ்ய மத்யே
நாகஸ்ய ப்ருஷ்டே மஹதோ மஹீயான் |
சுக்ரேண ஜ்யோதீகும்ஷி ஸமநுப்ரவிஷ்ட:
ப்ரஜாபதிச் சரதி கர்ப்பே அந்த: ||

என்று தைத்திரீய உபநிஷத்தில்(4.1) எடுத்துரைக்கப்பட்டபடியும்,

"பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணம் உதச்யதே|
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவ அவசிஷ்யதே |
ஸர்வம் பூர்ணம் ஸஹோம் ||"

என்று கடவல்லி காண்டத்தில் காட்டியுள்ள படியும்,

*விண்மீதிருப்பாய்! மலை மேல் நிற்பாய் ! கடல் சேர்ப்பாய்!*
*மண் மீதுழல் வாய்! இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்!*
*எண் மீதியன்ற புற அண்டத்தாய்! என தாவி*
*உண் மீதாடி யுருக்காட்டாதே யொளிப்பாயோ?*

*(திருவாய்மொழி, 6.9.5.)*

*என்று பிரபந்த ஜன கூடஸ்தரான ஆழ்வார் திருவாக்குப்படியும், ஐந்து நிலைகளில் எழுந்தருளியுள்ளபடியை வேத ஆகமங்களும் அருளிச் செயல்களும் விளக்குகின்றன. அவற்றில் சிலா (கல்), காஷ்ட்டா (மரம்), சித்ரபடம் (சித்திரங்கள்), ஸுதா (சுண்ணாம்பு), பஞ்சலோஹம் (5 உலோகக்கலவை), ரேகா (கோடுகளால் உருவானது), யந்த்ரம் (தகடுகளில் சக்தியை வருவித்தல்), ப்ருதிவீ (மண்), ஜலம் (நீர்-கும்பதீர்த்தம்), வஹ்நி (யக்ஞ, ஹோமாதிகள்), வாயு (காற்று) முதலியவற்றில் பூரணமாக எழுந்தருளுகிறான்.*

*தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே*
*தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் - தமருகந்து*
*எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே*
*அவ்வண்ணம் ஆழியானாம்.*

*(முதல் திருவந்தாதி, 44)*

*நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும்*
*நீள் கடல் வண்ணனே... (திருவாய்மொழி, 3.6.9.)*

*என்றபடி அவன் உகந்தருளும் அருச்சாவதாரம் கொண்டு திருக் கோயில்களில் சேவை சாதிக்கும் வடிவே கலியுகத்தில் மானிடர் பற்றுவதற்கு ஏற்றம் உடையது. இதையே நம்முன்னோர்,*
*"அங்குத்தை வாசம் ஸாதனம்*
*இங்குத்தை வாசம் ஸாத்தியம்" என்பர்.*

பூதத்தாழ்வார்,

"மதிக்கண்டாய் நெஞ்சே மணிவண்ணன் பாதம்
மதிக் கண்டாய் மற்றவன் பேர் தன்னை..."[1]

என்றருளினார். அயர்வறும் அமரர்களால் தொழப்படும் அதிபதி, நமக்கு மயர்வற மதிநலம் அருளியதால், உயர்வற உயர்நலமுடையவனின் துயரறு சுடரடியை தொழுது எழு மனமே! என்று வகுளாபரணரான நம்மாழ்வார் தம் முதல் திருவாய்மொழியில், பரப்பிரம்மமான எம்பெருமானின் திருமேனி அழகைக் குறிக்குமிடத்தே, "துயரறு சுடரடி..." என்று திருவடியைக் காட்டி, திருமேனியையும் சொல்லி, நமக்குப் பற்ற வேண்டிய இடம் திருவடிகளே என்று சுட்டிக்காட்டுகிறார்.

எம்பெருமானின் திவ்விய மங்கள விக்கிரஹம் என்னும் சுபாச்ரயத் திருமேனியுடன், எம்பெருமானின் திருக்கோலம் -- நின்ற திருக்கோலம், வீற்றிருந்த திருக்கோலம், நடந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம், ஆகியவையும், எம்பெருமான் நோக்கும் திசை, தீர்த்தங்கள், கோயில் விமானங்களின் திருநாமம், இவற்றோடு பெருமாள் (மூலவர் - உற்சவர்), நாச்சிமார்களின் திருநாமங்கள், திருத்தலங்களைப் பற்றின விசேஷங்கள், திருக்கோலங்களின் விசேஷ அம்சங்கள், அத்தலங்களில் நடந்த சில விசேஷ பகவத் வைபவங்கள் உள்பட அனைத்தும் நமக்கு மிகவும் அவசியமானதாகும்.

'வலம் செய்து வைகல் வலம் கழியாதே...'

(திருவாய்மொழி, 2.10.8)

என்ற பாசுரத்திற்கு, நஞ்சீயர் தம் உரையில், திருநறையூர் அரையர் விஷயத்தில் அருளியபடி திருக்கோவிலில் பகவான் மட்டுமல்லாமல் அவன் திருக்கோவில் புஷ்கரிணி மற்றைய அவன் செய்த லீலைகள் எல்லாமே நமக்கு அனுபவிக்க தக்கவைதான்.

---

1. இரண்டாம் திருவந்தாதி, 51.

திவ்விய தேசங்களான 108 திருப்பதிகளைப் பாடிய திருவரங்கத்து அமுதனார், நாலாயிரப் பாசுரப்படி - 108 திருப்பதிக் கோவை என்ற நூலின் இறுதியில்

சோழ மண்டலம் நாற்பத்திரண்டுடன்
துய்ய பாண்டி பதினெட்டுஞ் சொல்லியே
வாழுமா மலையாளம் ஈரேழுடன்
மன்னு வேங்கடம் வாழ் தொண்டை நாட்டுடன்
ஏழு மூன்றும் இரண்டுடன் சொல்லியே
இதன் வடக்குப் பதினொன்றும் ஓதியே
ஆழியான்பதி நூற்றெட்டும் ஓதுவார்
அன்று செய்வினை அன்றே அகலுமே.

என்ற பாட்டில் சோழநாட்டின் எண்ணிக்கை 42 எனக் காட்டியுள்ளார். ஆயினும் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும், கலித்துறை அந்தாதி ஆசிரியரும் (பெயர் தெரியவில்லை) சோழநாட்டு எண்ணிக்கையை 40 என்றே கொண்டுள்ளனர்.

108 திருப்பதி அந்தாதியில், பிள்ளை பெருமாள் ஐயங்காரின் திவ்விய தேசக் கணக்கின் படி,

"ஈரிருபதாம் சோழம் ஈரொன்பதாம் பாண்டி...."

என சோழதேசம் 40 ஆக உள்ளது. மேலும் 108 திருப்பதிக் கலித்துறை அந்தாதியில்,

வருஞ் சோழ மண்டலத் தெண்ணைந்து; பாண்டிய மண்டலத்தில்
தரும் பதினெட்டு; இரண்டேழ் மலை நாட்டினில்; சார் நடு நாட்டு
இரும்பதி ஓரிரண்டாம்; தொண்டை நாட்டில் இருபத்திரண்டு
அரும்பதி யாறிரண்டுத் தரம் நூற்றெட்டு மாந்தொகையே.

எனவும் உள்ளன.

108 திருப்பதி பெருமாள் கோவை ஆசிரியர் (பெயர் தெரியவில்லை) விண்ணகரத்திற்கும் சித்திரகூடத்திற்கும் இடையில் "பொன் அன்ன திருமுட்டத்து ஆதிவராகப் பெருமான்" எனத் திருமுட்டத்தைச் (ஸ்ரீமுஷ்ணம்) சேர்த்து சோழநாடு 41 எனக் கொண்டார்.

108 திவ்விய தேசங்களில் 96 வகையான விமானங்கள் வடிவமைக்கப் பட்டுள்ளன.[1] ஆகம சாஸ்த்திரத்தில் கூறப்பட்ட அனைத்து விமானங்களும் முக்கியமானவைகள் தான் என்றாலும் கீழ்க்கண்டவைகளே மிக முக்கியமானவை எனலாம்.[2]

1. ப்ரணவாக்ருதி விமானம்
2. சுத்தஸத்வ விமானம்
3. ககநாக்ருதி விமானம்
4. வைதிக விமானம்
5. ஸௌந்தர்ய விமானம்
6. உத்பலாவர்த்த விமானம்
7. புஷ்கலாவர்த்த விமானம்
8. சஞ்சீவி விக்ரஹ விமானம்
9. புண்ய கோடி விமானம்
10. ரம்ய விமானம்
11. விமலாக்ருதி விமானம்
12. தாரக விமானம்
13. வேத சக்ர விமானம்
14. அஷ்டாங்க விமானம்
15. ஸ்ரீகர விமானம்
16. முகுந்த விமானம்
17. விஜயகோடி விமானம்
18. தப்த காஞ்சன விமானம்
19. சிம்மாக்ர விமானம்
20. ஹேமகூட விமானம்

விமானம் என்பது, மூலஸ்தானமான கர்பகிரகத்திற்கு மேல் சிற்ப சாஸ்திர விதிகளுக்கு உட்பட்டு அமைக்கப்பட்ட கோபுரம் ஆகும். இதில் அஷ்டாங்க விமானம் என்பது பரமபதத்தில் அமைந்துள்ள விமானத்தின் அமைப்பாகும் என்பதையும், ப்ரணவாக்ருதி விமானம் என்பது தேவர்கள் அமைத்துத் தொழும்.

---

1. நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - பின் இணைப்பு - 3, ப-175 திருவேங்கடத்தான் திருமன்றம் - 1987.

2. ஆ. எதிராஜன், 108 வைணவ திவ்ய தேச ஸ்தல வரலாறு, ப- 21.

தலங்களில் உள்ள விமானத்தின் அமைப்பு என்பதையும், ஆகம நூல்கள் விவரிக்கின்றன. 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்பது நம் ஆன்றோர்களின் வாய்மொழி.

108 திவ்ய தேசங்களில் எம்பெருமான் பலவகைக் கிடந்த திருக்கோலங்களில் சேவை சாதிக்கிறான். திருமாலின் சயனத் திருக்கோலங்கள் 10 (பத்து)வகைப்படும். அவையாவன:

1. ஜல சயனம்
2. தல சயனம்
3. புஜங்க சயனம்
4. உத்யோக சயனம்
5. வீர சயனம்
6. போக சயனம்
7. தர்ப்ப சயனம்
8. பத்ர சயனம்
9. மாணிக்க சயனம்
10. உத்தான சயனம்

ஒரே சன்னிதியில் நின்ற, இருந்த, கிடந்த என்ற மூன்று திருக்கோலங்கள் அமைவதுண்டு. அவ்வாறு அமைந்த பல ஸ்தலங்களில் சில: மதுரை கூடலழகர், திருநீர்மலை, திருக்கோட்டியூர், திருவல்லிக்கேணி ஆகியவை.

108 திவ்விய தேசங்களில் ஆழ்வார்களால் பாடல் பெற்ற திருத் தலங்களின் எண்ணிக்கை பகுப்பு பின் வருமாறு:

| ஆழ்வார் | திவ்ய தேசங்கள் |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 6 |
| 2. பூதத்தாழ்வார் | 13 |
| 3. பேயாழ்வார் | 15 |
| 4. திருமழிசையாழ்வார் | 17 |
| 5. நம்மாழ்வார் | 37 |
| 6. குலசேகராழ்வார் | 9 |
| 7. பெரியாழ்வார் | 18 |
| 8. ஸ்ரீ ஆண்டாள் | 11 |
| 9. தொண்டரடிப் பொடியாழ்வார் | 1 |
| 10. திருப்பாணாழ்வார் | 3 |
| 11. திருமங்கையாழ்வார் | 86 |

*ஆழ்வார்கள் பன்னிருவரில், மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரையன்றி, "வேறொன்றும் நானறியேன்" என்று கண்ணிநுண் சிறுத்தாம்பு(11 பாசுரங்கள்) என்னும் பதிகத்தைப் பாடியருளினார்.*

*இம் முனைவர்பட்ட ஆய்வேட்டு முக்கியத் தலைப்பின் படி, திருக்குடந்தை (கும்பகோணம்) பற்றிய ஆய்வை அடுத்த இயலில் காண்போம்.*

இயல் - 3

## திருக்குடந்தை - ஓர் அறிமுகம்

108 திவ்விய தேசங்களில் மிக அதிக அளவில் 40 திவ்விய தேசங்களைத் தன்னகத்தே கொண்டது சோழ நாடு. செழித்தோங்கிய செந்நெல் வயல்களினூடே செம்மாந்து நிற்கிறது சோழநாடு. "ஊரெனப்படுவது உறையூர், நாடெனப்படுவது சோழநாடு"[1] என்பர். சோழநாட்டுத் திருப்பதிகள் யாவும் தரையோடு தரையாக பெரும்பாலும் ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டவை. பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் பெரும்பாலும் இரண்டடுக்கு, மூன்றடுக்கு எனச் சொல்வது போல், இரண்டு மூன்று தளங்கள் உடையன. உதாரணமாக, கூடல் மாநகரில் (மதுரையில்), முதல் தளத்தில் வீற்றிருந்த திருக்கோலத்தில் வியூக சுந்தரராஜனாகவும், இரண்டாவது தளத்தில் நின்ற திருக்கோலத்தில் சூரிய நாராயணனாகவும், மூன்றாவது தளத்தில் பள்ளி கொண்ட பெருமாளாகவும் எம்பெருமான் காட்சியருளுகிறார்.

திருக்கோட்டியூரில் முதல் தளத்தில் சயனத்திருக்கோலத்தில் உரகமெல்லணையான் என்கிற பாற்கடல் வண்ணனாகவும், இரண்டாவது தளத்தில் நின்ற நாராயணனாகவும், மூன்றாவது தளத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் பரமபத நாதனாகவும் எம்பெருமான் காட்சி யருளுகிறார். இது போன்ற அடுக்குத்திருப்பதிகள் சோழநாட்டில் இல்லை என்று சொல்லலாம்.

---

1. பகவத்விஷயம், ஈட்டின் தமிழாக்கம், தொகுதி 9.

பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் மலை, கடல், ஆறு என்ற மூவகை இயற்கைச் சூழ்நிலைகளில் அமைந்துள்ளன.[1] எடுத்துக்காட்டாக, திருமாலிருஞ்சோலை எம்பெருமான் சோலைசூழ் மலை பிரதேசத்திலும், திருப்புல்லாணி தர்பசயனப் பெருமாள் கடற்கரையிலும், ஆழ்வார் திருநகரியின் பொலிந்து நின்ற (ஆதிப்பிரான்) பிரான் தாமிரபரணி ஆற்றங்கரையிலும் என்று இயற்கையின் மூன்று பிரிவுகளின் அரவணைப்பில் எம்பெருமான் காட்சியருளுகிறார்.

ஆனால் சோழநாட்டு எம்பெருமானுக்கோ காவிரிக்கரையே கிடக்கை, காவிரிக்கரையே கிடக்கினும் தெவிட்டாத தீஞ்சுவை கனிகளென்றுவிளங்கும் திருமங்கை மன்னனின் திவ்ய மங்களாசாசனத்தில் திளைத்திருப்பவர்கள் அரங்கனோடு, அழகு பொருந்திய ஆதனூர் ஆண்டளக்கும் ஐயன், திருமங்கையாழ்வாரோடு உரையாடி மகிழ்ந்த இந்தளூரான் (மாயவரம்), திருமழிசை ஆழ்வாருக்குக் கட்டுப்பட்ட ஆராவமுதன், பேரழகுப் பொலிவில் திகழும் தில்லைநகர்த் திருச்சித்திரக் கூடத்தான் (சிதம்பரம்), உலகளந்த தாடாளன் (சீர்காழி), ஆனைக்கு அருளிய திருக் கண்ணன் கவித்தலத்தான், ஜடாயு மோட்சம் நல்கிய திருப்புள்ளம்பூதங்குடி வல்வில்ராமன், ஆமருவிநின்ற தேரழுந்தூர் கோபாலன், வைணவ இலச்சினை பொறிக்க முன்நிற்கும் நறையூர் என்று இத்தன்மையனான பெருஞ்சக்தி படைத்த எம்பெருமான்களோடு நிற்பதோடன்றி, இதற்கெல்லாம் திலகமிட்டாற்போல் திவ்வியப் பிரபந்தம் மிளிரும் திருநாங்கூர் திருப்பதிகள் என்று அழைக்கப்படும், 11-திவ்ய தேசங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது சோழ நாடு.

இயற்கை எழிலோடு எழுந்தருளியுள்ள எம்பெருமான்கள் சோழநாட்டில். எங்கு நோக்கினும் பசுமையான வயல்கள் சூழ இளந்தென்றல் வீச, பறவையினங்கள் கானம் பாட, பக்தர்கள் பண்ணிசைக்க பாவனமாய் வீற்றிருப்பவர்கள்.

---

1. ஆ. எதிராஜன், 108 வைணவ திவ்ய தேச ஸ்தல வரலாறு, ப. 27.

தொண்டரடிப்பொடியாழ்வாரும் (திருமண்டங்குடி), திருப்பாண் ஆழ்வாரும் (உறையூர்), திருமங்கை யாழ்வாரும் திருஆலி - திருநகரி அவதரித்த திருப்பதிகளை உடைய பகுதி சோழ நாடு. 108 திவ்விய தேசங்களில் பெரும்பான்மையான 40 திவ்விய தேசங்களைக் கீழ் வரும் பாடல் காட்டுகிறது.

*உயர் திருவரங்கம் உறையூர் தஞ்சை*
*அயர்வகற்றிடும் அன்பில் கரம்பனூர்*
*புகழ் வெள்ளறை புள்ளம் பூதங்குடி*
*அந்தமில் பேர்நகர் ஆதனூர் அழுந்தூர்*
*போத மருட் சிறுபுலியூர் சேறை*
*மாதலைச் சங்க நாண்மதியாய் குடந்தை*
*விரவு கண்டியூர் விண்ணகர் கண்ண*
*புரமுடன் ஆலி, பொன் நாகை நறையூர்*
*நந்து நந்தி புரவிண்ணகரம் இந்தளூர் திருச்*
*சித்திர கூடம், சீராம விண்ணகரம்*
*கூடலூர் கண்ணங்குடி கண்ணமங்கை*
*வீடருள் கவித்தலம் வெள்ளியங்குடி*
*வண்ண மணி மாடக்கோயில், வைகுந்த*
*விண்ணகரம், அரிமேய விண்ணகரம்*
*திருத் தேவ னார்தொகை, சிறந்த தாயவன்*
*புருடோத்தமம், செம்பொன் செய்கோயிலே*
*பாவனத் தெற்றியம்பலம் பலமணிக்கூடம்*
*காவளம்பாடிக் கவின் வெள்ளக்குளம்*
*துதி பார்த்தன் பள்ளிசேர், சோழநாட்டுப்*
*பதியதோர் நாற்பதும் பணிந்து போற்றுவோம்.*

திருக்குடந்தை

உலகங்கள் பதினான்கினுள் உயர்ந்தது பூவுலகம், த்வீபங்கள் (தீவுகள்) ஏழிலும் ஏற்றமுற்றது ஜம்பூத்வீபம்,[1] வர்ஷங்கள் ஒன்பதிலும் உத்தமமானது பாரத வர்ஷம்; அதனிலும் பெருமை படைத்தது பரத

---

1. ஒப்பிடுக: பெரியாழ்வார் திருமொழி 3.6.1: நாவலம் பெரிய தீவினில்...

கண்டம். அதிலடங்கிய பல நாடுகளிலும் திவ்விய தேசங்கள் எனக் கணக்கிடப் பெற்ற 108ல் நாற்பது திவ்விய தேசங்களைத் திருவா-பரணங்களாகக் கொண்டு விளங்கும் 'சோழ வளநாடு சோறுடைத்து' என்று பெயர் பெறக் காரணமான காவிரியாறு கரைபுரண்டு இந்நாட்டில் ஓடுவதாலும், அர்ச்சாவதாரத்தில் முதன்மைபெற்ற ரங்கநாதன் எழுந்தருளியிருந்து அணி சேர்ப்பதாலும் சோழநாடு சிறப்படைகிறது. திருவரங்கம் (ஸ்ரீரங்கம்), திருவேங்கடம் (திருமலை -திருப்பதி), திருக்குடந்தை என்ற வரிசையில் அமைந்துள்ள படி திருக்குடந்தை மூன்றாவது முக்கிய இடத்தை வகிக்கிறது.

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்விய தேசங்கள் (பாடல் பெற்ற திருத்தலங்கள்) 108ல் திருவரங்கத்திற்கும் (11 ஆழ்வார்கள் - 247 பாசுரங்கள்), திருவேங்கடத்திற்கும் (10 ஆழ்வார்கள் - 202 பாசுரங்கள்), அடுத்தபடியாக பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய ஏழு ஆழ்வார்கள் பாடியருளிய மாபெரும் புண்ணியத் திருத்தலமே (க்ஷேத்ரமே) பொன்னிசூழ் பொன்னரங்கம் போன்ற திருக் குடந்தையாகும். திருவரங்கனும், திருவேங்கடவனும் ஆராவமுதனும் - மூவரும் ஒருவரே என்பர் முந்தைய ஆசார்யர்கள் (பூர்வர்). அதிலும் அரங்கனையும் அமுதனையும் மிகவும் ஒற்றுமைப்படுத்திக் பேசும் "விபவம் (பெருமை) - கோயிலிலே (திருவரங்கத்திலே); ஸௌந்தர்யம் (அழகு) குடமூக்கிலே (திருக்குடந்தையிலே)" என்ற பழமொழியும் எழுந்தது.

வைகுண்டநாத: சார்ங்கேச: ரங்கநாதோ மஹாப்ரபு: ।
ஏக ஏவ த்ரிரூபோ'ஸௌ லோக ரக்ஷண ஹேதவே ॥

என்று "ஆராவமுதாழ்வான்" வைபவத்தில் வைகுண்ட நாதனே அமுதன் என குறிப்பிடப்பட்டுள்ளது. அதனால் அமுதன் எழுந்தருளியுள்ள ஸந்நிதிக்குத் 'திருமாமணி மண்டபம்' எனத் திருப்பெயர் ஏற்பட்டது.

**உபய ப்ரதான க்ஷேத்ரம்**

திருவரங்கத்தில் போல், இத் திருக்குடந்தைத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூலவர் வடிவான 'ஆராவமுதனுக்கும்' உத்ஸவர்

வடிவான "ஸ்ரீ சார்ங்க ராஜனுக்கும்"தனிச் சிறப்பு ஆழ்வார் அருளிச் செயல்களும் உண்டானதால் இத்தலத்தை 'உபயப்ரதான க்ஷேத்திரம்' என்றும் அழைப்பர். ஆழ்வார்கள், "ஆராவமுதே அடியேன் உடலம்" என்றும், "ஆராவமுதே அடியேற்கருளாயே" என்றும் இப்புடையில் பள்ளிகொண்ட ஆராவமுதனையும், "விற்குனித்த விற்கை வீரனே" என்றும் "சார்ங்கவிற் சேவகனே" என்றும் இத்துடனே உத்ஸவர் ஸ்ரீ சாரங்க ராஜனையும் தனித்தும் திருப்பாடல்களின் வழியே போற்றிப் பரவியுள்ளார்கள். 'பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்' என்ற முறையில் தலத்து, ஹேம புஷ்கரிணிக்கும், "தூநிலா முற்றத்தே போந்து விளையாடவா" என்ற முறையில், கோயில் ஸ்ரீ ஆண்டாள் சந்நிதி வடக்கு பிரகாரத்துக்கும், "ஐவர்க்காய் அமரில் உய்த்த தேராளன்" என்று திருத்தேர் எம்பிரானுக்கும் அருளிச் செயல் ஏற்பட்டதும் மற்றும் ஒரு சிறப்பாகும்.

திருக்குடந்தை திவ்ய தேசத்தைப் பற்றி சேஷ தர்மம், கும்பகோண மாஹாத்ம்யம், திருவிண்ணகர் மாஹாத்ம்யம், திருச்சேறை மாஹாத்ம்யம், நந்திபுர விண்ணகர மாஹாத்ம்யம், வானமாமலை மாஹாத்ம்யம், ஸ்ரீமுஷ்ண மாஹாத்ம்யம் போன்ற பல திருத்தலப் (ஸ்தல) புராணங்களில் (வட மொழியில்) மிகப் பழமையான ஸ்தலம் 'கும்பகோணம்' என்றே மிக்க மேம்பாட்டுடன் இந்நகர் பேசப்படுவதாலும் இது, கொண்டாடத் தக்க திருத்தலமாகின்றது.

1. கும்பகோண மாஹாத்மியம் முதலாவது அத்தியாயத்தில்,
"சதாஷ்டகம் மஹாக்ஷேத்ரம் விஷ்ணு ஸ்தாநமநுத்தமம் ।
ஏதேஷ்வபி ச ஸர்வேஷு கும்பகோண ஸமம் ந ஹி ॥"

108 விஷ்ணு ஸ்தலங்களாகிய மஹாக்ஷேத்ரங்களில் கும்பகோணம் என்ற திருப்பதிக்கு நிகர் எதுவுமில்லை.

2. விநாப் ரதிஷ்டாம் பச்யந்தி ப்ராப்நுவந்தி பலாநி ச ।
அஷ்டோத்தர சதாந்யத்ர ஸ்வயம் வ்யக்தாநி பூதலே ॥
ஸ்ரீ முஷ்ணம் வேங்கடாத்ரி: ச ஸ்ரீரங்கம் காளமேகேச்வரம் ।
கும்பகோணம் பத்மநாபம் அநந்த சயனம் ததா ॥
(ஸ்ரீ முஷ்ண புராணம், இரண்டாவது பாகம், 1 வது அத்தியாயத்தில்)

*"கும்பகோண மஹா க்ஷேத்ரே, பத்ம புஷ்கரணீ தடே"*

*(வானமாமலை மாஹாத்மியம், 5 அத். 13 சுலோகம்)*

*"ஸ்ரீரங்கே, வேங்கடாத்ரௌ ச ஸ்ரீ முஷ்ணே ஹஸ்தி பூதரே ।*
*கும்பகோணே ஸ்ரீநிவாஸே ஸாரக்ஷேத்ரே ததைவ ச ॥"*

*(வானமாமலை மாஹாத்மியம், 7 அத் - 113 சுலோகம்)*

*"ஸ்ரீரங்கம் வேங்கடாத்ரி: ச ஸ்ரீமுஷ்ணம் நைமிசம் வநம் ।*
*வ்ருஷாத்ரி : கரிசைல: ச கும்பகோணம் மஹாமுநே ॥"*

*"ஸ்ரீரங்கம் கும்பகோணம் ச ஸ்ரீமுஷ்ணம் வேங்கடாசலம்..."*
*"நர நாராயணாக்யஞ்ச நைமிசாரண்யம் ஏவ ச ।*
*காஞ்சீம் அவந்திகாஞ்சைவ ஸ்ரீநிவாஸம் ததைவ ச ॥"*
*"வ்ருஷ பாக்யம் கிரிஞ்சைவ தோதாத்ரிம் புஷ்கரம் ததா ।*
*ஸ்தாநாநி த்வாதசை தாநி ஸ்வயம் வ்யக்தாநி பூதலே ॥"*

*(பவிஷ்யோத்தர புராணத்திலுள்ள, ஸாரக்ஷேத்ர மாஹாத்ம்யத்தில் முதல் அத்தியாயத்தில் 31,32,33 வது சுலோகங்கள்)*

*விமாநாத் சார்ங்கராஜஸ்ய வஹ்நிகோணே மஹத் வநம் ।*
*வைகுண்ட நகரப்ரக்யம் ஸர்வ மங்கள தாயகம் ॥*
*நந்திநா பூர்வ ஸந்தப்தம் ஸ்ரீநிவாஸபுரம் புரா ...*

*(தக்ஷிண ஜகந்நாதம் என்கிற நந்திபுர மாஹாத்ம்யம் அத்யாயம் - 3, 40, 41 வது சுலோகங்கள்.)*

**கும்பகோண மாஹாத்ம்ய மங்கள சுலோகம்**

*த்ரிம்சத் த்ரிகோடி வஸுருத்ர திவாகராதி*
*தேவாதி தேவகண ஸந்தத ஸேவ்யமாநம் ।*
*அம்போஜ ஸம்பவ சதுர்முக கீயமாநம் வந்தே*
*வந்தே'ஹம் அத்புதகுணம் த்வத சார்ங்கபாணிம் ॥*

கும்பகோணம் க்ஷேத்ரத்தின் பெருமை, கும்பகோண மாஹாத்ம்யம் தவிர, மற்றும் பல புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது என அறியலாம். இதைத் தவிரவும் 1952-ம் ஆண்டு "திருக்குடந்தை சார்ங்கராஜ வைபவம்" என்ற நூலை முன்பு கீர்த்திமூர்த்தியாய் எழுந்தருளி இருந்த பகவத் விஷயம் ஸ்ரீ உ.வே. இளைய வில்லி ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமியால் வெளியிடப்பட்ட நூலும் 1964-ல் ஸ்ரீ.லெ. ராஜகோபாலன் என்பவரால் திருத்தலச் சிறப்புக் குறிப்புகளுடன் கூடிய 'ஸம்ப்ரோக்ஷண மலர்' என்ற நூலும் வெளியிடப்பட்டது. சைவ சமயப் பேரறிஞர்களுள்' தலை சிறந்த முத்தமிழ்க் கடல், மகாவித்துவான் திரு மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களால் இத் தலத்தின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது.

### கும்பகோணம் - பெயர்க் காரணம்

கும்பஸ்ய கோணதோ யஸ்மிந் ஸுதா பூரம் விநிஸ்ருதம் ।
தஸ்மாத் தத்பதம் லோகே கும்பகோணம் வதந்தி ஹி ॥

மேற்படி ஸ்தலபுராணம் 12வது அத்தியாயத்தில் உள்ள சுலோகம் பெயர்க் காரணத்தைக் காட்டுகிறது.

நெடுங்காலத்திற்கு முன் பிரளய காலத்தில், எம்பெருமானின் ஆணையால், நான்முகன் புண்ணிய க்ஷேத்திரத்திலிருந்து மண் கொணர்ந்து அதனை அமுதத்துடன் கலந்து பிசைந்து குடமாக அமைத்து அக்குடத்துள் அமுதத்தை நிரப்பி, குடத்தின் நடுவில் ஸ்ருஷ்டிக்குக் காரணமான விதையையும், சுற்றிலும் வேதங்கள் முதலான வற்றை வைத்து, தக்கபடி மூடி, மேருபர்வதத்தின் கொடுமுடியில் ஸாவதானமாக (மிக்கவனமாக) வைக்க, சிலகாலம் சென்றபின் பிரளயம் ஏற்பட்டு, எங்கும் வெள்ளம் பிரவஹித்தது. அந்த வெள்ளத்தில் பிரமன் வைத்த குடமும் மிதந்து, மெள்ள மெள்ள வந்து சோழநாட்டைச் சேர, பிரளயம் நீங்கினவாறே, குடமூக்கின் வழியாக, உள்ளிருந்த அமுத வெள்ளம் ஐந்து க்ரோச தூரமுள்ள பூமி பாகம் அனைத்தையும் நனைத்து ஒரு அமுதமயமாக ஆக்கியது. அப்படி அக்குடமானது மூக்கின் வழியாக அமுதத்தை வெளிப்படுத்திய இடமாதல் பற்றி, வடமொழியில், "கும்பகோணம்" என்றும் தென்

மொழியில் "குடமூக்கு", "குடந்தை" என்றும் இத்தலத்திற்கு பெயர் வழங்கலாயிற்று.

**திருக் குடந்தை பாஸ்கர க்ஷேத்ரம் என்று அழைக்கப்படும் காரணம் :**

முன்பு ஒரு சமயம் சுதர்சனனுக்கும், சூரியனுக்கும் போர் ஏற்பட, சுதர்சனனின் பேரொளியினால் சூரியன் ஒளி இழந்தவனாக, உடனே கர்வம் அடங்கின சூரியன், ஸ்ரீ சார்ங்கராஜனின் திருக்கைத் திருச்சக்கரமான திருவாழியாழ்வானைக் குறித்து நெடுங்காலம் இத்தலத்தில் தவமியற்றிய போது, அத்தவத்திற்கு இரங்கின எம்பெருமானுடைய திருவருளால் திரும்பவும் சூரியன் தன்னொளியைப் பெற்று விளங்கினான். தனக்கு எம்பெருமான் இவ்வாறு திருவருள் செய்தமையை நினைத்துப் பின்னும் எம்பெருமானைப் பணிந்து, தனக்கு அருள் செய்ததை அனைத்துலகும் அறியும்படி இந்த க்ஷேத்திரம் 'பாஸ்கர க்ஷேத்திரம்' என்று அழைக்கப்பட வேண்டும் படி பிரார்த்திக்க, இத்தலம் இப்பெயர் பெற்று விளங்குகிறது.

*இத்தம் ஸ்துதோ தேவதேவோ பாஸ்கரேண மஹாத்மநா ।*
*தத: ப்ரஸந்நோ பகவாந் சக்ரரூபீ ஜநார்தந: ।*
*சார்ங்கபாணேரபிந்நோ'ஸௌ ஸர்வலோகைக மங்கள :।*
*யத் தேஜஸாஹ்ருதம் பூர்வம் தத் தஸ்மை தத்தவாந் புந: ।*
*தத ஏவ ஹி தத்க்ஷேத்ரம் பாஸ்கர க்ஷேத்ரமுச்யதே ॥*

என்று மேற்படி ஸ்தல புராணம் 61வது அத்யாயத்தில் உள்ள சுலோகங்கள் அறிவிக்கின்றன.

**கல்யாணபுரம் என்பதற்குக் காரணம்**

இலக்குமியான கோமளவல்லிக்கும், ஸர்வேச்வரனான ஸ்ரீசார்ங்க-ராஜனுக்கும் இத்தலத்திலே கல்யாணம் நடந்தேறிய படியால், திருக்குடந்தைக்கு கல்யாணபுரம் என்று பெயர் ஏற்பட்டது.

*ரமேசயோர்ஹி கல்யாணம் யஸ்மாதாஸீத் முநீச்வர ।*
*கல்யாணபுர மித்யேவ விதுர்தேவா முநீச்வரா: ॥*

என்ற மேற்படி சுலோகம் 52வது அத்யாயத்தில் கும்பகோண மாஹாத்ம்யம் என்னும் ஸ்தலபுராணத்தில் உள்ளது.

**பிற பெயர்கள்**

திருக்குடந்தை திவ்வியதேசம் தேவலோகப் பட்டணம், சிவவிஷ்ணு-புரம், மந்த்ராதி தேவஸ்தானம், சார்ங்கராஜபட்டணம், க்ஷேத்ரஸாரம், ஒளிமயமான பட்டணம் எனப் பல பெயர்கள் இருப்பதாக கும்பகோண மாஹாத்ம்யம் 63வது அத்தியாயத்தில் காட்டப்பட்டுள்ளது.

**இந்நகரில் வஸிப்பவர்களின் மேன்மை**

*ஸ்ரீகும்பகோணே வஸதாம் நராணாம்*
*கிமஸ்தி வக்தவ்ய பலம் சுபஞ்ச।*
*நமந்தி தேவா முநயச்ச யக்ஷா:*
*கந்தர்வ முக்யாஸ் ஸததம் முநீச்வரா:॥*

என்று கும்பகோணத்தில் வஸிக்கிறவரக்ளை, தேவர்கள், முனிவர்கள், யக்ஷர்கள், கந்தருவர்கள் முதலான எல்லோரும் எப்பொழுதும் வணங்கி வழிபடுகிறார்கள். இதைவிட சிறந்த பலன் வேறென்ன இருக்கிறது என்று மேற்படி 58-வது ஸ்தல புராணம் சுலோகம் அறிவிக்கிறது.

**அரை க்ஷணம் வஸித்தாலும் அடையும் பலன்**

*க்ஷணம் க்ஷணார்த்தமபிவா கும்பகோணே வஸந்தி யே।*
*முக்திஸ்தேஷாம் ஹஸ்தகா ஹி கிமுதாகில ஸம்பத:॥*

என்று திருக்குடந்தையில் க்ஷண காலமோ, அல்லது அரை க்ஷணமோ வசிக்கிறவர்களுக்கு மோக்ஷம் கையில் வந்து சேர்ந்து விடுகிறது. பின்னும் ஸம்பத்துக்களைனைத்தும் வரத் தடையுமுண்டோ? என்று 52வது அத்தியாய சுலோகம் குறிப்பிடுகிறது.

**க்ஷேத்ர வாஸம் கிடைக்கக் காரணம்**

*ஜந்மாந்தர - தபோயோகாத் தத்ர வாஸோ பவேந் ந்ருணாம் ।*
*(கும்பகோண மாஹாத்ம்யம், 2-வது அத்யாய சுலோகம்)*

முன் ஜன்மங்களில் செய்த தவத்தின் பயனாகக் கும்பகோண க்ஷேத்ர வாஸம் கிடைக்கிறது. ஒரு லக்ஷம் மக்கள் வஸிக்கும் படியான பேறு பெற்றவராகிறார்கள்

**க்ஷேத்ரம் செல்ல ஸங்கல்பத்தால் வரும் பெருமை**

*கச்சாமீதீஹ ஸங்கல்பம் கும்பகோணம் சுபஸ்தலம் ।*
*ய: கரோதி ஸ தர்மாத்மா ஸகுலம் தாரயிஷ்யதி ॥*

சுபஸ்தலமான கும்பகோணத்தைக் குறித்துப் போகிறேன் என்று எவன் ஸங்கல்பம் செய்கிறானோ, அவன் தர்மாத்மா. குலத்தை நல்லபடியில் தரிப்பவனாவான்.

**க்ஷேத்ர மஹிமையைப் படித்தல் கேட்டல் முதலியன**

*கும்பகோணஸ்ய மாஹாத்ம்யம் நித்யம் பக்தியுதோ நர: ।*
*ய: படேத் ச்ருணுயாத்வாபி ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥*

- கும்பகோண மாஹாத்ம்யம் 64 வது அத்தியாயம், எந்தமனிதன் பக்தியுடன் க்ஷேத்திர மகிமையை படிப்பானோ, எவன் கேட்பானோ, அவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். இவ்வாறு புராணம் படிப்பவனை விசேஷமாக ஆராதிக்க வேண்டுமென்றும், ஆராதித்தால், அவன் உயர்ந்த பெருமை பெறுகிறான் என்றும், பணத்தில் லோபத்தினால் எவன் ஆராதிக்காது இருப்பானோ, அவன் ஜலமில்லாத இடத்தில் ப்ரஹ்ம ராக்ஷஸனாகப் பிறக்கிறான் என்றும்; இப்புத்தகம் எவன் வீட்டில் இருக்கிறதோ, அதனை எவன் ஆராதிப்பனோ அவன் அளவற்ற பெருமைகளை அடைகிறான், என்று புராணம் படிப்பவன் பெறும்

மேன்மைகளைக் கூறுகிறது. தலபுராணத்தின் முதலத்தியாயத்தில், புராணம் கேட்காதவனை சோற்றுக்குக் கேடு, பூமிக்கு பாரமென்றும், கேட்பவனை மிகவும் கொண்டாடியும், பேசியுள்ளது.

### நகர அமைப்பில் நதிகளின் பெருமை

வேதங்கள், புராணங்கள் முதலான அனைத்து ப்ரமாணங்களாலும், கங்கையைக் காட்டிலும், காவிரி உயர்ந்ததே என்றும், காவிரி விரஜாநதியே என்றும் கொண்டாடப்படுகிறது. அத்தகைய பெருமை பெற்ற காவிரியாற்றுக்கும், அரிசலாறு என்று வழக்கத்திலுள்ள 'ஹரிசொல்லாறு', 'பிரம்மநதி' என்கிற ஆற்றிற்கும் நடுவே பெரும்பான்மையான நகர்ப்பகுதி அடங்கியிருக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. நகரத்திற்கு உள்ள பெருமை போல் இவ்விரு நதிகளின் பெருமையையும் இயம்ப இயலாது.

### நதிகளின் அமைப்பில் அழகிய அனுபவம்

ஸ்ரீரங்கத்திற்கு ஒரு காதம் மேற்கில் காவிரி இருவடிவுடன் பிரிந்து, ஸ்ரீரங்கநாதன் பள்ளி கொண்டிருக்க, ஸ்ரீரங்கத்திற்கு இரு புறத்திலும் மாலையாக பிரவஹிக்கிறது போலவே, திருக்குடந்தை மாநகரத்திற்கும் ஒரு காதம் மேற்கே, இரு வடிவுடன் பிரிந்து, ஸ்ரீசார்ங்கராஜன் பள்ளி கொண்டிருக்கிற திவ்விய நகரத்திற்கு இரு பக்கத்திலும் மாலைபோல் ஓடுவதும் காணத்தக்கது. இவ்விரு நதிகளும் காவிரியேயானதால் தான் சில திவ்விய தேசங்களை ஆழ்வார்கள் நதிகளை அடையாளமாக அமைத்துக் காட்டுமிடங்களில், "பொன்னித் தென்பால், திருமால் சென்று சேர்விடம் தென் திருப்பேரே"[1] என்றும், "தேறு நீர்பம்பை வடபாலைத் திருவண் வண்டூர்"[2] என்றும், கூறியது போலன்றி, ஸ்ரீரங்கத்தை, "பொன்னி சூழ் அரங்கம்"[3] என்றது போலவே, "காவிரிக்கரைக் குடந்தை"[4] என்றும் "பொன்னி மணி கொழிக்கும் பூங்குடந்தை"[5] என்றும் பாடியருளினர்.

---

1. திருவாய்மொழி, 10.8.1.
2. மேற்படி, 6.1.10.
3. திருசந்தவிருத்தம், 119.
4. மேற்படி, 61.
5. பெரியதிருமடல், கண்ணி - 114.

**காவிரிநதி இருவடிவமாகப் பிரிந்த காரணம்**

*காவேரீ சோள பூமாதா மாலார்த்தம் சார்ங்கிண: புரா |*
*த்விதா பூதா கும்பகோணாத் பச்சிமாயாம் முநீச்வர ||*

*[முனீச்வரரே! சோழ நாட்டிற்குத் தாயான காவிரி, முன்பு சார்ங்கராஜனுக்குத் திருமாலையாக விளங்க வேண்டி கும்பகோணத்திற்கு மேற்கில் இரு வடிவை உடையவளானாள்.]*

என்று ப்ரஹ்மாண்ட புராணத்திலடங்கிய ஆகாசநகரீ மஹாத்ம்யம் (ஒப்பிலியப்பன் கோயில்) 1-வது அத்தியாயம் 42வது சுலோகம் குறிப்பிடுகின்றது.

சார்ங்க ராஜனின் தெற்கில் ஓடும் நதியும் காவிரியே என்பதை ஆகாசநகரீ மாஹாத்ம்யம் 1-வது அத்தியாயம் 46-வது, மற்றும் 43-வது சுலோகங்கள் குறிப்பிடுகின்றன:

*வஹதே தக்ஷிணே யஸ்ய சார்ங்கிணோ ஹி கவேரஜா|...*
*தத்ர யாதக்ஷிண வஹா ஸாபி பாபப்ரணாசிநீ|...*

கும்பகோணத்தில் தெற்கேயுள்ள காவிரியும் பாபங்கள் அனைத்தையும் போக்கும் பெருமை பெற்றவள் என்று பொருள்.

மேற்படி பிரம்மாண்ட புராணத்திலடங்கிய ஆகாச நகரீ மாஹாத்ம்யம் முதல் அத்தியாயம் 50, 51-வது சுலோகங்கள் ஒரு ஐதிஹ்யத்தைக் காட்டுகின்றன.

கங்கை, யமுனை, கோதாவரி என்கிற மூன்று நதிகளும் தாங்கள் பாபிகளின் பாபங்களைப் போக்குவதால் தங்களுக்கேற்பட்ட தோஷங்களைப் போக்கிக் கொள்ள பிரமனை வேண்டினர். அப்போது பிரமன் கும்பகோணத்தின் தென் பாகத்தில் ஓடுகிற காவிரியில் மூன்று நதிகளும் சேர்ந்து, மார்கண்டேய க்ஷேத்திரத்திற்கு மேற்கில் மூன்று

வடிவம் கொண்டு பிரவஹித்து பெருமாள் திருமஞ்சனத்திற்கு உபயோகப்படும்படி இருந்தால் பாபம் தொலையும் என்று சொல்ல, அப்படியே நதிகளும் செய்து பாபங்களைப் போக்கிக் கொண்டனராம்.

இவ்வாறு நதிகள் மூன்று வடிவுடன் பிரிவதில் வடக்கே முதலில் கங்கை, இரண்டாவது கோதாவரி, மூன்றாவது யமுனை, எனப்படுகின்றன. இம் மூன்று நதிகளும், மார்கண்டேய க்ஷேத்திரத்தில் இப்பொழும் எம்பெருமானை வணங்கி வழிபடுகின்றன. ஆக, இதனால் கும்பகோண எல்லையில் தெற்கேயுள்ள நதியும், கிழக்கே சென்று பிரிகிற வரையில், காவிரி என்பது நிரூபித்துணரப்பட்டது. மேலும் மேற்படி இரண்டாவது அத்யாயத்தில் மார்க்கண்டேய க்ஷேத்திரத்தைச் சொல்லும்போது, காவிரியின் தெற்கு பாகத்திலென்றே காட்டப்-பட்டிருப்பதும் தக்க சான்றாகும்.

**திருக்குடந்தையைச் சுற்றியுள்ள விசேஷ ஸ்தலங்கள்**

1. ஒப்பிலியப்பன் கோயில், 2. நாச்சியார் கோயில், 3. திருச்சேறை, 4. நந்திபுர விண்ணகரம் (நாதன் கோயில்), 5. திருக்கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில்), 6. கண்ணன் கவித்தலம், 7. புள்ளம் பூதங்குடி, 8. திருஆதனூர், 9. திருவெள்ளியங்குடி என்றபடியாக ஒன்பது திவ்விய தேசங்களிலுள்ள எம்பெருமான்கள் நவரத்ன மணிகள்போல் ஆராவமு-தனை நடுநாயக மணியாகக் கொண்டு கிழக்கேயிருந்து பிரதக்ஷிண வரிசையாக சுற்றியும், சூழ்ந்தும் எழுந்தருளியுள்ளனர்.

அருச்சையில் அழகிய ஒரு தசாவதாரமோ இவை என அனுபவிக்கத் தோன்றும். கும்பகோண மாஹாத்மியம் 56வது அத்யாயத்தில், கும்பகோணத்தில், பத்துத்தடவை மீண்டும் மீண்டும் எம்பெருமான் தேவர்களின் கார்யத்துக்காக தசாவதாரம் பண்ணினான் என்று பேசப்படுவதில் இவ்வாறும் ஒருபடிஇருக்கக் கூடுமோ என்றும் ஊஹிக்க இடமுண்டு.

இப்படி உள்ள விஷ்ணு ஸ்தலங்கள் போலவே நகரிலும் நகரைச் சுற்றிலும் பல விசேஷ சிவ ஸ்தலங்களும் உள்ளன. தீர்த்தர யாத்திர செய்பவர்கள் பெரும்பாலும் இந்நகருக்கு வந்ததும் முதலில் நகரிலுள்ள ஸ்தலங்களை வழிபட்டு அருகிலுள்ள ஸ்தலங்களுக்கும் சென்று அப்படியே வேறு க்ஷேத்ரம் செல்லாமல் குடந்தை சேர்ந்து பிறகு வேறு க்ஷேத்ரம் செல்கின்றனர். இவ்வாறு நகரைச் சுற்றி வருவதை பஞ்சக்ரோச யாத்ரை எனப் புராண நூல் கூறுகிறது.

நகரிலுள்ள மற்ற எம்பெருமான்கள், ஸ்ரீ சக்ரராஜப் பெருமாள், வரதராஜப் பெருமாள், ஆதிவராகப் பெருமாள், லக்ஷ்மீ நாராயணப் பெருமாள், வேத நாராயணப் பெருமாள் என்று புராணத்தில் பேசப்பட்ட பெருமாள்களும் வெகு காலமாக ஸ்ரீ ஆராவமுதன் திருவருளுக்கிலக்காகி அழகிய பட்டாபிஷேகத் திருக்கோலத்துடன் மூலவராக இருக்கும் கிரமத்திலும், வில்லேந்தி நிற்கிற உற்சவராக விளங்கும் கிரமத்திலும், திருவவதரித்து, சக்ரராஜன் போல் பல படிகளிலும் அமுதடனுடன் சேர்ந்து உற்சவங்களையும் கண்டருளி வருகிற ஸ்ரீராமபிரானும், மற்றும் பல எம்பெருமான்களும் இந்நகரில் கோயில் கொண்டுள்ளனர். இவற்றுள் ஸ்ரீராமஸ்வாமி திருக்கோவில் அமைப்பு அனைவரும் சென்று சேவிக்க வேண்டிய விசேஷவேலைப்பாடுகளுடையது.

### நகர அமைப்பில் ஆழ்வார்களின் அனுபவம்

"மதிள் குடந்தை"[1] எனப் பூதத்தாழ்வாரும், "குடந்தை இறைபாடி,"[2] "மண்ணகத்த தென் குடந்தை"[3] எனப் பேயாழ்வாரும், "விலங்குநூலர் வேதநாவர் நீதியான கேள்வியார், வலங்கொளக் குடந்தையுள்

1. இரண்டாம் திருவந்தாதி, 70.
2. மூன்றாம் திருவந்தாதி, 30.
3. மூன்றாம் திருவந்தாதி, 62.

கிடந்தமால்...,"[1] "கொங்கு தங்குவார் குழல் மடந்தைமார் குடைந்தநீர் பொங்கு தண் குடந்தை,"[2] "சாலி வேலி தண்வயல் தடங்கிடங்கு பூம்பொழில் கோலமாட நீடுதண் குடந்தை,"[3] "தேன் பொருந்து பூம்பொழில் தழைக் கொழும் செழுங் தடங் குடந்தை,"[4] "கால் பரந்த காவிரிக் கரைக் குடந்தை,"[5] என்று திருமழிசையாழ்வாரும், "சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை,"[6] "கன்னார் மதிள் சூழ் குடந்தை,"[7] "நலத்தால் மிக்கார்... குடந்தை,"[8] "செழுவொண் பழனக் குடந்தை,"[9] "வாழ்தொல் புகழார் குடந்தை,"[10] "திசைவில் வீசும் செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை,"[11] "வில்லி வள வயல் சூழ் குடந்தை"[12] என நம்மாழ்வாரும், "தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும் சூழ்புனல் குடந்தை,"[13] "குயிலாலும் வளர்பொழில் சூழ் தண் குடந்தை,"[14] "கொங்கேறு சோலைக் குடந்தை,"[15] "கொந்துலாம் பொழில் சூழ் குடந்தை,"[16] "கொந்தார் பைம் பொழில் சூழ் குடந்தை,"[17] "தோடவிழ்

---

*1. திருச் சந்த விருத்தம், 56.*

*2. மேற்படி, 57.*

*3. மேற்படி, 59.*

*4. மேற்படி, 60.*

*5. மேற்படி, 61.*

*6 . திருவாய்மொழி, 5.8.1.*

*7. மேற்படி, 5.8.3.*

*8. மேற்படி, 5.8.4.*

*9. மேற்படி, 5.8.5.*

*10. மேற்படி, 5.8.6.*

*11. மேற்படி, 5.8.9.*

*12. மேற்படி, 8.2.6.*

*13. பெரிய திருமொழி, 1.1.2.*

*14. மேற்படி, 3.6.8.*

*15. மேற்படி, 6.8.9.*

*16. மேற்படி, 7.3.10.*

*17. மேற்படி, 8.9.5.*

நீலம் மணங்கொடுக்கும் சூழ்புனல் சூழ்குடந்தை,"[1] "கொங்கார் சோலைக் குடந்தை,"[2] "வெறியார் பொழில் சூழ் வியன் குடந்தை,"[3] "கொண்டற்கை மணிவண்ணன் தண்குடந்தை,"[4] "பொன்னி மணி கொழிக்கும் பூங்குடந்தை,"[5] "குன்றா மதுமலர்ச் சோலை வண் கொடிப் படப்பை, வருபுனற் பொன்னி மாமணியலைக்கும், கற்போர் புரிசை கனகமாளிகை, நிமிர் கொடி விசும்பில் இளம் பிறை துவக்கும் செல்வம் மல்கு தென் திருக்குடந்தை..."[6] என்றெல்லாம் திருமங்கையாழ்வாரும் இந்நகர அமைப்பில் நிலவளம், நீர்வளம், பூஞ்சோலை, கொடித் தோட்டம், தாமரைத்தடம், கழனிகள், செந்நெல் சிறப்பு, செல்வச் சிறப்பு, மாட மாளிகைகளின் அமைப்பு, அன்பர்கள், சான்றோர்கள், அழகிய பாவைமலர்கள், என்றிவ்வாறாக உள்ள ராஜதானியின் பெருமைகளைக் காப்பாற்றத் தக்க மதிளடைப்பு இவை அனைத்தையும் காக்கும் ஆராவமுதனின் திருக் கல்யாண குணங்களின் பெருமை பின்னும் பலவற்றையும் பரக்க அனுபவித்து தம் அருளிச் செயலில் பிரபந்தத்தில் போற்றியுள்ளார்கள்.

### அழியாப் பெருநகர்

"ஆதிஸித்தம் மஹாக்ஷேத்ரம் கல்ப்பாந்தேஷு ஸம்ஸ்திதம்," என்று கும்பகோண மாஹாத்ம்யம் - 63வது அத்யாயத்தில் உள்ள சுலோகம், இந்த க்ஷேத்திரம் ஆதிகாலத்தில் தோன்றியது எண்ணிறந்த கற்பங்களிலும் நிலைத்திருக்கக் கூடியது, என்று இதன் பெருமையை எடுத்துரைக்கிறது.

---

1. பெரிய திருமொழி, 9.2.2.
2. மேற்படி, 10.10.8.
3. மேற்படி, 11.3.4.
4. மேற்படி, 11.6.9.
5. பெரிய திருமடல், 114.
6. திருவெழு கூற்றிருக்கை, வரிகள்:38-43.

வைகுண்டஏகாதசி இராப்பத்து-பகல்பத்து உற்சவம் திருவரங்கத்தில் சிறப்புற்றது போல், திருத்தேர் உற்சவம் திருக்குடந்தையிலேயே சிறப்புற்றதாகும். இத்தலத்து எம்பெருமானை பரகாலநாயகியின் (கலியனின்) தாயார் 'தேராளன்' என அழைத்தாள்:

"தாராளன் தண் குடந்தை நகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த தேராளன்..."

(பெரிய திருமொழி, 5.5.7.)

முதன் முதலில் திருமணங் கொல்லையில் திவ்விய தம்பதிகளின் திருமந்திரோபதேசத்தைத் தலை குனித்துப் பெற்ற திருமங்கையாழ்வார் தலை நிமிர்ந்ததும், நிமிராததுமாகத் திவ்விய தேச ப்ரஸ்தாவம் இல்லாத பெரிய திருமொழி முதல் பதிகமான "வாடினேன் வாடி" பதிகத்தில், இரண்டாம் பாசுரத்திலேயே:

"தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனல் குடந்தையே தொழுது என்
நாவினால் உய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்."

என்று வாய் வெருவிக் கூவினார்.

திருமழிசைப் பிரானும் தமது நான்முகன் திருவந்தாதியில்(36) 'நாகத்தணைக் குடந்தை வெஃகா திருஎவ்வுள்' என்று சில திருப்பதிகளின் திருப்பெயரைக் குறிப்பிட்டுப் பேசுகையில் திருக்குடந்தைக்கு முதலிடம் தந்து பாடியுள்ளார். ஆக, திருமழிசை ஆழ்வார் திவ்விய தேச யாத்திரையில் இத்தலத்துக்கு எழுந்தருளி ஆராவமுதனையும், ஸ்ரீசார்ங்கராஜனையும் கருத்துறக் கண்களாற அனுபவித்து, இத்தலத்தை விட்டு வேறிடம் செல்ல மனமின்றி இங்கேயே, ஸ்ரீசாரங்கபாணி திருவடி நிழலிலேயே, ஆயிரம் ஆண்டுகள் யோகநிலையில் எழுந்தருளிக் கடைசியில் திருநாடு அலங்கரித்தார் - என்றால் இத்தலத்தின் பெருமைக்கு சான்று வேறு வேண்டுமோ?

ப்ரபந்ந ஜன கூடஸ்தரான ஸ்வாமி நம்மாழ்வார், திருக்குடந்தையை 'செழுமாமணிகள் சேரும் திருக் குடந்தை' (திருவாய்மொழி: 5.7.11.) என்று அருளிப் பாடியமைக்குச் சேர, இத்தலத்திற்கு எழுந்தருளி ஆராவமுதனை நேரில் கண்டு அநுபவித்த (ஸேவித்த) பெரியோர்கள் எண்ணிலடங்கார்.

நம் பூர்வாசாரியர்கள், நம்மாழ்வார் அருளிச் செய்தபடி 'ஆராவமுதே' பதிகத்தில் வரும் 'செந்நெல்' என்ற சொல்லுக்கு அடைமொழியாக சீரார் சேர்த்து அதன் சீர்மையைக் காட்டிய ஆழ்வார் திருவுள்ளம் பற்றி பொருள் நயம் கூறுவர்.

திருக் குடந்தை நெல்லுக்கு செம்மையாவது - திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களுக்கும் இப்பதியில் குழுமியிருக்கும் செழுமாமணிகாளகிய மஹான்களுக்கும் அமுது படிக்குப் பயன்படுவதால் நெல் - செந்நெல்லாயிற்று, அதுவே அதன் சீர்மையைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

மேலும் 'நலத்தால் மிக்கார் குடந்தை (திருவாய் மொழி, 5.8.4.) என்றும் 'வாழ் தொல் புகழார் குடந்தை' (5.8.6.) என்றும் 'திசைவில் வீசும் செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை' (5.8.9.) என்றும் வாய் மணக்கப் பாடியருளினார்.

செழுமா மணிகள் என்ற சொல் நேராக திருமழிசைப்பிரானை உணர்த்தி நின்றாலும், தொடர்ந்த காலத்திலும், பிற்காலத்திலும், திருக்குடந்தை புண்ணிய பூமியில் அவதரித்தும் நீண்ட நாள் எழுந்தருளி இருந்தும் அவ்வப்பொழுது குழுமி இருந்தும், கோஷ்டி பரிபாலனம் செய்தும் ஏற்றம் பெற்ற மஹான்களையும் உணர்த்தும்.

ஸ்ரீவைஷ்ணவ முனித்ரய ஸம்பிரதாய பிரவர்த்தகரும், திருவை-யாற்றுக்கு அருகிலுள்ள ராயம்பேட்டையில் அவதரித்தவரும் ஸ்ரீகோபாலாரிய மஹாதேசிகன் என்று புகழ்ந்து போற்றப்பட்டவருமான திருக்குடந்தை தேசிகன் இத்தலத்தில் நித்திய வாஸம் செய்து, நாள்தோறும் ஆராவமுதனையும், ஸ்ரீகோமளவல்லி நாச்சியாரையும் கண்குளிர

மங்களாசாசனம் செய்து கொண்டும், எம்பெருமான்களுக்கு அளவற்ற கைங்கர்யங்கள் செய்து கொண்டும், ஒரு கால் தமது திவ்விய திருமேனியில் எம்பெருமானை ஆலிங்கனம் செய்து, பெருமாளுக்கு மேலும் பாகவத கர ஸ்பரிசத்தை உண்டு பண்ணியும் உகந்தார், என்றும் பெரியோர்கள் கூறுவார்கள்.

ஒருசமயம் ஸ்ரீசார்ங்கராஜன் திருத்தேர் உற்சவம் கண்டருளுகையில் பெருமாள் திருத்தேர் வீதியின் ஒரு பக்கம் பல நாள் நிலைபெறாமல் நின்று விட்டது. திருக்குடந்தை தேசிகன் ஸ்வாமி ஸ்ரீ சார்ங்கராஜனிடம் சரணாகதி செய்து, அமுதுபடி செய்யாமல் இருக்க, உடனே பக்ஷிராஜன் மேல் பவனி வருவது போல் ஒரு நொடியில் பெருமாள் திருத்தேருடன் நிலைக்கு எழுந்தருளி பக்த சரணாகதியைப் நிறைவேற்றினார்.

**மேலும் பல சிறப்புக்கள் :**

1. ஸ்ரீஅஹோபில மடம் 38வது பட்டம் ஸ்ரீமத் அழகியசிங்கர் மற்றும் திருக்குடந்தை ஸ்ரீமத் ஆண்டவன் ஆகிய ஆசார்ய ஸார்வபௌமர்களின் அவதார க்ஷேத்திரம் இதுவே!
2. ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரியர் மடத்தின் தலைமையகம் திருக்குடந்தையில் உள்ளது.
3. தமிழ்ப் பெரும் புலவர் திரு மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை இத்தலத்தைப் பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார்.
4. கணிதமேதை ஸ்ரீராமானுஜன் என்பவர் பிறந்த இடமும் இத்திருத்தலமே.
5. இந்த ஊரின் தெற்கிலும், வடக்கிலும் அரிசொல்லாறும், காவிரியும் அணைத்துப் பெருக, இது ஒரு தீவு போல தோன்றி திருவரங்கப் பெருநகரம் போல் காட்சி அளிக்கும்.
6. வடக்கில் ஸ்ரீ காஞ்சிபுரமும், தெற்கில் ஸ்ரீரங்கமும் இடையே திருக்குடந்தையும், ஆக இம்மூன்று க்ஷேத்ரங்களை ஸ்ரீ வைணவ சமயத்தின் ராஜதானிகள் என்பர்.
7. எங்கு செய்த பாவமும் காசியில் போகும், காசியில் செய்த பாபமோ திருக்குடந்தையில் அழியும், ஆனால் திருக்குடந்தையில் செய்த பாவத்தை எங்கு சென்றாலும் நீக்க முடியாது. இக் குடந்தையிலே தான்

போக்க வேண்டும் என ஸ்ரீவாமந புராணம், சேஷ தர்மம், ஸ்ரீ ஆராவமுதாழ்வான் வைபவம் போன்ற நூல்கள் கூறுகின்றன.

8. திருக் குடந்தையில் எழுந்தருளியிருக்கும் பெருமானை ஒரு முறை கண்களால் கண்டால் போதும் பிரம்மஹத்தி, முதலிய தோஷங்களும் நீங்கும், என்ற கருத்துள்ள

"ப்ரஹ்மஹத்யாதயோ கோரா: மஹாபாதக ஸஞ்சயா:।
கும்பகோணே சயாநஸ்ய விஷ்ணோ: நச்யந்தி தர்சனாத் ॥"

என்ற ஸ்தலபுராண சுலோகம் பிரமாணம் காட்டுகிறது.

9. திருமழிசை ஆழ்வார் எழுந்தருளியிருந்த ஸந்நிதி உண்டு.

10. இந்நகருக்கு இரு மருங்கிலும் மாபெரும் திவ்விய தேசமான தென் திருப்பதி என்றழைக்கப்படும்,பெரும் பிரார்த்தனை க்ஷேத்திரமான ஒப்பிலியப்பன் ஸந்நிதியும், தேவசேனாபதியான முருகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றான திருவேரகம் எனப்படும் சுவாமிமலையும் உள்ளன.

11. எம்பெருமான்களின் திருஉருவச் சிலைகளைச் செய்யும் ஸ்தபதிகள் மிகுந்த சிறப்பு மிக்க தலமாக விளங்குகிறது.

12. திருக்கோயில் திருஆராதனை(பூஜை)களுக்கும், திருமடைப்பள்ளிக்கும் தேவையான பித்தளைப் பாத்திரங்களும் செய்யப்படும் புனிதத் தலமிது.

13. எங்கும் காணமுடியாத வகையில் இத்தலத்தில் நான்முகனுக்கென்று 'பிரமன் கோயில்' தனிக்கோயிலுண்டு.

14. சைவப் புலவர் சேக்கிழார் பலகாலம் தங்கியிருந்த திருநாகேசுவரம் இந்நகரின் அருகிலுள்ளது.

15. இவ்வூரின் அருகே உள்ள திருவாவடுதுறையில் தான் பல ஆண்டுகள் திருமூலர் தியான நிலையிலிருந்தார்.

16. திருக்குடந்தையின் மருங்கமைந்த நந்திபுரம் கவி காளமேகப் புலவரின் பிறந்த ஊர்.

17. எங்கும் கோயில்கள் என்னும் படி எல்லா திசைகளிலும் பலப் பல கோவில்களை உடைய திருத்தலம்.

18. சங்கீத வித்வான்களும், பலப்பல கலைகளில் சிறந்த வல்லுநர்களும், மஹாகவிகளும், கலைஞர்களும், அறிவியல் நிபுணர்களும் தோன்றுதற்கு அடிப்படைக் காரணமான காவிரி நீர் வளமும், நில

வளமும், வேத கோஷங்களால் நிரம்பிய வாயு, வான் வளத்தையும் உடைய செழுமையான திருத்தலம்.

19. திருமழிசைப் பிரான் அந்திமகாலத்தில் திருக்குடந்தையிலேயே எழுந்தருளியிருந்து ஆராவமுதனை நாள்தோறும் மங்களாசாசனம் செய்து கொண்டு பல ஆயிரம் ஆண்டுகள் யோக நிலையில் எழுந்தருளி இருந்த திருத்தலம்.
20. நம்மாழ்வாரும் - திருமங்கை யாழ்வாரும் மிகவும் உகந்த தலம்.
21. மகாமகச் சிறப்பு பெற்ற தலம்.

மகாமகப் பெருநாள் 12 ஆண்டுக்கு ஒருமுறை வருவது. குரு சிம்ம ராசியில் வரும் வருடமாகவும், சூரியன் கும்பராசியில் மக நக்ஷத்திரத்தில் இருக்கும் நாளன்று நிகழும் பெருவிழா மகாமகப் பெருவிழா வாகும். அந்நாளில் எல்லா புண்ணிய நதிகளும் பொற்றாமரை புஷ்கரணியிலும், மகாமகக் குளத்திலும் சேருவதாக தலபுராணம் பகரும். அன்று புனித நீராடினால் பதினாயிரம் பிரம்மஹத்தி தோஷங்கள் நீங்கும் என்று நீராட்டபலனாக புராணங்கள் உரைப்பதால் பல லட்சம் மக்கள் தேசத்தின் பல கோணங்களிலிருந்து கும்பகோணத்தை அடைவர்.

தமிழக அரசு சிறப்பு கவனம் செலுத்தி சிறந்த வசதிகளையும் செய்து பக்தகோடிகளுக்கு உதவுகிறது. தண்ணீர்ப் பந்தல்களும், அன்னதானங்களும், இலவச தங்குமிடங்களும் இல்லை எனாது அள்ளி வழங்குகிறது. பொது மக்களும் தம் இல்ல விழாவாகக் கொண்டாடுவர்.

22. திருக்குடந்தை ஸ்ரீ சக்கரபாணி சுவாமி கோயிலின் அருகே உள்ள சக்கரப் படித்துறை என்ற காவிரிப் படித்துறை மிக சிறப்பு வாய்ந்தது.
23. இத்தலத்துக்கு மிக அருகாமையில் உள்ள திருப்புள்ளம்பூதங்குடிக்கு அருகே தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் அவதார க்ஷேத்திரமான திருமண்டங்குடி என்ற ஊர் உள்ளது.
24. இத்திருத்தலத்தில் ஆராவமுதன் ஸந்நிதியில் நடக்கும் திருவிழாக்களில் பதினைந்தாம் நாள் சேவையும்,கலியன் திருவடி தொழுதலும் சைத்ரோத்ஸவமும் மிகவும் முக்கியமானவை.

25. இத்தலத்துப் பெருமாள் சந்நிதியின் இரு பக்கங்களிலும் தக்ஷிணாயன - உத்தராயண தேவதைகள் படிக்கட்டுகளாக அமைந்து பாகவதர்களின் திருவடி ஸ்பர்சத்துடன் பெருமாளின் திருப்பவளச் செவ்வாய் காணத்தவம் செய்தனவாம். அதனால் இத்தலத்தில் தக்ஷிணாயன காலங்களில் (ஆடி முதல் மார்கழி முடிய) இறந்த எறும்பு முதலாக யாவருக்கும் மோக்ஷப்பேறு கைகூடும் என்று தலபுராணம் கூறுகிறது.

26. இத்லத்து நாச்சியாரான 'படிதாண்டாப்பத்தினி' என குறிக்கப்படும் ஸ்ரீ கோமள வல்லித் தாயார், சிறந்த வரப்ரசாதி.

27. கல்விச் சிறப்புப் பெற்ற இவ்வூரைத் "தென்னிந்தியாவின் கேம்ப்ரிட்ஜ்" (Cambridge of South India) என்றழைப்பர்.

28. இத் தலத்து எம்பெருமான் திருமழிசையாழ்வாருக்குத் தமது பிரான் என்ற திருநாமத்தை அளித்துத் தான் ஆழ்வாரானார்.

29. ஸ்ரீராமாநுஜர் அருளிய கீதைப் பேருரையின் உரையாகிய 'கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை' மங்கள வாழ்த்திலும் ஸ்ரீ தேசிகன் சார்ங்கராஜாவைக் குறிப்பிடுவதால் இம்வெம்பெருமானே கீதை அருளிய கண்ணபிரான் என்று பெரியோர் கூறுவர்.

30. 'பூலோக வைகுந்தம்' என்று கொண்டாடப்படும் தலம் ஸ்ரீவைகுந்தத்தில் இருந்த வைதிக விமாநமே கருவறை விமானமாக அமைந்திருப்பதாலும், கருவறையின் எதிரே பரமபதம் போல் திருமாமணி மண்டபம் உள்ளதாலும் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

31. வானளாவி 146 அடிகள் உயரமுடையதாய், கீழ், தெற்கு, வடக்கு அகலம் 90 அடிகள் கொண்டதாய், மேல் பக்கம் 51 அடிகள் கொண்டதாய் காணப்படும் ராஜகோபுரம் இக்கோயிலின் சிறப்பை உணர்த்துவதோடு, இத்தலத்திற்கு பெரும் பெருமை சேர்க்கிறது.

32. ஸ்ரீ ஆராவமுதன் ஸ்ரீமந் நாத முனிகளின் மூலம் மறைந்திருந்த திவ்விய பிரபந்தங்களை வெளியிட்டருளினார். ஆகவே ஆராவமுதப் பெருமாள் இங்கு ஆராவமுதாழ்வார் என்ற திருப்பெயர் பெற்றார்.

33. மற்ற திவ்விய தேசக் கோயில்களில் உள்ளது போல் இத்தலத்தில் பரமபத வாசல் என்ற தனித்ததொரு வாசல் இல்லை. தக்ஷிணாயன, உத்தராயண தேவதைகளே இருவாசல்களாக உள்ளன.

34. 'மெய்க்காவலுடையார்' என்ற ஒரு அடியார் இக்கோயிலை ஆபத்திலிருந்து காப்பாற்றியதற்காக, அவ்வடியாருக்குத்

திருத்தேரிலிருந்து இறங்கி வந்ததும் பெருமாளும் நாச்சியாரும் தீர்த்த மரியாதை தந்தருளுவர்.

35. வடக்கு திருவுண்ணாழிச் சுற்றில் ஸ்ரீபாதாள ஸ்ரீநிவாஸன் எழுந்தருளியுள்ளார்.

36. பிருகு மஹரிஷியே 'ஹேமரிஷியாக' இத்தலத்தில் தவம் செய்து பொற்றாமரையாளாகிய ஸ்ரீகோமளவல்லித் தாயாரை ஆராவமுதனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

37. 'கன்னியா தீர்த்தம்' என்ற மகாமகக் குளக்கரையில், அமர்ந்திருக்கும் நவகன்னிகைகளும் மேற்கு முகமாக ஸ்ரீகோமளவல்லித் தாயாரை நோக்கிய வண்ணம் அவளருள் வேண்டி நிற்கிற தலம்.

38. இத்தலத்தின் ஸ்ரீ அமுதன் தேர் மிகப் பெரியதாய் புகழ் பெற்றது. சித்திரத்தேர் எனவும் சித்திரைத்தேர் எனவும் வழங்கப்பெறும் தேர்கள் இரண்டுள்ளன. இதோடு வெள்ளி ரதத்திலும் பெருமாள் எழுந்தருளுவார்.

39. திருமங்கையாழ்வார் அமுதனுக்கு, சித்திர ரத பந்தரூபமாக அமையுமாறு 'திருவெழு கூற்றிருக்கை' என்ற பிரபந்தத்தைப் பாடியருளியுள்ளார்.

40. ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவனால், தேர்வடிவில் சித்திரம் அமைக்கப்பட்டு, அச் சித்திரத் தேரினுள் கலியனின் ரத பந்த பாசுரப்பதங்கள் எழுதப்பட்டுள்ளன.

41. ஸ்ரீராமன் ஜடாயுவுக்கு ஒரு தடவை தான் சரமகைங்கர்யம் செய்தார். ஆனால், ஸ்ரீ அமுதன், வருடாவருடம் ஐப்பசி அமாவாசை அன்று ஸ்ரீ லக்ஷ்மி நாராயண சுவாமி என்ற பெரும் பக்தருக்கு தீர்த்த கைங்கர்யம் செய்து வருகிறார் என்பது ஒரு தனிச் சிறப்பு.

42. தமிழ் நாட்டின் நெற்களஞ்சியமாயுள்ள இவ்வூரில் எங்கும் பசுமையும் நீர்வளமும் கொண்ட நிலங்களே காணப்படும். கும்பகோணம் தஞ்சை மாவட்டத்திலேயே சிறந்த வியாபார ஸ்தலம். பித்தளைப் பாத்திரம் பட்டுப்புடவை, பந்தல் அமைத்தல், **வெற்றிலை,** ஈயப் பாத்திரங்கள் முதலிய வாணிபங்களுக்கு மிகவும் புகழ் பெற்றது.

43. முன்பு ஒரு நெருக்கடிக் காலத்தில், இத்தலத்து எம்பெருமானை திருக்கோட்டியூர் பெருமாள் கோயிலில் கல் திரையிட்டு மறைத்துக் காப்பாற்றியதற்காக, இன்றும் நன்றி அறிவித்தலாகத் திருக்கோட்டியூர்

பாசுரம் ஒன்றைப் பெரியோர்கள் அருளிச் செயல் கோஷ்டியில் சேவிக்கிறார்கள்.

44. இங்குள்ள சிங்கச் சின்னம் பொறித்த மண்டபம் 7ஆம் நூற்றாண்டில் பல்லவ மன்னன் மகேந்திர வர்மனால் கட்டப்பட்டதாகும்.

45. வைணவ மத வளர்ச்சிக்கு ஒரு பெரிய மலை போன்று விளங்கிய கிருஷ்ண தேவராயரால் இத்தலம் புதுப்பிக்கப்பட்டது.

46. இங்குள்ள உற்சவ மூர்த்தி சார்ங்கம் என்னும் வில்லைஎப்போதும் திருக்கரத்தில் ஏந்தி இருப்பதால் சாரங்கபாணி என்ற திருநாமம் உண்டாயிற்று. "சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை" என்பது பெரியாழ்வாரின் மங்களாசாசனம்.(திருப்பல்லாண்டு, 12)

47. திருமழிசையாழ்வார் செய்த மங்களாசாசனத்தைக் கேட்டு, அர்ச்சை வரைமுறையையும் மீறி, எழுகின்ற திருக்கோலத்தில் புஜத்தைச் சாய்த்து காட்சி கொடுக்க, "வாழி கேசனே" என்றும், உத்தான சாயியாய் எம்பெருமான் காட்சியளிக்கும் திருக்கோலம்.

48. ஸ்ரீரங்கம் ராஜகோபுரம்(236 அடி உயரமுடையது) முதல் இடத்தையும், 165அடி உயரமுடைய ஸ்ரீ வில்லிபுத்தூர் ராஜகோபுரம் 2ம் இடத்தையும், 150அடி உயரமுடைய திருக்குடந்தை ராஜகோபுரம் 3ம் இடத்தையும் பெறுகின்றன.

49. திருக்குடந்தை ஆராவமுதன் ராஜகோபுரம் பரமபாகவதரான ஸ்ரீ லக்ஷ்மி நாராயண சுவாமி என்பவரால் கட்டப்பட்டது.

50. ஏழு ஆழ்வார்களால் 51 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப் பெற்றும், பஞ்சாயுதபாணியாக ஸௌந்தர்யனாகத் திகழும் ஸ்ரீ ஆராவமுதனைப் போல் பிறிதொரு தேவுமில்லை.

51. சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து புகழ் பெற்ற மூன்று நாயக்க மன்னர்களில் மிகச் சிறந்த 'ரகுநாத நாயக்கர்' என்ற மன்னரின் ஆஸ்தான பண்டிதரும், ஆசார்யருமான ஸ்ரீமத் உபய வே. ஐயா குமார தாதாசார்யர் என்ற பெரும் புலவர் இத்தலத்து எம்பெருமானிடம் அளவு கடந்த ஈடுபாட்டுடன் பற்பல திருப்பணிகளைச் செய்தார். இத்தலத்தில் விசாலமான ஸந்நிதியில் கோயில் கொண்டிருந்த ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சிலர் அங்கிருந்து எழுந்தருளப் பண்ணிப் பெருமாள் கர்பகிரஹத்திலேயே ஏக ஸிம்மாசநத்தில் எழுந்தருளப்

பண்ணினர். தாயாருக்குத் தனி சந்நிதி அவசியம் எனக்கருதி, நாயக்கர் மன்னர் மூலம் சிறு ஆலயத்தை எழுப்பி அங்கு பிரதிஷ்டை செய்வித்தனராம். தாதாசாரியரின் இந்த ஆத்ம ஸ்வரூப கைங்கர்யத்தைப் பாராட்டி, தாயார் சந்நிதிக்கு நேர் எதிரில் குமாரதாதாசாரியார் சுவாமியின் திருவுருவத்தை எழுப்பித்தான் மன்னன். இன்றும் ஸேவிக்கும்படி அழகாக உள்ளது ஸ்ரீ ஆசார்யன் ஸந்நிதி.

### ஸ்ரீ சார்ங்க ராஜனின் திருக்கோயிலமைப்பு

திருக்குடந்தை மாநகரின் மத்திய பாகத்தில் ஸ்ரீ சார்ங்கராஜனின் திருக்கோவில் (திவ்யாலயம்), எம்பெருமானின் செல்வ சிறப்புக்கேற்ப, பலபடி நித்யோத்ஸஸம், நைமித்திகோத்ஸவம் முதலாக அனேக உத்ஸவங்களை உல்லாசமாக உவந்து அனுபவிக்கும்படி பாங்காக அமைந்துள்ள மாட மாளிகை சூழ்ந்தழகாயஸந்நிதி வீதி, கீழ வீதி, தெற்கு வீதி, மேல வீதி, என்கிற கடைவீதி, வடக்கு வீதி எனப்படும் பெரிய வீதி, இவைகளால் சூழப்பட்டும், மிக உன்னதமான கோபுரம், அழகிய மண்டபங்கள், பிராகாரங்கள், திவ்ய விமானங்கள், பெருமாள், தாயார், ஆண்டாள், ஆழ்வார், ஆசார்யர்கள் ஸந்நிதிகள், யாக சாலை, பாக சாலை, திருமடைப்பள்ளி திருப்பள்ளி அறை, திவ்ய புஷ்கரிணீ முதலியவைகளுடன் விளங்கிக் கொண்டிருக்கிறது. இக் கோயிலின் கீழ் மேல் நீளம் அடி 585, கீழ் பக்கம் தென் வடல் அகலம் 221 அடி, மேல் பக்கம் 188 அடி என அமைந்துள்ளது.

### ஸ்ரீசார்ங்கராஜன் எழுந்தருளிய அழகு:

ஸ்ரீரங்கத்து ஸ்ரீரங்கராஜனும், திருவேங்கடத்து திருமலையப்பனும், திருக்குடந்தை ஸ்ரீ சார்ங்கராஜனும் ஒருவரே என்று பூருவாசார்யர்கள் பலகால் பணிப்பர். முன்பு ஒரு கால் சூரியனும், பிரமனும் பகவானைக் குறித்துத் தவம் செய்தனர். தவத்தினால் மகிழ்ந்த பெருமாள் - ஸ்ரீ வைகுந்த விமானம், பிரணவாக்ருதி விமானம், வைதிக விமானம் என்ற மூன்று விமானங்களைப் படைத்து, அம் மூன்றினுள்ளும் மூன்று வடிவத்தில் பெருமாள்அமர்ந்தார். முதல் விமானத்தை பிரமனுக்கும், மூன்றாவது

விமானத்தைச் சூரியனுக்கும் அளித்தார். அவர்களும் அவ்விரு விமானங்களுடன் பெருமாளை வணங்கி வந்தனர்.அதில் சூரியன் மூலமாக அவன் புத்திரன் மனுவிற்கு வைதிக விமானம் கிடைத்தது. அதனை பூலோகத்தில் சரயு நதிக்கரையில் வைத்து வைவச்வதமனு பூசித்து வந்தான். அப்பரம்பரையில் தோன்றிய இக்ஷ்வாகு என்ற மன்னன், மற்றொரு விமானமாகிய பிரணவாகர விமானத்தைப் பிரமனிடம் இருந்து பெற்று, இரண்டையும் பூசித்து வந்தான். இரு விமானங்களும் ஒன்றாகிவிட்டன.

கடைசியில் இக்ஷ்வாகு வமிசத்தில் ஸ்ரீராமன் வரையில் சூரிய குல தேவதையாக எழுந்தருளி இருந்த இவ்விரு விமானங்களும் ஸ்ரீராமன் பட்டாபிஷேகத்துக்குப்பின் பரிசாக விபீஷணனுக்குக் கிடைத்தது. விபீஷணன் அவ்விமானத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு இலங்கை நோக்கிச் செல்லுகையில் திருவரங்கத்தில் அவ்விமானம் எடுக்க இயலாமல் எம்பெருமான் திருவருளால் அழுத்தி அமைந்துவிட்டது. திருவரங்கத்தில் நிலைநின்ற எம்பெருமான், இதிலிருந்து பிரிந்து முன் போல் தனித்து விளங்கும் வைதீக விமானத்துடன் தான் திருக்குடந்தையில் எழுந்தருளி இருக்கப் போவதாக அறிவித்தார். ஆகவே, இந்த விமானத்தின் மூலம் திருவரங்கப் பெருமானே இங்கு எழுந்தருளினார்.

மேலும் பிருகு என்ற மஹாமுனிவர் யார் பரதேவதை? என்று பரதேவதையை நிரூபிப்பதற்கென்று, வைகுண்டம் சென்றார். சத்துவகுண பரீக்ஷைக்காக எம்பெருமான் திருமார்பில் உதைத்த போதிலும், செய்தது தவறு என்று உணர்ந்தனராதலால் மிகவும் வருத்தப்பட்டு மறு ஜன்மம் குஹப் பெருமாளாகவும், அதற்கடுத்த ஜன்மம் ஹேம முனிவராகவும், அவதரித்து மேருமலையில் நெடுநாள் கடுந்தவம் செய்து வந்தார். திருமால் காட்சி தர, முனிவரும், திருமாமகளே தனக்குப் புத்ரியாக ஆக வேண்டும். எம்பெருமான் மருமகனாக ஆக வேண்டும். தனக்கு ஸாயுஜ்ய பதவியையும் அளிக்க வேண்டும் என்று மூன்று வரங்களை வேண்டினார், எம்பெருமானும் முனிவர் கோரின வரமருளினார்.திவ்விய க்ஷேத்-திரங்களைச் சேவித்துக் கொண்டு, காவிரி நதிக்கரையில் முன்பு பிரமன் வேள்விகளால் பல காலம் ஆராதித்த வனத்தில் பொன்மயமான தாமரை

முதலான மலர்களுடன் கூடின தாமரையின் நடுவில் தாமரையாளான அழகிய தங்கக் கொடி போன்று விளங்கும் "கோமள வல்லி" எம்பெருமானை அடைய தவம் செய்த நிலையில் இருப்பதாகக் கூறி, அவளைத் தம் தவப்புதல்வியாகப் பாவித்து பரிபாலிக்கும்படி உபதேசித்தார். முனிவரும் பொற்றாமரையை அடைந்து, கோமள வல்லியையும் கண்டு மகிழ்ந்து, அவளைப் புதல்வியாக பாவித்து, பொற்றாமரையில் நீராடி, அதன் வடகரையில் பாரிஜாத மரத்தடியில் அமர்ந்து அருந்தவம் புரிந்தார்.

எம்பெருமானும் ப்ரணவாகார விமானத்திலிருந்து, இதுவரை சேர்த்து விளங்கின 'ஸோமச் சந்தம்' என்கிற வைதிக விமானத்துடன் வெளிப்பட்டு, பிரம்மாதி தேவர்கள் சூழ்ந்து தோத்திரம் செய்யவும், மகர ஸங்கிரமண புண்ய காலமென்கிற தை மாதப் பிறப்பன்று, சூரியன் ஆகாயத்தின் நடுவில் தோற்றும் நடுப்பகல் வேளை, வ்ருஷப லக்னத்தில் கோடி ஸூர்ய ப்ரகாசமான, திருமேனியுடன் பொற்றாமரைக்கயக் கரையில் ஸ்ரீ கோமள வல்லிக்கும், ஹேமமகர்ஷிக்கும் காட்சி கொடுத்தருளினான். அந்த க்ஷணமே கோமள வல்லித் தாயாருக்கும் ஸ்ரீ சார்ங்க ராஜனுக்கும் திருக்கல்யாண வைபவம் நடந்தேறியது.

ஹேம முனிவர், பிராட்டியும் பெருமாளுமான திவ்விய சேர்த்தி இந்த க்ஷேத்திரத்தில் கல்பகோடி காலம் காணக கிடைக்கவும் பலப்பல உற்சவங்களும் கண்டருள வேண்டும் என்று வேண்டினார். ஸ்ரீ ஆராவமுதனும் உவந்து அருள்புரிய, எம்பெருமான் எழுந்தருளின தலத்திலே கோயில் அமைத்து, மகர ஸங்க்ரமண காலத்தைத் திருத்தேர் தீர்த்தவாரி தினமாக வைத்து பிரம்மோத்ஸவத்தையும் ஹேம புஷ்கரிணியில் தீர்த்தவாரியையும் நடக்கும்படி பண்ணி ஹேம முனிவரும் ஆராவமுதமான அவன் அனுபவத்தில் அரைக்கணமும் அகலாது ஈடுபட்டிருந்தார்.

ஹேம முனிவரால் ஆதி (முதன் முதல்) பிரம்மோத்சவம் நடத்தப்பட்ட பிறகு பிரமன் முதலான தேவர்கள், ஸ்ரீ சார்ங்கராஜனைப்

பணிந்து சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரத்தில் திருத்தேர் முதலியவை அமையுமாறு மற்றொரு மஹோத்ஸவத்தையும் நடத்தி அனுபவித்தனர்.

காலநேமி முகாந் தைத்யாந் ஜித்வா சார்ங்கதர: ப்ரபு: ।
போகீந்த்ர சயநே திவ்யே சயாந:கமலேக்ஷண: ॥
ச்ரியா பூம்யா ஸமாயுக்த: தத்விமாநேச்வர : ப்ரபு: ।
ஸர்வ லோக ஹிதார்த்தாய கும்பகோணாபிதம் சுபம் ॥
மாகரே ஸங்க்ரமே புண்யே வ்ருஷலக்நே சுபாவஹே ।
மத்யங்கதே திநகரே தத்விமாநேந ஸம்யுத: ॥
பத்மாயா: சைவ ஹேமஸ்ய ப்ரத்யக்ஷோபூத் ததாத்விஜ ॥

இவை பவிஷ்யோத்தர புராணம் க்ஷேத்ர கண்டத்தில் ப்ரஹ்ம-நாரத ஸம்வாதமாக அமைந்த "கும்பகோண மாஹாத்ம்யம்" 49வது அத்தியாயத்திலுள்ளவை.

**திருத்தலக் குறிப்புகள்:**

| | |
|---|---|
| மூலவர்: | ஸ்ரீ சார்ங்க பாணி, ஸ்ரீ ஆராவமுதன், ஸ்ரீ அபர்யாப்தாமிருதன், ஸ்ரீ ஆராவமுது, குடந்தை ("குடமெடுத்தாடிய எந்தை" என்ற சொற்றொடரின் சுருக்கமே குடந்தை என்று ஆனது. பெருமாள் திருநாமமும் "குடந்தை" என்பர்) ஸ்ரீ சார்ங்கராஜன், ஸ்ரீ சார்ங்கதரன், ஸ்ரீசார்ங்கேசன். |
| மூலவர் திருத்தோற்றம்: | இரு திருக்கரங்களுடன், வலது புஜத்தைத் திருமுடியின் கீழ் அமர்த்தி, அழகு வெள்ளம் அலை கொள்ள, கிழக்கே திருமுக மண்டலத்துடன் உத்தான சயனத்தில் பாம்பணை மீது பள்ளி கொண்டருளும் திருக்கோலம். |
| உற்சவர் திருத்தோற்றம்: | நான்கு திருக்கரங்களுடன், சங்க, சக்ர, கதை, சார்ங்க, கட்கம் (வாள்) என்ற பஞ்ச திவ்விய ஆயுதங்களுடன், அபயம் |








அளிக்கும் திருக்கை முத்திரையுடன் நின்ற திருக்கோலம் பூண்டு குருமணித் திரளோ? இன்பப் பாவின் இன்சுவையோ? தேனோ? பைம்பொன் சுடரோ? திகட்டாத இன்னமுதோ? என்னும்படி எங்கும் காணக் கிடைக்காத அழகு நிறைந்த திருமேனியுடன் எழுந்தருளியுள்ளார்.

நாச்சியார் திருநாமம்: ஸ்ரீ கோமள வல்லித் தாயார் (அதிகாரார்ச்சை)

நாச்சியார் திருத்தோற்றம்: நான்கு திருக்கரங்களுடன் அருளே வடிவாய், அழகே தேக்கமாய், அருள் சுரக்கும் புன் முறுவலுடன் கிழக்கே திருமுக மண்டலத்துடன் ஆராவமுதன் கருவறைக்கு வலப்பக்கத்தில் தனிக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார்.

தீர்த்தம்: ஹேம புஷ்கரிணி, பொற்றாமரைக்கயம், காவிரி, அரிசொல்லாறு எனப்படும் அரசலாறு.

விமானம்: வைதிக விமானம்

கண்டவர்கள்: ஹேம மகரிஷி, திருமழிசைப் பிரான்

திருவாராதன முறை: பாஞ்சராத்திர ஆகம முறை

மங்களாசாசனம்: பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், பூங்கோதை (ஸ்ரீஆண்டாள்), திருமங்கை ஆழ்வார் என 7 ஆழ்வார்கள்.

**ஸ்ரீ ஆராவமுதன் வைபவம்**

த்ரிம்சத் த்ரிகோடி வஸுருத்ர திவாகராதி
தேவாதி தேவகண ஸந்தத ஸேவ்ய மாநம் ।
அம்போஜ ஸம்பவ சதுர்முக கீயமாநம்
வந்தே சயாந மிஹ போகிநி சார்ங்கபாணிம் ॥

இந்த கும்பகோண மாஹாத்ம்ய மங்கள சுலோகத்தின் முதல் பகுதியில், இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் எட்டு வஸுக்கள், பதினொரு உருத்திரர்கள், பன்னிரண்டு சூரியர்கள், இரு அச்வினீ தேவதைகள், முதலான முப்பத்து முக்கோடி தேவர்களாலும், அசுரர்களாலும் எப்பொழுதும் வணங்கப் பெற்றவர் என்றும், சுலோகத்தின் பிற்பாதியில் நாபிக்கமலத்துதித்த நான்முகன் தன் நான்கு முகங்களால் நான்கு வேதங்களையும் முன்பின் கிரம தாரதம்யமின்றி ஒரே காலத்தில் பாடிக் கொண்டிருக்கும் பெருமையையும், ஸ்ரீஆராவமுதன்-எம்பெருமான் திருக்குடந்தையில் வைதிக விமானத்தில் ஆதிசேஷன் மீது பாம்பணையில் சயனித்துள்ள அழகை வணங்குவதாகவும் காட்டப்பட்டுள்ளது.

இந்த சுலோகத்தைப் போலவே, பூதத்தாழ்வார் பாசுரத்திலும் அமைந்துள்ள அழகைக் காண்போம்.

எங்கள் பெருமான் இமையோர் தலைமகன் நீ
செங்கண் நெடுமால் திருமார்பா - பொங்கு
பட மூக்கினாயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய்
குடமூக்கில் கோயிலாக் கொண்டு.

இயற்பா - இரண்டாம் திருவந்தாதி, 97.

திருமகளை திருமார்பில் கொண்ட எம்பெருமானே! சிவந்த திருக் கண்களுடன் நித்திய சூரிகள் தலைவனாயும், எங்கள் பெருமானாயும் உள்ள நீ, குடமூக்கு என்னும் கும்பகோணத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ளாய், உயர்ந்த படங்களையும், மூக்கையும், ஆயிரம் வாய்களையும் உடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட எம்பெருமானே!

இந்த க்ஷேத்திரமாகிய குடத்தில் நிறைந்து விளங்குகின்ற எம்பெருமானாகிய ஆராவமுதம், உள்ளடங்காது வழிந்து எங்கும் வெள்ளமிட்டுக் கொண்டிருக்கிற அழகை தலபுராணத்தில் கூறியுள்ளபடி, வெள்ளத்தில் மிதந்த அமுத கலசம், சாய்ந்து மூக்கின் வழி வெளியோடின நிகழ்வோடு ஒப்பிட்டுப் பார்க்கத் தோன்றுவதோடு, 'குடமூக்கு' என்ற திருநாமம் தலத்திற்குப் பொருந்திய அழகும் காட்டப்படுகிறது.

### ஸ்ரீ சார்ங்கபாணி ஸ்வாமி திருக்கோயில்

இக்கோயில் கும்பகோணம் ஸர்வே 19வது வார்டு வரிக் கணக்கின்படி 2வது வார்டிலமைந்திருக்கிறது. புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கில் 7பர்லாங்கும், பின் வடக்கே ஒரு பர்லாங்கும் வந்தால் தேவாலயம் காணப்படும்.

### ஸ்ரீ சார்ங்கராஜன் திருக்கருவறை - பெரிய கோபுரம்

இந்த ராஜ கோபுரம் பெருமாள் திருக்கருவறையின் முன் பக்கமான கிழக்கேயிருந்து உள்புகும் வழியில் அரம்பத்திலுள்ளது. பெரிய வாசலுடன், முதல் நிலையில் கிழக்குப் பக்கத்தில் தோன்றுகிற அழகியபெரிய வடகலைத் திருமண் காப்புடன் சுற்றிலும் ஒரு அங்குலம் கூடஇடம் விடாது நிறைந்துள்ள புராணக் கதைகளைச் சித்தரிக்கும் சித்திரப் பதுமைகளுடனும் பதினொரு நிலைகளுடனும் கூடிய கம்பீரத் தோற்றமுடையது.

'கும்பகோணத்தில் கோபுரம் அழகு' என்ற பழமொழியை ரசிக்க, உள்ளபடி அனுபவிக்க, உள்பக்கமாகக் கீழிருந்து பதினொரு மாடிவரையில் எளிதில் ஏறக்கூடிய மரப்படிக்கட்டுகள் உண்டு. கோபுரத்துக்கும் கோபுரம் தாங்கிய பொம்மைகளுக்கும் நடுவே பிரதட்சிணமாக வந்தால், வெகு தூரத்திலுள்ள நாடு, சோலை, நதி முதலானவைகளைப் பார்த்துக் கொண்டே சுற்றி வரும்படியான அமைப்பை உடையது. மிகப் பெரிய பதினொரு சிகரங்களை உடையது.

கோவிலுக்குள் வந்து பெருமாள், நாச்சியார் முதலானவர்களைச் சேவிக்க முடியாதவர்களுக்கும் காணலாம்படி, வெகு தூரத்தில் இருப்பவர்களும் கண்டு சேவிக்கும்படி கோவிலுக்கு வந்து பலபடி கைங்கர்யம் பண்ணிப் பெறக் கூடியதான பெரிய பாக்கியத்தையெல்லாம் தரவல்லது இக்கோபுரம். பெரியோர்கள் 'திருக் கோபுர நயினார்' என்று திக்கு நோக்கிக் கை தொழும் வண்ணம் செய்விப்பது. ஆராவமுதனிடம் காதல் கொண்ட பாகவதோத்தமரால் மட்டுமே இந்த கோபுரக் கைங்கர்யம்

பண்ணப்பட்டிருக்கும் என்று மனத்தில் ஆராவாரம் எழச் செய்வது. இத்தகைய அழகிய, கம்பீர கோபுரத்தின் உயரம் 146 அடி. கீழ்ப்பக்கம் தென் வடல் அகலம் 90 அடி மேல் பக்கம் 51 அடி என்ற அளவில் அமைந்துள்ளது. ஸ்ரீரங்க கோபுரம் முதலிடமும், ஸ்ரீவில்லிபுத்தூர் கோபுரம் இரண்டாமிடமும், ஸ்ரீஆராவமுதன் கோபுரம் மூன்றாமிடமும் வகிக்கின்றன.

### எம்பெருமானின் திவ்விய திருநாமம்

கிடந்தமாலாய், கதிராயிரமிரவி கலந்தெரித்தால் ஒத்த நீள் முடியும், இருபரிதி இசைந்த மகுடமும், எழில் மதி திகழ்ந்த வதனமும், மகர நெடுங்குழைக் காதுகளும் கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடிய நீண்ட அப்பெரியவாய கண்களும், சுருதி ஸுரபி நிஃச்வாஸமான நாஸாவம்சமும், திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ என்னும்படியான செய்யவாயும், அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால்வரை முற்றும் உண்ட கண்டமும், கற்பகக் காவன நற்பல திருத்தோள்களும், அலர்மேல் மங்கை இறையும் அகலகில்லேன் என்று உறையும்படியான திருவார மார்வமும், காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும் ஆராவயிற்றான் என்னும் படியான திருவுதரமும், உய்ய உலகு படைக்க வேண்டி நான்முகனைத் தோற்றிய திருவுந்தியும், அழகு வெள்ளத்திற்கு அணை கட்டினார்ப் போலே இருக்கும் திருவெண் முப்புரிநூலும், பொன்னொத்த பீதகவாடையும், பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள் ஒத்திட்டிருந்தவா என்னும்படி பொது நின்ற பொன்னங்கழல்களும், "உமதடிகள் அடைகின்றேன் என்று ஒரு கால் உரைத்தவரை அமையும் இனி என்பவர் போல் அஞ்சல்" அஞ்சல் அஞ்சல் என்று உணர்த்தும் கருணை வெள்ளம் புரண்டெழும் கடாட்சமும், வலது திருக்கரத்தைச் தலையின் கீழ்வைத்து, நெடிது உயர்ந்த கிரீடத்தை சூசகமாகக் காட்டி தன் பரத்துவ, ஸ்வாமித்துவத்தைக் காண்பிக்கும் நிலையும், இடது திருக்கரத்தை, இடது முழந்தாளில் வைத்து, சேவிக்க வரும் சேதனனின் ஆன்மாக்களின் வருத்தம் தீர, தன் திருவடியைப் பற்றுமாறு காட்டி, ஸௌலப்யத்தின் (எளிமையின்) எல்லை நிலமான துயரறு சுடரடிகளைக் காட்டிக் கொடுக்கும் கருணையும், தன் கிடை

அழகெல்லாம் வெள்ளமிடும்படி கிழக்கே திருமுகம் நோக்கி பாம்பினணை மேல் பள்ளி கொண்டுள்ளார்.

மூலவருக்கு முன்புறம் நான்கு திருக்கைகளுடன், பொன்னிவர் மேனி மரதகத்தின் பொங்கிளஞ் சோதி என்னும்படியான கம்பீர்யத்துடன் ஐந்தாயுதங்களைத் தரித்து அபய முத்திரையுடன் நின்ற திருக்கோலம் கொண்டு, மூலவரே, உற்சவ மூர்த்தியாக மற்றொரு திவ்யரூபத்துடன் விளங்குகிறார்.

மற்றபடி யாக பேரர், பலி பேரர், ஸ்நான பேரர், சயநார்ச்சை ஆகிய அர்ச்சா மூர்த்தங்களும் உற்சவ மூர்த்தியின் இடது பக்கத்தில் எழுந்தருளியுள்ளனர். அங்கேயே ஸந்தான கோபாலன் என்கிற பெருமாளும் சேஷசாயியாய் ஸேவை ஸாதிக்கிறார். ஸந்ததி வேண்டுமவர்கள், அவரைக் கையில் ஏந்தினால் ஸந்ததி உண்டாகும் என்பது நம்பிக்கை.

இப்படி, மூலவராய் கிடையழகைக் காட்டிக் கொண்டும், உத்ஸவராய் நிற்கும் அழகோடு "பொன்னார் சார்ங்கமுடையஅடிகள் என்கிறபடி, சார்ங்கமேந்தும் அழகைக் காட்டிக் கொண்டும் ஸேவை ஸாதிப்பதால், ஸேவித்தது போதும் என்ற எண்ணம் ஏற்படாதபடி, தின்னத் தின்னத் திகட்டும் அமுதம் போலன்றி, மேலும் மேலும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையையே ஏற்படுத்துவதால் 'ஆரா அமுது' என்று தீந்தமிழிலும், 'அபர்யாப்தாம்ருத:' என்று வடமொழியிலும் இவ்வெம்பெருமானுக்குத் தெள்ளியார் திருநாமமிட்டு திக்கெட்டும் புகழ்ந்து நிற்கிறார்கள்.

"ஸுதா பாநேஷு பர்யாப்தி: யதா நாஸ்தி ததைவது ।
ஸேவகாநாம் சார்ங்கபாணே:நத்ருப்திர்ஹி பவந்திஹி ।
தஸ்மாத் த்மீச்வரம் லோகே அபர்யாப்தாம்ருதம் விது: ॥"

என்று கும்பகோண மாஹாத்ம்யம் 52-அத்யாயத்தில் எம்பெருமானின் திருநாமம் விளக்கப்படுகிறது.

"த்ராவிட ச்ருதி தர்சக:" என்ற திருநாமம் அஷ்டோத்தர சதநாமாவளியில் சொல்லுவதன் காரணம் நாலாயிர திவ்ய பிரபந்தத்தைத்

தொகுப்பதற்கு இப்பெருமானே காரணமாக இருந்ததாகக் கூறும் ஐதிஹ்யம். நாலாயிர திவ்விய பிரபந்தத்தைத் தொகுத்த ஸ்ரீமந் நாதமுனிகள் இத்திவ்யதேசத்தை தரிசிக்க வந்தபோது, சில பக்தர்கள் "குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும் மழலை தீர வல்லார் காமர் மானேய் நோக்கியற்கே" என்ற பல சுருதி பாசுரத்தின் கடைசி இருவரிகளை இசைத்துக் கொண்டு வந்ததைக் கேட்டார். ஆயிரம் பாக்களுண்டோ! என்று வியந்து, அவைகளை ஒன்றுவிடாமல் சொல்லுமாறு வேண்டினார். அதற்கவர்கள் இந்த பத்துப் பாசுரங்கள் தவிர, வேறு எந்த பாசுரமும் தமக்குத் தெரியாதென்றும் கூறினர். பாடலின் முடிவில் 'குருகூர் சடகோபன்' என்றுள்ளபடியால் குருகூருக்குச் சென்று அங்குள்ளாரை வினவினார். அங்குள்ளோரும் 'அறிந்திலோம்' என்று தெரிவித்தனர். ஆயினும் குருகூர் சடகோபனுக்கு மதுரகவிகள் என்ற சீடன் இருந்ததாகவும், அவர் திருக்கோளூரைச் சேர்ந்தவரென்றும் சொன்னார்கள்.திருக்கோளூரை அடைந்து, மதுரகவிகளின் வம்சத்தவரான பராங்குச நம்பியைஅணுகி, வினவ, அவரும் மதுரகவிகள், நம்மாழ்வார் விஷயமாக இயற்றிய 'கண்ணிநுண்சிறுத்தாம்பை' 12000 தடவை அனுஸந்தித்தால் நம்மாழ்வாரை தரிசித்துப் பெறவாய்ப்புண்டு, என்றார்.

ஸ்ரீமந் நாதமுனிகள் கண்ணிநுண் சிறுத்தாம்பு12000 தடவை ஸேவித்து நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திருவாய்மொழி ஆயிரத்தோடு, மற்றைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களான மூவாயிரமும் பெற்றார். திருமங்கையாழ்வார் காலம் வரை ஆழ்வாரின் அருளிச் செயல்கள் அனுசந்திக்கப்பட்டு வந்தாலும், பின் நெடுங்காலம் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் மறைந்திருந்தன. 'ஆராவமுதே' என்கிற திருவாய்மொழியை காப்பாற்றி வைக்காவிட்டால் திவ்வியதேசங்களும், அவற்றின் பெருமைகளும் அறிய இயலாது போயிருக்கும். ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு மனத்தில் உந்துதலை ஏற்படுத்தி, தமிழ்த் தொல்லுலகிற்கு நாலாயிரத்தையும் வெளியிட மூல காரணம் நம் ஆராவமுதனே! ஆகவே 'த்ராவிட ச்ருதி தர்சக:' என்ற திருநாமம் ஏற்பட்டது.

'ஆராவமுதன்', 'ஆராவமுது' என்பதற்கு கோயில் அர்ச்சகர் அருளின விஷயம்: முற்காலத்தில் கொள்ளையர்கள் கண்ணமிட்டு தம் வருகையை முன்பே அறிவித்துவிட்டு வருவர். அவ்வாறே ஸ்ரீசார்ங்கபாணிப் பெருமாள் கோவிலை கொள்ளையிட வருவதாக கடுதாசி வர, அர்ச்சகர்கள் எம்பெருமானிடம் முறையிட்டழுதனர். அசரீரியாய் ஒலித்த குரல், எம்பெருமான் ஸ்ரீ சார்ங்கபாணியின் திருமுன்பே மிக உயர்ந்த விசாலமான கங்காளங்களில் பலவித ஹோரைகள் செய்து கொதிக்க கொதிக்க வைத்து பூட்டிவிட்டு, சாவியை திரு இடையில் வைத்துவிட்டுச் செல்லுமாறு சொன்னது. அர்ச்சகர் ஸ்வாமிகளும், பரிசாரகர்களும் முன்னிரவில் மிகவும் சூடாக தளிகைகளை செய்து எம்பெருமான் உரைத்தபடியே வைத்துச் சென்றனர். பின் இரவில் வந்த கொள்ளையர் குழாம் பூட்டை உடைத்து, உள் நுழைந்து எம்பெருமானின் திவ்ய திருவாபரணங்களைக் களைந்தெடுக்க எண்ணம் கொண்டு கங்காளங்களை நகர்த்தக் கை வைத்த போது, அவர்களால் அந்த உஷ்ண அலைகளை மீறிச் செல்லவும் முடியவில்லை. பாத்திரங்களை நகர்த்தவும் முடியவில்லை. எம்பெருமானை எட்டவும் முடியவில்லை. விடியும் வரை முயற்சித்து, ஏதும் செய்ய முடியாது வெறுமனே திரும்பினர். அமுதனிடம் இருந்த சாவிக் கொத்து அர்ச்சகர்கள் வைத்தபடியே இருந்தது. மறுநாள், பதட்டத்துடன் வந்த கோயில் பரிகரங்கள் அமுதுபடிகள் இன்னும் அதே கொதிநிலையுடன் இருப்பதைக் கண்டு, ஆறாத அமுதே! என்று வியந்து, எம்பெருமானின் திருவருளைக் கொண்டாடினர். நிலைமாறக்கூடிய அமுதுகள் ஆராவமுதனின் அருளால் ஆறாத அமுதுகளாய் இருந்ததை இன்றும் நினைவு கூர்ந்து, கண்ணீர் மல்கி, அனுபவித்த வண்ணம் உள்ளனர்.

## ஆராவமுதன் திருச்சந்நிதி

ஆராத அமுதமான இவ்வெம்பெருமான் அழகில் ஈடுபட்டு, மூலவர், உற்சவர் இருவர்களுடைய இருபக்கங்களிலும், ஸ்ரீதேவியும், பூதேவியும் எழுந்தருளியிருக்கிறார்கள். சுற்றிலும் முப்பத்து முக்கோடி தேவர்கள் துதி செய்து கொண்டிருக்க திருநாபிக் கமலத்தில் திசைமுகன் தோத்திரம் செய்கிறான். திருமுடிப் பக்கத்தில், "அத்ரி,ப்ருகு,குத்ஸர்,

வசிஷ்டர், கௌதமர், காச்யபர்,ஆங்கிரஸர் என்கிற ஏழு ரிஷிகளும், திருவடிவாரத்தில் கங்கை, யமுனை, கோதாவரீ, ஸரஸ்வதீ, நர்மதை, ஸிந்து, காவேரி என்கிற ஏழு நதிகளும் ஏத்தி நிற்கிறார்கள். இவ்வடிவழகுடனே ஹேம மஹரிஷிக்குச் சேவை ஸாதித்தான்.

**திருமழிசைப்பிரான் மங்களாசாசனம்**

*பின் ஒருகால், திருமழிசையாழ்வார் எழுந்தருளி எம்பெருமான் சயனித்திருப்பதை ஸேவித்து*

*'நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞாலம் ஏனமாய்*
*இடந்த மெய் குலுங்கவோ! விலங்கு மால் வரைச்சுரம்*
*கடந்த கால் பரந்த காவிரிக் கரைக் குடந்தையுள்*
*கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழி கேசனே!*

*(திருச்சந்த விருத்தம், 21)*

*என்று பாடியவுடன், அவருக்கு அருள் செய்துஎழுந்திருக்கும்பாவனை கொள்ள, 'வாழி கேசனே!' உனக்குமங்களம்! எம்பெருமானே, உன்னுடைய ஸௌலப்ய குணத்தை இவ்வளவு வெளிப்படுத்தியது போதும்.இப்படியே இங்கு, என்றும், எவர்க்கும் ஸேவை தந்தருள வேண்டுமென்ன, அவ்வண்ணமே அழகுடனே இன்றும் நமக்கு ஆராவமுதன் ஸேவை தந்தருளுகிறான்.*

**ஆழ்வார்பிரான் ஆதல்**

*ஆழ்வார் சொன்ன வண்ணம் எழுந்திருந்ததும், போதும் என அதோடு நின்றும், தன்னுடைய ஸௌலப்ய குணத்தை உலகினர் கொண்டாடும்படியான உபகாரம், திருமழிசையாழ்வாரால் தமக்கு ஏற்பட்டதென்றும், நினைத்தவனாய், தன்னதான, பிரான் என்னும் பெயரை ஆழ்வாருக்கு வழங்கி, திருமழிசைப் பிரான் என்று அவரை அனைவரும் கொண்டாடும்படி செய்தருளினான்.*

**ஸந்நிதியில் மஹாமண்டபம்**

கர்ப்ப கிருஹமும், அடுத்து அர்த்த மண்டபமும், ஸந்நதி வாசலின் இருபக்கத்திலும் த்வார பாலகர்களும்,பெருமாளுக்கு நேர் எதிரில், நிலைக் கண்ணாடிபோல் வேதமயனாக விளங்கும் பெரிய திருவடி என்னும் கருத்மான் (கருடன்) எழுந்தருளியுள்ளார். கிழக்குப் பார்த்த ஆலயமாதலால், ஸந்நிதி வாசலான மேற்குப் பக்கத்திலுள்ள துவாரபாலகர்களுக்கும், கிழக்குப் பக்கத்திலுள்ள கருடனுக்கும் நடுவே ஒரு பெரிய மண்டபம் அமைந்திருக்கிறது. அழகிய வேலைப் பாடுகளை உடைய பன்னிரண்டு கம்பங்களைக் கொண்டது.

பன்னிரு நாம ப்ரதிபாத்யனும், பன்னிரு அக்ஷரங்கள் கொண்ட வாஸுதேவ மந்த்ர பிரதிபாத்யனான பரமபுருஷனுக்கு பன்னிரு ஸ்தம்பங்களைக் கொண்ட மண்டபம் அமைந்துள்ளது. இந்த மஹாமண்டபத்தை 'திருமாமணி மண்டபம்' என்பர். ஸ்ரீ வைகுந்தத்தில் உள்ள மண்டபத்தை மாமணி மண்டபம் என்பர். கருடன் ஸமீபத்தில் கல் சாளரம் ஒன்றுண்டு.

**பெருமாள் ஸந்நிதிக்கு இரு வாசல்கள்.**

பெருமாள் ஸந்நதி உள் செல்ல தென் பக்கத்தில் மேற்கே பார்த்து ஒரு வாசலும், வடபக்கத்தில் ஒரு வாசலும் என இருவாசல்கள் உள்ளன.

ஆடிமுதல் மார்கழி வரை தெற்கே (தக்ஷிண) உள்ள வாசலால் செல்லவேண்டுமாதலால் அது தக்ஷிணாயன வாசலானது.

தை முதல் ஆனி வரை வடக்கே உள்ள வாசலால் உள்ளே செல்ல வேண்டுமாதலால் அது உத்தராயண வாசலானது.

பெருமாள் முதலில் வெளியில் எழுந்தருளியது தக்ஷிணாயன வாசல், வெளி வந்ததும் இலக்குமியுடன் கூடித் திருக்கல்யாணம் நிகழ்ந்த படியினாலும் தக்ஷிணாயன வாசல், 'கல்யாண வாசல்' என்ற பெயரினைப்

பெற்று விளங்கும். உலகில் உத்தராயணத்தை உத்தமமாகவும், தக்ஷிணாயனத்தை அதைவிடத் தாழ்ந்ததெனவும் உரைப்பார்கள்.

அவ்விரு அயந தேவதைகளும், ஸ்ரீ வைகுண்ட நாதனிடம் சென்று இருவருக்கும் ஒற்றுமையான பெருமையையும், நிலையுள்ளதான கீர்த்தியையும் அருள் புரிய வேண்டுமென பிரார்த்தித்தனர். அயந தேவதைகளை திருக்குடந்தைக்குச் சென்று ஸ்ரீ சார்ங்கராஜன் ஸந்நிதியில் இரு வாசல்களாக இருந்தால் விரும்புகிற நன்மை அமையும் என்றும் திருவாய் மலர்ந்தருள,அப்படியே இத்தலத்தை நாடி வந்து, இரு வாசல்களாக இருந்து, கோரின நன்மையை பெற்று மகிழ்ந்தனர் என்று தல புராணம் கூறுகிறது.

இத்தலத்தில் இரு அயனங்களிலும் எவருக்குச் சரீரம் விடுபட்டாலும், அவருக்கு எம்பெருமான் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அளிக்கின்றான். இவ்வாறு எம்பெருமான் செய்கிற செயலைச் சிந்தை செய்து "அயந த்வித யோத்க்ராந்த ப்ராணி மோக்ஷ ப்ரதாயகாய நம:" (இரு அயனங்களிலும் சரீரத்தை விட்டு வெளிக்கிளம்பின பிராணிகளுக்கு மோக்ஷம் கொடுக்கிற பெருமானான உனக்கு நமஸ்காரம் ஆகுக) என்ற நாமத்தால் இன்றும் ஆராதிக்கின்றனர்.

இருவாசல்களுக்கு ஏறிச் செல்லப் படிகளும் ஒன்பதாக அமைந்திருப்பதை, ஸ்வாமி தேசிகன் பரமபதம் ஏற ஒன்பது படி காட்டின, பரமபத ஸோபாநம் என்று அருளிய க்ரந்தத்தின் நினைவும் ஏற்படுகிறது.

**வெண்ணெய் ஹநுமார்**

உத்தராயண வாசலால் உள்ளே சென்றவுடன் வழியில் வடக்குப் பார்த்து ஹநுமார் எழுந்தருளியிருக்கிறார். தக்ஷிணாயந உத்தராயண வாசற்படிகளுக்கும் மேலே அழகிய கோபுரங்கள் உள்ளன.

## வைதீக விமானத்தின் தோற்றம்

பெரிய ரதம் போன்ற வடிவுடையது. யானை, குதிரைகள் கட்டப்பட்டு, நான்கு சக்கரங்களுடன், வெகுதூரத்திலிருந்து வேகத்துடன் ஓடிவந்து இங்கே சேர்ந்தது போல், குதிரைகளும் யானைகளும் ஓடிவருகின்ற கோலத்தில் மிக அழகான சித்திரப் பதுமைகள் சூழ்ந்ததாய்க் காணப்படுகிறது. பெருமாள்அழகிய விமானத்துடன் முதலில் அயோத்தியை அடைந்து, பின் அரங்க மாநகர் வந்தமர்ந்து, கடைசியாக குடந்தை மாநகரைச்சேர்ந்தனன். இவனுக்கு உற்சவம் நடத்தி, அதிலும் ரதோத்ஸவம் பண்ணுவதாக மஹாரதமாக அமைத்துள்ளனர். திருமங்கையாழ்வார் இத்திருவமைப்பைக் கண்ணுற்றே ரத பந்தமாக, ஆராவமுதாழ்வானுக்காகவே தனித்தொரு வகையாக சித்திரக் கவிதையாக திரு எழுகூற்றிருக்கையை அருளியதாகப் பூருவாசார்யர்கள் பகர்வர். அழகிய கர்ப்ப க்ருஹத்தின் மேலே கோபுரம் போன்ற வடிவில் பல சித்திரப் பதுமைகளுடன் அமைந்த வைதீக விமானம் ஸ்வர்ண மயமான மூன்று கலசங்களுடன் விளங்குகிறது.

## விமானத்தைச் சுற்றியுள்ள அழகிய சிற்பங்கள்

தக்ஷிணாயநப் பக்கத்தில் கிழக்கேயிருந்து 1. தூணைப் பிளந்து தோன்றிய நரஸிம்மன் 2. இரணியனை எதிர்க்கும் கோலம் 3. அவனை மடியிடை வைத்து மார்பை முன் கீண்ட மாயன் 4.யோகாசனத்திருக்கோலம்.

மேற்கே 1. உலகளந்த பெருமாள் 2. பரமபத நாதன் 3. கஜேந்திர ஸம்ரக்ஷணத்திற்காக கருடவாஹநத்தில் எழுந்தருளிய தோற்றம். 4. வேணுகோபாலன்.

கிழக்கே சிறிய முற்றத்திற்கும் அதன் நடுவேயுள்ள கிணற்றுக்கும் தென்புறம் விமானத்துடன் ராமன் ஸந்நிதி உள்ளது. ராமன், இலக்குவன், பிராட்டி, அனுமான் எழுந்தருளியுள்ளனர். இந்த சிறிய முற்றத்திலிருந்து தான் வைதீக விமானம் ஸேவையாகும். இவ்விடம் தோற்றமும் மிக

அழகான.அப்படியே வலமாகக் கீழ்புறம் வந்தால் ஜய விஜயர்கள் என்கிற பெரிய துவார பாலகர்களிருவர் எழுந்தருளியிருக்கிறார்கள். உள் செல்லுமவர்கள் இங்கும் சேவித்து விட்டே செல்வார்கள்.

**கோமளவல்லித் தாயார் ஸந்நிதி**

பெருமாள் ஸந்நிதியின் வலது பக்கத்தில், தக்ஷிணாயன வாசலை யொட்டி சற்றுத் தென் மேற்கில், கிழக்கு முகமாகத் தாயார் சன்னிதி அமைந்திருக்கிறது. இச்சன்னிதியில் மூலவர், உத்ஸவர், தீர்த்த பேரர், என்கிற கிரமத்தில் மூன்று படியாகத் தாயார் திவ்யரூபம் கொண்டு விளங்குகிறார்.

கோமள ஸ்வர்ண வல்லீவ த்ருச்யதே மநுஜைரபி ।
தஸ்மாத் கோமளவல்லீதி ஸர்வ லோகேஷு விச்ருதா ॥

என்று கும்பகோண மாஹாத்ம்யம் 46ம் அத்யாயத்தில் ஸாதாரண மனிர்களால் ஸேவிக்கப்படச் செய்தேயும், அழகிய தங்கக் கொடிபோல் காட்சி அளிப்பதால் எங்கும் 'கோமளவல்லீ' என்கிற திருநாமத்துடனேயே போற்றப்படுகிறாள் என்று பேசப்படுகிறது. இந்த ஸந்நிதிக்கு ஸுவர்ணமயமான ஒரு கலசத்துடன் விமானம் ஏற்பட்டுள்ளது.

'கன்யா தீர்த்தம்' என்ற பெயருடைய மஹாமக தீர்த்தத்தில் உள்ள நவ கன்னிகைகள் கோமள வல்லியை நாடிவந்து, வணங்கி வழிபட்டு, ஜனங்களின் பாபங்களைப் போக்கும் பெருமையைத் தங்களுக்கு அருள வேணுமென்று வேண்டினர். தாயாரும் அருள்புரிய, நவகன்னிகைகளும் பக்தைகளாய், அவளையே நோக்கி, அனுதினமும் அடிபணிய மேற்குத்திக்கையே நோக்கிய வண்ணம் உள்ளனர்.

கும்பகோண மாஹாத்ம்யத்தில் 51வது அத்யாயத்தில் மேற்படி விபரம் காட்டப்படுகிறது.

‘செல்வம் மல்கு தென் திருக்குடந்தை’ (திருவெழு கூற்றிருக்கை) என்றது, தாயாரின் கடாக்ஷம், இத்தலத்துக்கு ஏற்பட்டதைக் காட்டுகிறது. இத்தலத்தில் தாயார் குடிபுகுந்த பிறகே, ஸ்ரீமானான ஸ்ரீ சார்ங்கராஜன் எழுந்தருளினான், அவளிடத்தில் ஆசைக் கொண்டு, அவளுடன் திருமணம் புணரவே இங்கு எழுந்தருளினான். எல்லா பெருமைகளுக்கும் நாச்சியாரே முதற்காரணமாக இங்கு விளங்கியிருப்பதற்கேற்றவாறு, எவரும் நாச்சியாரை சேவித்தப் பிறகே, பெருமாளை ஸேவிக்கப் போகும்படியாக இக்கோயிலில் தாயார் ஸன்னதியின் இடவமைப்பு: ஆழ்வார் ஆசார்யர்கள் மங்களாசாசனத்துக்கு எழுந்தருளும் பொழுது, முதலில் தாயார் ஸன்னதிக்கு எழுந்தருளி, பிறகு பெருமாள் ஸன்னதிக்கு எழுந்தருளுவது வழக்கம்.

### மெய்க்காவலிடையர்

பெருமாளின் திருவுண்ணாழி மேற்புறத்தில் உள்ள மேடையில் பக்தரொருவரின் பிம்பம் உள்ளது. ஒரு கால விசேஷத்தில், இந்த தேவாலய அமைப்பிற்கு ஆபத்து நெருங்கின போது, பரிவார தேவதைகளுடன், பெருமாள், நாச்சியார்,திருக்கோயிலனைத்தையும் வைக்கோலால் ஒரு பெரிய போர் போல் தெரியுமாறு செய்து காப்பாற்றி வைத்தவர் இந்த மஹா பக்தரான ‘மெய்க் காவலிடையர்‘, என்பதனால் பெருமாளும், நாச்சியாரும் அவரவர்கள் உத்ஸவத்தில் தேர் விட்டிறங்கி தீர்த்தவாரி கண்டருளியதும் நேராக இந்த பிம்பத்துக்கு எதிரே எழுந்தருளி, அருளப்பாடுடன், தீர்த்தம், சந்தனம், திருமாலை, திருப்பரியட்டம், ஸ்ரீசடாரி, முதலானவை ஸாதித்துப் பிறகே உத்ஸவ காரியங்களைக் கண்டருள்வர். இன்றளவும் இப்பெருமை குறைவின்றி நடந்து வருகிறது.

### ஜ்யேஷ்டாபிஷேக மண்டபம்

மெய்க்காவலிடையரின் வடக்கே சற்று தூரத்தில் வடக்குத் திருவுண்ணாழியின் மேற்குக் கோடியில், கிழக்குப் பார்த்து, பெரிய திருமஞ்சன மண்டபம் உள்ளது. ப்ரதி வருஷம் ஆடி சுக்ல தசமியில் கவசத்துடனும், ஏகாதசி, துவாதசி இரண்டுதினங்களிலும் கவசம்

களைந்தும் பெருமாளுக்கு, உபய நாச்சியார்கள், தனிக்கோயில் நாச்சியார் இவர்களுடன் விசேஷத் திருமஞ்சனம் நடக்கும்.

### பாதாள ஸ்ரீநிவாஸன் ஸந்நிதி

வடக்கு திருவுண்ணாழி வடக்குப் பக்கத்தில், தெற்கு பார்த்த வாசலால் உள் சென்று, வடக்கிலும்,மேற்கிலும் 7-8 படிகள் இறங்கினால் மேற்படி ஸந்நிதியில் மேற்கே, கிழக்கு முகமாக, ஸ்ரீநிவாஸன் ஸேவை ஸாதிக்கிறார். இவர் திருவேங்கடமாமலையிலிருந்து இங்கு எழுந்தருளினவரென்றும், ஆராவமுதனும் இவரும் ஒருவரே என்றும், இங்கே பல ஸித்தி பெற விரும்புபவர்கள் பாயஸத்தையோ, நன்றாய்க் காய்ச்சின பாலில் ஏலக்காய், சர்க்கரை சேர்த்து நிவேதனம் பண்ணி, துளஸிதளங்களால் அர்ச்சனை செய்தால், அவர்களுக்கு ஸ்ரீநிவாஸன் பிரஸன்னனாகி ஸர்வாபீஷ்டங்களையும் பெறுவித்து முடிவில் மோக்ஷமும் அடைவிப்பார் என்றும் ஸ்ரீசார்ங்கராஜன் வார்த்தையாக கும்பகோண மாஹாத்ம்யம் 51வது அத்யாயத்தில்

பாதாள வேங்கடாதீசம் ஸக்ருத்வா யஸ்து பூஜதே ।
தர்சனம் வாபி குருதே நைவேத்யம் பாயஸம் ததந் ॥
ப்ரதாபிதம்வா யத்க்ஷீரம் ஏலாசர்க்கரயாந்விதம் ।
யோர்ச்சயேத் துளஸீபத்ரை: ஸ: ப்ரஸீததி நாந்யதா ॥
பாதாள வேங்கடாதீசே மமாபேதே த்விஜோத்தம ।
ஸர்வாந் காமாந் அவாப்யாசு அந்தே வைகுண்டமச்நுதே॥

என்று காணப்படுகிறது.

### ஸ்ரீ பாதாள ஸ்ரீநிவாஸன்

பிறகு, பிருகு முனிவர் பெருமாள் திருமார்பில் உதைத்ததைக் கண்டு,கோபமுற்றவளாய் திருமகள் சொல்லாபுரம் சென்று அங்கு மழை பொழியச் செய்து அங்கேயே சில நாள் எழுந்தருளி இருந்தாள். பெருமாளும் திருமகளைத் தேடிக் கொண்டு, திருப்பதி பக்கம் வரவும் அங்கு ஆகாசராஜன் மகளான பத்மாவதியைக் கண்டு மணந்து அங்கேயே ஸ்ரீநிவாஸன் என்ற திருப்பெயருடன் எழுந்தருளி இருந்தார்.

நாரதர் பெருமானும், தாயாரும் திருக்குடந்தைக்கு எழுந்தருளி ஸேவை தந்தருள வேண்டும் என்ற எண்ணம் கொண்டவராய், சொல்லாபுரத்துக்குச் சென்று அங்குள்ள திருமகளிடம் பெருமாள் ஆகாசராஜன் புதல்வியான பத்மாவதியை மணந்து திருப்பதியில் எழுந்தருளி இருக்கும் நிகழ்ச்சியைக் கூறித் தாயாருக்குக் கோபம் ஏற்படச் செய்தார். திருமகளும் அந்த ஊரை விட்டகன்று விட்டாள். இச் செய்தியை பெருமாளிடமும் நாரதர் தெரிவிக்க, தாயார் திருப்பதிப் பக்கம் வருவதை உணர்ந்த பெருமாளும் தாயாரிடம் பயந்தவர் போல் அபிநயித்துக் கும்பகோணம் வந்து ஒரு புதரின் பாதாளத்தில் எழுந்தருளி மறைந்தார். தனது ஒரு அம்சத்தை திருப்பதியில் வைத்துவிட்டுக் குடந்தைக்கு வரும்பொழுது திருமகள் அவரைக் கண்டு பின்பற்றினாள்.

பாதாளத்தில் எம்பெருமான் மறைந்திருப்பதை அறியாத திருமகள், கோபம் களைந்து அப்பெருமானை அடைய விரும்பி, குடந்தைப் பொற்றாமரையில் தவம் செய்து, கடைசியில் அவ்வெம்பெருமானை மணந்தாள். இதனால் திருப்பதி ஸ்ரீநிவாஸனே சார்ங்கராஜன் என்று அறியப்படுகிறது.

ஆயிரம் காலம் ஆராவமுதன் திருவடிவாரத்தில் ஒதுங்கி இருந்த திருமழிசையாழ்வார், திருச்சந்த விருத்தம் 60வது பாசுரம், "விண்புடைக்கும் வேங்கடத்துள் நின்று....செழுந்தடங் குடந்தையுள் கிடந்த மாலுமல்லையே" என்று அருளுகிறார்.

ஸ்வாமி தேசிகனோ, தயாசதகம் 106வது சுலோகத்தில்:

சதகமித முதாரம் ஸம்ய கப்யஸ்ய மா நாந்
வ்ருஷகிரி மதிருஹ்ய வ்யக்த மாலோகயந்தீ ।
அநிதர சரணாநாமாதி ராஜ்யே பிஷிஞ்சேத்
சமித விமத பக்ஷா சார்ங்க தந்வாநு கம்பா ॥

என்று சார்ங்கராஜனே, திருவேங்கடமேறி வேங்கடேசனாக இருப்ப-தாகவும் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

### அரசர் சிலை

இந்த ஸன்னதிக்கு எதிரே, கோபுர கைங்கர்யத்திற்குப் பெரிதும் உதவியவராய், கோபுர ஸேவை செய்தபடி, பெருமாள் ஸ்ரீ பாதங்களின் ஸமீபத்தில் கை கூப்பிய வண்ணம் நிற்கும் அரசர் சிலையைக் காணலாம்.

### சேனை முதலியார் ஸந்நிதி

பாதாள ஸ்ரீநிவாஸன் ஸந்நிதிக்குக் கிழக்கே, உத்தராயண வாசலுக்கு நேர் வடக்கில் தெற்கு பார்த்து ஸேனை முதலியார் ஸந்நிதி உள்ளது. மூலவர் அமர்ந்த திருக்கோலத்திலும், உற்சவர் நின்றதிருக்கோலத்திலும் விஷ்வக்ஸேனர் என்ற திருநாமத்துடன், உற்வங்கள் ஆரம்பிக்குமுன், இவர் பெருமாள், தாயார் திருமுன்பே எழுந்தருளி அனுமதி பெற்றே ஆரம்பிக்கப்படும். தாயார் பெருமாள் புறப்பாடு ஆகும் காலத்தில் இவருக்கெதிரே எழுந்தருளி ஸ்ரீசடாரி ஸாதித்தே வெளியிலெழுந்தருளுவது வழக்கம்.

### தீராவினைகள் தீர்த்த பெருமாள் ஸந்நிதி

ஸேனை முதலியார் ஸந்நிதிக்கு கிழக்கே உள்ள இச்ஸந்நிதியில் உபய நாச்சிமாரோடு ஸ்ரீநிவாஸன் மூலவர் மட்டும் எழுந்தருளியிருக்கிறார். இவர் மேட்டு ஸ்ரீநிவாஸன் என அழைக்கப்படுகிறார். "தீராவினைகள் தீரவென்னை யாண்டாய் திருக்குடந்தை ஊரா" என்கிற நம்மாழ்வார் பாடலுக்குப் பொருத்தமுள்ளவர் இவர்.

### யுகாதி ஆஸ்தாந மண்டபம்

மேற்படி ஸந்நிதிக்கு முன்புறமுள்ள அழகிய மண்டபம் யுகாதி தெலுங்குவருடப்பிறப்பு அன்று பெருமாள் எழுந்தருளியிருந்து

புதுப்பஞ்சாங்கம் வாசித்தலைக் கேட்டருள்வர். கோயில் அநந்தகொத்து பரிஜனங்களும் தேங்காய் ஸமர்ப்பிப்பர்.

### திருப்பள்ளி அறை

யுகாதி மண்டபத்திற்கு அருகே மேற்கு திசையில், சில வருடங்களுக்குமுன் திருக் குடந்தை ஆண்டவனால், அற்புத வேலைப்பாடுடன் கூடிய திருப்பள்ளியறை கட்டப்பட்டுள்ளது. இதில் அழகிய சிங்காசனமும், கண்ணாடிகள் பொருத்தப்பட்ட சுற்றுப்புறச் சுவர்களும் உள்ளன. உற்சவ காலங்களில் பெருமாளும் தாயாரும் இங்கு எழுந்தருளி, அதிமனோகரமாய் திருவோலக்கம் செய்தருளுவார்.

### சித்திர -ஸ்ரீநிவாஸன்

பள்ளியறைக்குத் தென்பக்கத்தில் மேற்கு முகமாக ஸ்ரீநிவாஸன் படத்தில் அமைக்கப்பட்டு, சுற்றுக் கோயில் கிரமத்தில் ஆராதனமும் கண்டருளுகிறார்.

### ஐயா குமார தாத தேசிகன் ஸந்நிதி

துவாரபாலகர் வாசலுக்குத் தென்புறம் கோடியில் தாயார் ஸந்நிதிக்கு முன்புறம், மேற்கு முகமாக இச்ஸந்நிதியில் மூலவர் உத்ஸவர் இருவருமாக எழுந்தருளி இருக்கிறார்கள். வைகாசி ரோஹிணியன்று இவர் திருநக்ஷத்திரமானதால், மேற்படி ஸந்நிதி வாசல் புஷ்பப் பந்தலில் பெருமாள் எழுந்தருளி திருவாராதனமாகித் தளிகை அமுது செய்ததும், அருளப்பாடுடன் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீசடாரி ஸாதித்தபின் அனைத்துக் கோஷ்டிக்கும் தீர்த்தமாகி பிரஸாதம் முதலான வினியோகமும் நடைபெறும்.

### சுவரில் நிலைக் கண்ணாடி

மேற்படி ஸந்நிதிக்கு ஸமீபத்தில் வடக்கு முகமாகச் சுவரில் முன்புறம் அறைகட்டி இக்கண்ணாடி வைக்கப்பட்டுள்ளது. பெருமாள் தாயார் புறப்பாடுகளில், திருப்பள்ளியறை வாசல் வந்து திரும்பி வெளியில் எழுந்தருளுவதற்கு முன்பும், மீண்டும் ஆஸ்தானத்துக்கு எழுந்தருளும் போதும் இக்கண்ணாடி திறக்கப்பட்டிருக்கும்.

### அச்யுத பூபால மண்டபம்

சோழ மன்னர் அச்யுத பூபாலர் கட்டிவைத்ததாகக் கூறுவர். நூற்றுக் கணக்கான தூண்களுடன், அழகிய வேலைப்பாடுடன் உயர்ந்த தோற்றத்துடன் காணப்படும் இதன் நடுவில் திருக் கார்த்திகையன்று பெருமாள் ஆஸ்தானத்துக்கு எழுந்தருளும் போது ஒரு சிங்காசனத்திலமர்ந்து, கலியனின் பனுவல்களைக் கேட்டு, ஆழ்வார்களுக்கு அனத்யயனப் பட்டோலை, ஸ்ரீசடாரி முதலான வரிசைகளுடன் அனுப்பிவைத்தருளுவது வழக்கம்.

### ராஜகோபாலன் ஸந்நிதி

யாகசாலையை அடுத்த கீழ்புறம் உள்ளது இச்ஸந்நிதி. இங்கு ருக்மணி ஸத்யபாமையுடன் ராஜகோபாலன் மூலவர் மட்டும் எழுந்தருளியிருக்கிறார்.

### யாகசாலை

சாஸ்த்திரப்படி பெருமாளுக்கு ஈசான்ய பாகத்தில், சுற்றிலும் கிழக்கிலிருந்து சதுரச்ர, சாப, சக்ர, த்ரிகோண வடிவுகளைக் கொண்ட ஆஹவனீயம், தக்ஷிணாக்நி, கார்ஹபத்யம், ஸப்யம் என்கிற நான்கு அக்னி குண்டங்களுடனும், கும்பம், சக்ராப்ஜ மண்டலம், பாலிகைகள் இவைகளுக்கும், யாகபேரர் எழுந்தருளுவதற்கும் போதுமான மேடையுடன் யாகசாலை உள்ளது சைத்ர, மார்கசீர்ஷ, பால்குன,

மாகமாஸ, பவித்ரோத்ஸவாதிகள் விதிப்படி சதுஸ்தான பூஜை, ஹோமாதிகளுடன் நடைபெறும்.

**பவித்ரோத்ஸவ மண்டபம்**

ராஜகோபாலன் ஸந்நிதிக்கு முன்புறம், பவித்திரோத்ஸவத்தில் பெருமாள் எழுந்தருளியிருந்து திவ்விய பிரபந்த வேத பாராயணாதி கோஷ்டிகள் நடைபெறும்.

**இராமபிரான் ஸந்நிதி**

பவித்ரோத்ஸவ மண்டபத்தின் நடுவில், ராஜகோபாலன் ஸந்நிதி வரிசையில் உள்ள இராமன் ஸந்நிதியில், மூலவர்கள் மட்டும் இராமன், ஸீதை, லக்ஷ்மணன், அனுமன் என எழுந்தருளியிருக்கிறார்கள். இம் மண்டபத்தில், நவராத்திரி, தீபாவளி, கைசிகம், ஊஞ்சல், கனு, சில விடாயாற்றிகள் முதலாகப் பல உத்ஸவங்கள் நடைபெறுகின்றன.

**கறுப்பு சலவைக்கல் நாலுகால் மண்டபம்**

இம்மண்டபத்தின் தென்புறத்தில் கறுப்பு சலவைக் கல்லால் அமைந்த நான்கு கால் மண்டபம் மாங்குடி கோமள அம்மாள் என்ற பக்தையால் கட்டப்பட்டது. இங்கு தாயார், வெள்ளிக்கிழமைகளில் ஊஞ்சல் கண்டருள்வதும், பெருமாள் சைத்ரோத்ஸவத்தின் ஐந்தாம் திருநாள் மாலையில் சக்ரராஜனுடனும், பின்பு ஆராவமுதன் மட்டும் ஒரு விடாயாற்றி உத்ஸவத்துக்கு எழுந்தருள்வதும் வழக்கமாக இருக்கிறது. இந்த மண்டப வரிசைகளில் கிழக்குக் கோடியில் கண்ணன் ஸந்நிதி ஒன்று உள்ளது.

**திருமடைப்பள்ளி**

பெருமாள் ஸந்நிதிக்கும் நாலுகால் மண்டபத்துக்கும் அக்னி மூலையில் பாகசாலை, திருமடைப்பள்ளி விசாலமாக, நல்ல அமுது

பாறைகள், மேடைகள், நித்ய ஹோம குண்டம், திருமடைப்பள்ளி நாச்சியார், கிணறு முதலியவைகளுடன் விளங்குகிறது.

### தாயார் த்வஜாரோஹண மண்டபம்

திருமடைப்பளியிலிருந்து வெளியே வந்ததும் தாயார், த்வஜஸ்தம்ப பலி பீடங்கள் காணப்படும். த்வஜஸ்தம்பத்தின் மேற்புறம் இம் மண்டபம் உள்ளது. தாயாருக்கு த்வஜாரோஹண காலத்தில் தாயார் இங்கே எழுந்தருளியிருந்து த்வஜாரோஹணம் கண்டருள்வார். தாயார் சன்னிதியை மறைப்பது போல் தோன்றினாலும், சிறிய கல் ஜன்னலுண்டு. நித்யபடிகளில் இம் மண்டபம் தேவஸ்தான கிளை ஆபீஸாக இருந்து வருகிறது.

### ஹேமபுஷ்கரணி அல்லது பொற்றாமரை

மேலைக் கோபுர வாசலினுள் புகுந்து வெளிப்புறப்பட்டால் தீர்த்த வாரிகளுக்கும், திருக்கார்த்திகை உத்ஸவத்திற்கும் எழுந்தருளுகிற 16 கால் மண்டபத்துடனும், படிக்கட்டுக்களுடனும் நான்கு புறமும் 4 கால் மண்டபங்களுடனும் நடுவே தெப்போத்ஸவத்தன்று எழுந்தருளுகின்ற நீராழி மண்டபத்துடனும் கீழ்ப்புறத்தில் நரஸிம்மன் ஸந்நிதியுடனும், வடப்புறத்தில் கோமளவல்லித்தாயார், ஹேம மகரிஷி இவர்களின் ஸந்நிதியுடனும் பொற்றாமரை திவ்விய புஷ்கரணி அமைந்துள்ளது. இதற்கு லக்ஷ்மீ தீர்த்தம் என்றும், பொற்றாமரை என்றும், அமுத வெள்ளம் தேங்கியதால் 'அமுதவாவி' என்றும் பெயர்களுண்டு. பெருமாள் மகர ஸங்க்ராந்தி புண்யகாலம், மாசிமகம் இவைகளிலும் தாயார் கனு, பங்குனி உத்திரம் இவைகளில் தீர்த்தம் ஸாதிப்பதும், மாசி மகத்தில் பெருமாள் தெப்ப உத்ஸவம் கண்டருள்வதும் வழக்கம். இதன் கீழ்மேல் அடி 360, தென் வடல் அடி 285.

### புஷ்கரணி ஸ்நாந பலன்

சைத்ர சுக்ல பௌர்ணமி ஸ்நாநம் பரிசுத்தியையும் உத்தம கதியையும் தரும். ச்ராவண வெள்ளிக்கிழமை, மார்கழி, பௌர்ணமீ, வ்யதீபாதம், ஸங்க்ரமணம், அயநங்கள், கிரஹணங்கள் முதலான நன்னாளில் ஸ்நானம் எண்ணிறந்த பயனைத்தரும். கிருஷ்ணாஷ்டமியில் ஸ்நானம் மூவாயிரம் குலங்களுக்கு நற்கதிகிட்டும். மகர ஸங்கிராந்தி ஸ்நானம் பதினாயிரம் கங்கா ஸ்தான பயன், மாக மாதம் களங்கமற்ற புகழ், தினந்தோறும் ஸ்நானம் செய்வதால் உத்தமபதத்தையும், வாகீசனாக விளங்கும் பயனையும் அளிக்கிறது.

### ஸ்ரீ ஆண்டாள் ஸந்நிதி

பொற்றாமரைக் கரையிலிருந்து மேலக் கோபுரம் வழியாய் வடக்குப் பிரகாரம் சென்றால், மேற்குக் கோடியில் ஸ்ரீ ஆண்டாள் ஸந்நிதி, பெருமாள் ஸந்நிதிக்கு வடப்புறத்தில் தாயாருக்கு அமைந்துள்ளது போல் விமானம் முதலியவற்றுடன் அப்படியே உள்ளது. பெருமாள் புறப்பாட்டில் பஞ்சபர்வ காலங்களில், ஆண்டாளுக்கு எதிரே திரும்பி எழுந்தருளி, இருவருக்கும் கற்பூரஹாரதி ஆகும். திரு ஆடிப் பூரத்துக்கு 3 நாள் உற்சவமும், காவிரித் தீர்த்தவாரியுமுண்டு.

### தூநிலா முற்றம்

வடக்குப்ரகாரம் தூநிலா முற்றம் என பெரியாழ்வார் பாசுரத்தினால் விளங்குகிறது. கருங்கல் தளவரிசை கொண்ட அழகிய இம் முற்றத்தில், ஆழ்வார் திருவுள்ளப்படி நாதஸ்வரத்துடனும், நாயகனாக அனுபவித்த நாச்சியார் நினைவின்படி பாட்டுடனும் மற்ற ஆழ்வார்களின் பாசுரங்களுடனும் பத்தி உலாவுதல் நடைபெறுகின்றது.

தூநிலா முற்றத்தே போந்து விளையாட....
...குடந்தைக் கிடந்தானே சப்பாணி.[1]

என்று ஆழ்வார் மங்களாசாசனம்.

---

1. பெரியாழ்வார் திருமொழி, 1.7.4.

**கோசாலை**

வடக்கு பிரகாரத்திலிருந்து படியேறித் தெற்கே சென்று இரண்டாவது கோபுரவாசல் வழியாக கிழக்கில் வந்து வடக்கில் திரும்பினால் கோசாலை. இங்கே 1. விச்வ ரூபத்திற்கு செல்கின்ற பசு, 2. விச்வரூப ஸமயத்திலும் அர்த்தயாமத்திலும் பால் அமுது செய்விக்கப் பயன்படும் பசு, 3. காவிரியிலிருந்து காலையில் திருமஞ்சனத்திற்கும் உத்ஸவாதி- களுக்குப் பயன்படும் காளையும் வளர்க்கப்படுகின்றன.

**பிற மண்டபங்கள்**

1. கோ சாலையின் கீழ்புறத்தில் அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ள உயர்ந்த மண்டபத்தில் பெருமாளுக்குப் பகல்பத்து, இராப்பத்து, தேசிக பிரபந்த உத்ஸவம் முதலியவை நடைபெறும்.

2. முன்பேயுள்ள தாழ்ந்த மண்டபத்தில் உத்ஸவ காலத்தில், பல்லக்கு, வாஹனங்கள் இவைகளில் திருக்கோலம் ஸமர்ப்பிக்கப்படும். வாஹன அலங்கார மண்டபம் என்றழைக்கப்படும்.

**வஸந்த மண்டபம்**

நூற்றுக்கால் மண்டபத்திற்குக் கீழ்புறம் தெற்கு நோக்கி வஸந்த மண்டபம் உள்ளது.திருத்துழாய், புஷ்பச் செடி, கொடி, மரங்கள் அடர்ந்து தண்ணீருடன் கிணறும், வட்ட வடிவமான அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்த இம்மண்டபத்தில் பெருமாள் தாயார் - வஸந்த உற்சவம் நடைபெறும்.

**தை அமாவாஸ்யை மண்டபம்**

வஸந்த மண்டபத்திற்கு எதிரே வடக்குப் பார்த்து மூன்று பத்திகள் கொண்டது. தை அமாவாசையன்று பெருமாள், தாயார் காலையில் எழுந்தருளி மாலை வரையில் ஏகஸிம்ஹ ஆஸனத்தில் ஸேவை ஸாதிப்பர்.

### ஆழ்வார்கள் ஸந்நிதி

தை அமாவாசை மண்டபத்தின் மேல் புறம் மூன்று வாசற்படிகளுடன், உள்ளே கிழக்குப் பக்கம் இரண்டு ஸந்நிதிகள் தெற்கு பக்கத்தில் மூன்று ஸந்நிதிகள் இவைகளுடன் அமைந்துள்ளது. ஆழ்வார்கள், ஆசார்யர்கள் மூல, உத்ஸவ விக்ரஹ ரூபங்களுடன் எழுந்தருளியிருக்கிறார்கள்.

### நூல் நிலையம்

ஆழ்வார்கள் ஸந்நிதி முன் மண்டபத்தில் நூல் நிலையம் நிறுவப் பட்டிருக்கிறது.

### ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகன் ஸந்நிதி

ஆழ்வார்களின் ஸந்நிதிக்கு மேல்புறமாக உள்ள ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் ஸன்னதியில் மூல, உத்ஸவ ரூபங்களுடன் தேசிகனும், கூரத்தாழ்வானும், ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவனும் எழுந்தருளி உள்ளனர். இதற்கு சிறிய கோபுரமும் உண்டு. ஸ்ரீ தேசிகன் உத்ஸவ சாற்றுமுறைக்குப் பெருமாள், தாயார் எழுந்தருள்வதும், ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியில் ஆஸ்தானம் கண்டருளி, ஸேவை, சாற்றுமுறை ஸ்ரீதேசிகன் மரியாதை, கோஷ்டி தீர்த்த ஸ்ரீசடாரி முதலான வைபவங்கள் காலங்காலமாக நடைபெறுகின்றன.

### த்வஜாரோஹண மண்டபம்

ஆசார்யன் ஸந்நிதிக்கு அடுத்த மஹாமண்டபம் இது. பெருமாள் எந்த உத்ஸவ 'த்வஜா ரோஹணத்துக்கும் இங்கு எழுந்தருளி, பக்கத்தில் ஸ்ரீ தேசிகனால் மங்களாசாசனம் பண்ணப்படும் வண்ணம் அமர்ந்து த்வஜாரோஹணம் கண்டருளுவர்.

த்வஜாரோஹண மண்டபத்தையும் பெரிய கோபுர கைங்கர்யத்தையும்நித்ய ஆராதனாதிகள் நடக்க போதுமான பூமிகளையும் மற்றும் பல மண்டபங்களையும் பெருமாளுக்கு ஏற்படுத்தி வைத்தவர் ஸ்ரீவைஷ்ணவ அவதார புருஷரான ஸ்ரீ லஷ்மீ நாராயண ஸ்வாமி என்பவர்.

இவரைப் பிள்ளையாகக் கொள்ளும்படி புண்ணியம் செய்தவர்கள், தனுஷ்கோடி ஸ்நான யாத்ரா மார்கத்தில் அமுதனை அடிபணிந்து, தங்களுக்குப் புத்திரப் பேறு வேணுமென்றும், புத்திரன் பிறந்தால் அமுதன் கைங்கர்யத்திற்கே விட்டு விடுவதாகவும் வேண்டிக் கொண்டனர். "திருவணை"என்கிற ஸேதுவில் நீராடி, சிறு காலத்தில் புத்திரபேறு பெற்றனர். மிக்கமகிழ்வுடன் திருக்குடந்தை நோக்கி வர, எல்லை தவறி வழி மாறினர். குழந்தைக்குக் கண் தெரியாமல் போனது. வழி தேடி, குடந்தை அமுதனை அடையும் காலத்தில் மீண்டும் கண் தெரியலாயிற்று. பெற்றோரும் பெருமாள் கைங்கர்யத்துக்கே குழந்தையை விட்டுச் சென்றனர்.

இவர் பல அரசர்கள் உதவிகொண்டும். பல தனிகர்களின் திரவிய சகாயத்தால் எம்பெருமானுக்கு பலப்பல கைங்கர்யங்களைச் செய்து வந்ததைப் பாராட்டி, இவர் பெரு நாட்டுக்கு எழுந்தருளிய நாளான தை அமாவாசை அன்று, தம் பக்தர்களுக்கு ஆணையிட்டு, தகப்பனுக்கு, புத்திரன் விதிப்படி செய்யத்தக்க தீர்த்த கைங்கர்யங்களை, ஸ்ரீஅமுதனே பிள்ளை ஸ்தானத்தில் இருந்து, இன்றளவும் செய்து வருகின்றனராம்.ராமன் ஜடாயுக்கு கைங்கர்யம் செய்தார். ராவணனுக்கும் செய்வேன் என்றார். இவை விபவ அவதாரத்தில் கண்ணுற்றோம். அர்ச்சையிலும், பக்தனுக்காக மிகவும் ஈடுபட்டு கைங்கர்யம் செய்வதை இன்றைக்கும் நாம் நேரில் காணலாம் என்பது ஸ்ரீ அமுதனின் தனிச்சிறப்பு.

### வெளி நாலுகால் மண்டபம்

த்வஜஸ்தம்பமும் பலிபீடமும் தாண்டி பெரிய முன் மண்டபம் கடந்து வெளியில் பெரிய கோபுரத்திற்கு நேர் கிழக்கில், சிறிய தேருக்கு வடபுறம் சற்று மேற்கில் உள்ள இம்மண்டபத்தில் ஸ்ரீ ஜயந்தி உறியடியின் போதும், திருக் கார்த்திகைச் சொக்கப் பானையின் பொழுதும் பெருமாள் சற்று எழுந்தருளியிருப்பர்.

### சிறிய திருத்தேரும் பெரிய திருத் தேரும்

இம்மண்டபத்தின் தென்புறமாகத் திருத்தேருக்குப் பெருமாள் எழுந்தருளும் படிக்கட்டுகளும், அதன் கீழ் சிறிய திருத்தேரும் உள்ளது.

1. சிறிய தேர் சைத்ரோத்ஸவத் திருத்தேராக உபயோகிக்கப்படுகிறது.
2. மகர ஸங்கிரமண உத்ஸவமான தை மாதப் பிறப்பன்று, வஸந்த உத்சவ சாற்றுமுறைக்கு வெள்ளிரதத்தில் பெருமாள் எழுந்தருளுகிறார்.
3. நாலுகால் மண்டபத்துக்கு வடகிழக்கில், பெரிய திருத்தேருக்குப் பெருமாள் எழுந்தருளும் அழகிய படிக்கட்டுகளமைந்த மண்டபத்தின் மேற்புறமாக இத்திருத்தேர் இருந்துவருகிறது. சித்திரை மாதத்தில் எம்பெருமான் எழுந்தருளுவதால் இது சித்திரைத்தேர் என வழங்கலாயிற்று.

இத்தேரில், பிம்பங்களனைத்தும் மிகுந்த சித்திர வேலைப்பாட்டுடன் இருப்பதால் சித்திரத்தேர் என்றும் வழங்களாயிற்று.

ஸ்ரீ ஆராவமுதன் கருவறைத்தேரை சித்திரத்தேர் என்றும், ஸ்ரீசார்ங்கராஜன் மரத் திருத்தேரைச் சித்திரைத் திருத்தேர் எனவும் வழங்குவர்.

இந்த அழகிய ரத அமைப்பைக் கண்ட திருமங்கையாழ்வார் அமுதனுக்கு சித்திர ரதபந்த ரூபமாக அமையுமாறு ஒரு தனித் தமிழ் பிரபந்தம் 'திருவெழுகூற்றிருக்கை' அருளினார்.

சித்திரைத் தேரின் தோற்றமும் திருவெழுக் கூற்றிருக்கையின் தோற்றமும் அமுதனின் சித்திரத்தேரின் தோற்றமும் மிக்க சிறப்புடையவை. உவமையில்லா பேரழகுடையவை.

த்வஜஸ்தம்பத்தருகில் ஸ்ரீ திருக்குடந்தை ஆண்டவன் ஸ்வாமிகளால், சித்திரத் தேர் வரையப்பட்டு, அதனுள் திருவெழுக்கூற்றிருக்கை எழுதப்பட்டும், மற்ற ஆழ்வார் பாசுரங்கள் பக்கத்தில் சலவைக் கற்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

**பெருமாள் சேவையின் பலன்**

1. கும்ப கோணத்தில் பள்ளி கொண்டு அருளும் ஆராவமுதன் ஸேவையால்,

   *ப்ருஹ்மஹத் யாதயோ கோரா: மஹா பாதக ஸஞ்சயா: ।*
   *கும்பகோணே சயாநஸ்ய விஷ்ணோர் நச்யந்தி தர்சனாத் ॥*

   என்று பிரம்மஹத்யை முதலான பல கொடிய பாவங்கள் நிசிக்கும்.

2. ஆராவமுதனை ஸேவிக்க வேண்டுமென்று வீட்டுக்கு வெளியே ஓரடி எடுத்து வைத்தாலும் பூமியில் மறுபிறவியில்லை.

   *பதமேகஞ்சலேத்யஸ்து க்ருஹாத் பஹிரசங்கித: ।*
   *ஸ்ரீ சார்ங்கராஜ ஸேவார்த்தம் பூதலே ந புநர்ஜநி: ॥*

3. ஸ்ரீ சார்ங்க ராஜனுக்கு நித்யோத்ஸவம் முதலான பற்பல உற்சவங்களை நடத்தி வைப்பவர்க்கு இவ்வுலகில் புத்ர பௌத்ராதி ஸமஸ்த ஸம்பத்துக்களை பூரணமாக அனுபவித்தும், பின் மோக்ஷ ஸாம்ராஜ்யமும் பெற்று மகிழ்வர்.

   *தஸ்மாத் ததுத்ஸவம் லோகே யே குர்வந்தி ஸமாஹிதா: ।*
   *தேஷாம் போகஞ்ச மோக்ஷஞ்ச சார்ங்கபாணிர் ததாதி ஹி ॥*

4. ஹேம புஷ்கரிணி ஸ்நானமும் ஹேமபுத்ரியின் ஸேவையும் ஹேமரிஷியின் மாப்பிள்ளையான ஆராவமுதனின் ஆராதனமும் முன்ஜன்ம புண்யத்தால் ஏற்படுகின்றன.

ஹேம புஷ்கரிணி ஸ்நானம் ஹேமபுத்ர்யாச்ச தர்சனம் ।
பூஜநம் ஹேம ஜாமாது: ஜந்மாந்தர தப: பலம் ॥

5. ஸ்ரீ சார்ங்க ராஜனின் வைபவத்தை, இக்கலியுகத்தில் சொல்லுபவர்கள், கேட்பவர்கள் அனைவருக்கும் கோமளவல்லித்தாயாருடன் கூடிக் களிக்கிற ஸ்ரீ சார்ங்கராஜன் ஸர்வ அபீஷ்டங்களையும் அருளுவான்.

ஸ்ரீசார்ங்கபோணேர் விபவம் சுபாஸ்பதம்
யே ச்ராவயந்தீஹ கலௌ யுகே பரம் ।
ச்ருண்வந்தி தேஷாம் அகிலேஷ்டதாயீ
பவத்யஸௌ சார்ங்கதர: ப்ரியாயுத: ॥

மேற்படி சுலோகங்கள் கும்பகோண மாஹாத்ம்யம் அத்யாயம் 52,53ல் குறிப்பிடப்பட்டுள்ளன.

**கோவிலில் நித்யப்படி கால விபரம்**

1. காலை 7.30 க்குள் காவிரியிலிருந்து வாத்யங்களுடன் திருமஞ்சன தீர்த்தம் வருவது.
2. 8.00 - 8.30 க்குள் ஸுப்ரபாதம், விச்வரூபம், நித்யானு ஸந்தானம் திருவனந்தல் தளிகை அமுது செய்வது.
3. 8.30 - 10.00 க்குள் திருவாராதனம், நித்யஹோமம், பலிஸாதித்தல் திருப்பாவை சாத்துமுறை.
4. 11.30 - 12.00 க்குள் உச்சிக்காலம்
5. மாலை 6.30 - 7.30 நித்யாநுஸந்தான ஸேவை.
6. இரவு 7.30 - 8.00 மணி நித்யப்படி வேதபாராயணம்.
7. 8.00 மணி -9.00 மணி இராக்கால ஆராதனம்
8. 9.30 - 10.00 க்குள் அர்த்த யாமம், திருக்காப்புச் சேர்த்தல்.

*தனுர் மாதத்தில் பின் மாலை 4.30 முதல் 6.00 மணிக்குள் மேற்படி ஆராதனம் சாத்துமுறை முதலியவை.*

***பஞ்ச பர்வங்களும் பெருமாள், தாயார் திருநக்ஷத்திரங்களும்***

*மாதப் பிறப்புகள், ஏகாதசிகள், அமாவாஸ்யைகள், சித்திரை, சிரவணம், இவைகளில் பெருமாள் வெள்ளி வாரை போட்ட தோளுக்கினியானில் வெள்ளிக் குடையுடன் எழுந்தருள்வர்.*

*வெள்ளிக் கிழமைகள், உத்திரம் இவைகளில் தாயார் எழுந்தருள்வது, சிரவணம் சேர்ந்தால், புறப்பாடுகளில் ஸ்ரீ தேசிகனும் பிரகாரம் எழுந்தருள்வது.*

***முக்கிய திருவாபரணங்கள்***

*ரத்ன கிரீடம், பச்சைக்கல் கிரீடம், பெரிய லக்ஷ்மீ பதக்கம், அமுதன் பதக்கம், கல்லிழைத்த பஞ்சாயுதங்கள், தாயாரின் பத்ம ஹஸ்தம், வர அபய முத்திரைகள் இவைகளை விசேஷ உத்ஸவங்களில் பெருமாள் தாயார் சாத்திக் கொள்வர். கல்லிழைத்த வடகலைத் திருமண் காப்பை மூலவர் எப்பொழுதும் சாத்திக் கொண்டிருப்பர்.*

***பிரதி மாத உத்ஸவ விபரம்***

*சித்திரை:*
1. *அக்ஷய த்ருதியை: காலை கருடோத்ஸவம், சக்ரராஜன், ராமன் முதலாக 12 பெருமாள்கள் கருடசேவை.*
2. *சித்திரைத் திருவாதிரை - ஸ்ரீராமாநுஜர் மங்களாசாசனம்.*
3. *சைத்ர உத்ஸவ ம்ருத்ஸங்க்ரமணம் - நகர சோதனை, விடையாற்று உத்ஸவங்கள்.*

*வைகாசி:*
1. *வஸந்த உத்ஸவம் - வெள்ளி ரதம்.*
2. *வைகாசி விசாகம் - நம்மாழ்வார் உத்ஸவம் 10 நாள்.*
3. *வைகாசி ரோஹிணீ - ஐயா குமாரதாத தேசிகன் திருநக்ஷத்திரம்.*

*ஆடி:*
1. *பதினெட்டாம் பெருக்கு, தக்ஷிணாயனத்திருவாசல் திறப்பு*
2. *திருவாடிப் பூரம் (ஸ்ரீ ஆண்டாள் திருநட்சத்திரம்)*
3. *திருப் பவித்ரோத்ஸவம்*
4. *ஜ்யேஷ்டாபிஷேகம்*

*ஆவணி:* *ஸ்ரீ ஜயந்தி*

*புரட்டாசி:*
1. *நவராத்ரி உத்ஸவம் 9 நாட்கள்*
2. *விஜய தசமி*
3. *ஸ்ரீதேசிகனுத்ஸவம் 10 நாட்கள்*

| | | |
|---|---|---|
| ஐப்பசி: | | தீபாவளி உத்ஸவம் |
| கார்த்திகை: | 1. | கைசிகப் புராணம் கேட்டல் |
| | 2. | திருக்கார்த்திகை |
| | 3. | டோலோத்ஸவம் 10 நாட்கள் |
| மார்கழி: | 1. | பகல் பத்து 1ம் தேதி முதல் 10ம் தேதி வரை |
| | 2. | இராப்பத்து 11ம் தேதி முதல் 20ம் தேதி வரை |
| | 3. | இயற்பா 21ம் தேதி |
| | 4. | தேசிகபிரபந்தம் 22ம் தேதி, த்வஜாரோஹணம் |
| | 5. | மகர ஸங்க்ரமண உத்ஸவாரம்பம் 23ம் தேதி |
| தை: | 1. | வெள்ளிரதம், உத்தராயண வாசல் திறப்பது |
| | 2. | கனு உத்ஸவம் கோ பூஜை |
| | 3. | பரிவேட்டை |
| | 4. | திருவேடர்பறி |
| | 5. | மட்டையடி |
| | 6. | தாயார் அத்யயன உத்ஸவம் |
| | 7. | தை அமாவாஸ்யை |
| | 8. | ரத ஸப்தமி |
| மாசி: | | தெப்ப உத்ஸவம் |
| பங்குனி: | 1. | யுகாதிப் பண்டிகை |
| | 2. | தாயார் பிரம்மோத்ஸவம் |
| | 3. | திருக் கல்யாண உத்ஸவம் |
| | 4. | புஷ்ப பல்லக்கு உள் புறப்பாடு |
| | 5. | திருக் கல்யாண விடாயாற்றி |

### மாஸோத்ஸவங்களில் சில சிறப்புகள்

1. மார்கழி மாதத்தில் 10ம் நாள் திருமங்கை மன்னன் திருவடித் தொழுவது. இவ்வைபவம் இங்குதானே ஏற்பட்டது.
2. 15ம் நாளில் பரமபதநாதன் ஸேவையில் நம்மாழ்வாரின் ஆராவமுதே பதிகத்தில் நம் ஆழ்வார் திருவடித் தொழுவது.
3. 19ம் நாளில் பெருமாளுக்கு நாச்சியாராகவும், தாயாருக்குப் பெருமாளாகவும் திருக்கோலம் (இவ்வைபவம் வேறெங்குமில்லை)
4. 20 நாளில் நம்மாழ்வார் திருவடித் தொழுவது.
5. அமுதனை அடிபணிந்ததால் ஆழ்வார் அருளிச் செயல்களை அறியப்பெற்று உலகில் நடையாட விட்டார். ஆகவே அமுதன் ஸன்னதியில் நம்மாழ்வார் மூலவரை 'தொழுதெழு என் மனனே' என்பதற்குப் பொருத்தமாக ஹ்ருதயத்தில் வைக்கப்பட்ட கையுடனும், உத்ஸவரை, "குடந்தைத் திருமாலே தரியேன் இனி உன் சரணம்தந்து,

என் சன்மம் களைவாயே" என்பதற்குப் பொருத்தமாகக் கூப்பிய திருக்கைகளுடனும் எழுந்தருளப் பண்ணுவித்தப்படியைச் சேவிக்கலாம்.

6. மற்ற ஊர்களில், அத்யயனோத்ஸவம், ஏகாதசிக்கு முன் பத்து நாள், பின் பத்துநாள்உத்ஸவம் என்பது போலிராமல் உயர்ந்த மாதமான மார்கழி மாதத்தை விட்டு, பெருமாள் உற்சவம், கார்த்திகை, தை, இந்த மாதங்களின் ஸம்பந்தம் பெறாமலும் ஏற்பட்டிருப்பது மிகவும் ஏற்றமுடையது.
7. சித்திரை, மார்கழி இரு பிரம்மோத்ஸவ யானை வாஹனத்தன்றும் பொற்றாமரை ஹேமமஹர்ஷி ஸன்னதி வாசலில் திரும்பி நின்று கோமளவல்லித்தாயாருடன் பெருமாள் மாலை மாற்றல்.
8. தை 1ம் தேதி காலை வெள்ளிரதம், மத்யான்னம் ஸ்ரீ ஆராவமுதன், ஸ்ரீ சக்கரராஜனுடனும் ஸ்ரீ ராமனுடனும் ஹேம புஷ்கரணியில் தீர்த்தவாரி. உடன் எழுந்தருளி உத்தராயண வாசல் திறப்பு.
9. கனு உத்ஸவத்தில் மாலையில் கோமளவல்லித்தாயார், விஜயவல்லி, ஸீதாப்பிராட்டி முதலானாருடன் புஷ்கரிணியில் கனு தீர்த்தவாரி.
10. தை 3ம் தேதி காலையில் அரசர்கள் குதிரை ஏறி வேட்டைக்குச் செல்வதுபோல், மூன்று பெருமாள்களும் ஊரை விட்டுச் சிறிது தூரம் எழுந்தருள்வது.
11. தை 3ம் தேதி இரவு திருவேடர் பறி உற்சவத்தில், ஆராவமுதனிடம் போல் பாசுர அனுபவப் பொருத்தமும், பரிவேட்டைஅன்றிரவே திருவேடர் பறி உத்ஸவமும் சேர்ந்து பொருந்தி அமைந்திருப்பது வேறெங்கும் காண்பதரிது. முதலில் திருமங்கையாழ்வாருக்கு அருளியது திருக்குடந்தை எம்பெருமானே என்பது தெள்ளத் தெளிவு.
12. ஆனிஸ்வாதியில், பரதத்வ நிர்த்தாரண உத்ஸவம் அதாவது பெருமாள் கருட வாஹனத்திலும், ஆழ்வார் யானை வாஹனத்திலும் திருவீதி எழுந்தருளியருளும் உத்ஸவம் தற்காலத்தில் நடைபெற வில்லை.

*இயல் 4*

# ஆழ்வார்களும் திருக்குடந்தையும்

*(பகுதி - 1)*

*திவ்விய தம்பதிகளான ஸ்ரீமந்நாராயணனும், பெரிய பிராட்டியாரும் "இவ்விருள்தருமா ஞால"[1] த்தில் ஸம்ஸாரிகளை உய்விக்க, ஆங்காங்கே அர்ச்சாவதாரமாகக் கோயில் கொண்டு விளங்கிறார்கள். இத்தம்பதிகளால் மயர்வற மதிநலம் அருளப்பட்ட திவ்ய சூரிகள், ஆழ்வார்களாக அவதரித்தனர். ஆழ்வார்களால் பாடல் பெற்ற வைஷ்ணவ ஸ்தலங்கள் திவ்விய தேசங்களாயின. ஆழ்வார்களால் பாடப்பெற்ற பாசுரங்களோ திவ்யப்ரபந்தமாயின. இத்திவ்யப்ரபந்தத்தை "திராவிட வேதம்" என்றும் 'அருளிச் செயல்கள்' என்றும் பெரியோர்கள் போற்றிப் புகழ்ந்துள்ளனர். திவ்விய தேசங்களில் ஓதப்பட்டு வந்த திவ்விய பிரபந்தங்கள் ஆழ்வார்களுக்குப் பின், ஒருகால விசேஷத்தால், சிறிது சிறிதாக மறைந்தன. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு ஆதாரமாக விளங்கும் இத்தமிழ் மறைகளாகிற அருளிச் செயலை மீட்ட பெருமை திருக்குடந்தை ஆராவமுதனையே சாரும். ஸ்ரீமந்நாதமுனிகள் வாயிலாக இணையற்ற தமிழ்மறையை உலகிற்கு மீட்டுத் தந்த மஹோபகாரகன் ஆராவமுதனே! "த்ராவிடவேததர்சகாய நம:" என்று நாமாவளியில் பெயர் பெற்றவன் குடந்தைத் திருமால். திருக்குடந்தைக்கும் 'திவ்விய ப்ரபந்தம் விளைந்த திருப்பதி' என்று புகழ் வந்தடைந்தது.*

*திருக்குடந்தையை மங்களாசாசனம் செய்த ஆழ்வார்கள் எழுவர். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஸ்ரீ ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகியோர். 'வேதம் தமிழ் செய்த ஆழ்வார்கள்' எம்பெருமானின் பக்தி வெள்ளத்தில் மூழ்கி, உதிர்த்த முத்துச்சரங்களே பாசுரங்கள். ஞானம் கனிந்த நலமாக, பகவத்*

---

*1. திருவாய் மொழி, 10.6.1.*

அனுபவ பரீவாஹத்தினால் உதித்த பாடல்கள், வற்றாது சுரக்கும் சுரபி களான ஆழ்வார்களால் திருவாய்மலர்ந்தருளப் பட்டதால் பாசுரங்க ளாயின.

தெள்ளிய ஞானம் கொண்ட ஆழ்வார்கள் இயற்றியது தீந்தமிழில்! 'அமுதினும் ஆற்ற இன்சொல்' என்றே புகழப்படும் தமிழும் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற மால் உகந்த ஆசிரியர்களான ஆழ்வார்களின் திருநாவில் தவழ்ந்து, தளர்நடையிட்டுப் புறப்பட்டு, பக்தர்களின் செவி வழி புகும்பொழுதும், சிறப்பாகக் குடந்தை ஆராவமுதன் பெருமை என்னும் முத்தாரமிட்டுத் தாவிவரும் பொழுதும், 'திவ்யாம்ருதமாகவே' (தெய்வீக இன்னமுதாகவே) இருக்கும்.

பிறவி எனும் பெரும் பிணியைப் போக்கும் இத்திவ்யாம்ருதத்தைச் சிந்திக்க சிந்திக்க தித்திக்கும். வந்திக்க வந்திக்க பெருநிலமளிக்கும். பெருநாட்டில் வைகுந்த வான்போகமாகிய கைங்கரியம் என்னும் வீடுபேற்றைத் (பரமபுருஷார்த்தத்தைத்) தரும். விண்ணோர்களையும் விருந்திட்டு இவ்வுலகத்திற்கு அழைக்கும். மறைகளெல்லாம் காணவொட்டாத கார்முகில் வண்ணனைப் பயிலுவோர் முன் நிறுத்தி, "பச்சைமா மலைபோல் மேனி, பவளவாய், கமலச் செங்கண்"[1] என்றபடிக்கு கண் ஒத்திஒத்தி அனுபவிக்கப் பண்ணும். ஆகையால் தான் நம்மாழ்வாரின் அருளிச் செயலை, 'பக்தாம்ருதம்', 'ஸர்வார்த்ததம்' என்று ஸ்ரீமந் நாதமுனிகள்[2] உணர்ந்து சிறப்பித்தார்.

ஆழ்வார்கள் அருளிச்செயல்களை 'ஈரச்சொற்கள்' என்றே பெரியோர்கள் மதித்துரைப்பர். 'அன்பு நிறைந்த சொற்களாக,' அன்பே சொல் வடிவம் கொண்டு வந்ததாகவும் கூறுவர். வாடாத, வற்றாத சொற்களே இவை. மெய்ப்பொருளைக் கண்ட ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகள் இன் சொல்லாகவும், படிறு அற்றதாகவும் இருக்கும். இதனையே திருவள்ளுவர்,

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்,<br>
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். (திருக்குறள், 91)

---

1. திருமாலை, 2.

2. திருவாய்மொழி – வடமொழித் தனியன்.

என்று காட்டுகிறார். 'செம்பொருள் கண்டார்' என்ற சொல் ஆழ்வார்களையும், 'வாய்ச்சொல்' என்பது திருவாய்மொழியையும் குறிப்பது போல் அமைந்துள்ளன.

கலங்காப் பெரு நகராம் திருநாட்டில் ஸாமகான இசையையே கேட்டு பகவானை அனுபவித்த நித்தியஸூரிகள், திருவாய்மொழியின் இன்ப நாதம் கேட்கவும், இன்பொருள் சுவைக்கவும், இம்மண்ணுலகிற்குக் குழாமாகக் கூடினதைக் கண்டே நம்மாழ்வாரும், "பொலிக ! பொலிக ! பொலிக !"[1] என்று அருளினர் போலும். இதனால் நித்தியஸூரிகளுக்கும், அரும்பெரும் திவ்வியத் தமிழுக்கும் ஆழ்வார் பல்லாண்டு பாடினார் என்றால் மிகையாகாது.

"அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த வாழ்வார்கள்,
இந்த உலகிலிருள் நீங்க - வந்துதித்த,"[2] "ஒப்பிலவா நாள்கள்"[3]

"மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்கள் என்னும் பெயரிவர்க்கு!..."[4]

1. முதலாழ்வார்களில் இரண்டாமவரான பூதத்தாழ்வார் ஐப்பசி அவிட்டத்தில் திருக்கடன் மல்லைத் திருத்தலத்தில், குருக்கத்தி மலரில் அவதரித்தார். அன்பை அகலாக்கி, ஆர்வம் எனும் பரபக்தியை நெய்யாக்கி, உருகும் தன் மனதை திரியாக்கி ஞானவடிவான ஆன்மா கரையப் பெற்று, பரஜ்ஞானம் சுடர் விடும் விளக்கை நாராயணனுக்கு ஏற்றுவதாக ஆரம்பித்து, ஒரு நூறு இரண்டாம் திருவந்தாதிப் பாசுரங்களை இயற்றியருளினார். திருக்குடந்தையை இவ்வாழ்வார் இரண்டு பாசுரங் களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

---

1. திருவாய்மொழி, 5.2.1.

2. உபதேச ரத்தினமாலை, 5.

3. மேற்படி, 6.

4. மேற்படி, 7.

*தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்*
*தமருள்ளுந் தண் பொருப்பு வேலை - தமருள்ளும்*
*மாமல்லை கோவல் மதிள் குடந்தை யென்பரே*
*ஏவல்ல வெந்தைக் கிடம்.* *(இரண்டாம் திருவந்தாதி, 70)*

பகவானுடைய உறைவிடம் என்று குறிப்பிட (ஸாதிக்க) வந்த ஆழ்வார், திவ்யக்ஷேத்திரங்களில் தலை சிறந்ததான திருவரங்கம், தஞ்சை, திருத்தண்கால், திருவேங்கடம், திருப்பாற்கடல், திருக்கடன்மல்லை, மற்றும் திருக்கோவிலூர் ஆகிய திவ்விய தேசங்களில் உறைவதுடன், உயர்ந்த மதில் சூழ்ந்து விளங்கும் திருக்குடந்தையிலும் உறைகின்றான் என்று தலைக்கட்டுகிறார்.

திருக்குடந்தை என்ற பெயரை அனுஸந்திக்கும் போதே 'சார்ங்கவில் சேவகனாக'[1] சார்ங்கராஜனாக எம்பெருமான் காட்சி அளித்ததை உகந்து, 'ஏவல்ல எந்தைக் கிடம்' என்று அம்பு எய்வதில் வல்ல எந்தையான இராம பிரான் எழுந்தருளியிருக்குமிடம் என்று திருக்குடந்தைத் திருநகருக்கு மங்களாசாசனம் செய்கிறார். எம்பெருமான் வில்லுக்கு ஸ்ரீ சார்ங்கம் என்று பெயர். 'சார்ங்கம் உதைத்த சரமழை'[2] என்று ஸ்ரீ ஆண்டாளும் ஸ்ரீ சார்ங்க-பாணியை மனதில் கொண்டே பாடினாள்.

இவ்வாழ்வார் மேலும், முதல் ஆழ்வார்கள் சார்பில் பேசுவதுபோல் 'எங்கள் பெருமான்' என்றும், ஆராவமுதனே, 'இமையோர் தலைமகன்' என்றும் கூறுகிறார்.

*எங்கள் பெருமான் இமையோர் தலைமகன் ! நீ*
*செங்கண் நெடுமால் ! திருமார்பா! - பொங்கு*
*படமூக்கினாயிரவாய்ப் பாம்பணை மேல் சேர்ந்தாய்*
*குடமூக்கில் கோயிலாக் கொண்டு.*

*(இரண்டாம் திருவந்தாதி, 97)*

திருமார்பனே! திருமகளைத் திருமார்பில் உடையவனே! சிவந்த கண்களுடன் நித்திய ஸூரிகள் தலைவனாயும், எங்கள் பெருமானாயும்

*1. பெரியாழ்வார் திருமொழி, 5.4.4.*

*2. திருப்பாவை, 4.*

உள்ள நீ, குடமூக்கு என்ற கும்பகோணத் தலத்தில், உயர்ந்த படங்களையும், மூக்கையும், ஆயிரம் வாய்களையும் உள்ள ஆதிசேக்ஷன் மீது பள்ளி கொண்டபடி எழுந்தருளியுள்ளாய்!

'குடமூக்கில் கோயிலாக் கொண்டு' என்று ஆராவமுதனின் கிடந்த அழகை வார்த்தைகளால் அழகு செய்தார் ஆழ்வார். ஸ்ரீசேஷசாயியான திருப்பாற்கடல்நாதனே, இத்தலத்து நாச்சியாராகிய ஸ்ரீ கோமள வல்லித் தாயாரைக் கூடிக் களிக்கவே ஸ்ரீ சார்ங்க ராஜனாக கும்பகோணத்தை நாடி வந்து பொற்றாமரையில் வந்துதித்தான், ஹேமமகரிஷியின் முன் மணந்தான் என்று சொல்லும்படி உள்ளது.

பூதத்தாழ்வார் அவதரித்த இடம் குருக்கத்திமலர். குடந்தைக்கிடந்த கோமான் சென்னியில் சூடிக்களிப்பது குருக்கத்திமலர். 'குடந்தைக்கிடந்த எங்கோவே! குருக்கத்திப்பூச்சூட்ட வாராய்!' என்று பெரியாழ்வாரும் தம் திருமொழியில் உரைத்ததைப் பிரமாணமாகக் கொண்டு பார்த்தால், எம்பெருமான் சூடிக்களிக்க எத்தனையோ விதமான பூக்கள் இருக்க, இவ்வாழ்வார் அவதரித்த இடமான குருக்கத்திப் பூவைச் சூடுமது பூதத்தாழ்வார் பெருமையைக் காட்டுகிறது.

2. முதலாழ்வார்களில் மூன்றாமவரான ஸ்ரீபேயாழ்வாரும் திருக்குடந்தையை இரண்டு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்கிறார்.

சேர்ந்த திருமால் கடல் குடந்தை வேங்கடம்
நேர்ந்த என் சிந்தை நிறை விசும்பும் - வாய்ந்த
மறை பாடகம் அனந்தன் வண்டுழாய்க் கண்ணி
இறை பாடி யாயவிவை.

*(மூன்றாம் திருவந்தாதி, 30)*

திருப்பாற்கடல், திருக்குடந்தை, திருவேங்கடம், தன்னுடைய உள்ளம், பரமபதம், வேதம், திருப்பாடகம், ஆதிசேஷன் -- இவற்றில் எல்லாம் பகவான் நித்திய வாசம் செய்கிறான் என்கிறார். பரம சுலபனான எம்பெருமான் ஸௌசீல்யம் முதலான குணங்கள் தோன்ற, திருத்துழாய் மாலை அணிந்த திருமாலாக எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்களோடு, பூமியில் அழகோடு விளங்கும் தண் குடந்தையையும் குறிப்பிடுகிறார்.

*எம்பெருமானின் நீர்மைக் குணத்தைக் காட்டுமதாக மற்று மோரிடத்தில்,*

*விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்*
*மண் நகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த*
*தென் குடந்தை தேன் ஆர் திருவரங்கம் தென் கோட்டி*
*தன் குடங்கை நீர் ஏற்றான் தாழ்வு.*

*(மூன்றாம் திருவந்தாதி, 62)*

*பேயாழ்வார், மாவலியிடம் தன் உள்ளங்கையில் நீர் ஏற்ற திருமால் தன் நீர்மைக் குணத்தால் எழுந்தருளிய திருப்பதிகள், திருவிண்ணகரம், திருவெஃகா, நீர் வளமுள்ள திருவேங்கடம் (திருமலை), மாடங்களுடைய திருவேளுக்கை, பூமியின் நடுநாயகமான திருக்குடந்தை, தேன் துளிர்க்கும் சோலைகள் உள்ள திருவரங்கம், தெற்கே உள்ள திருக்கோட்டியூர் முதலியனவாகும் என்று வியந்து ஏழு திவ்யதேச எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்கிறார்.*

*3. எம்பெருமான் மீது மிக்க வியாமோஹம் கொண்ட ஆழ்வார்களுள் திருமழிசையாழ்வார் தனிச் சிறப்புப் பெற்றவர். கிடந்த திருக்கோலத்தில் சேவை சாதித்த ஆராவமுதனைக் கண்டு,*

*நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலம் ஏனமாய்*
*இடந்த மெய் குலுங்கவோ? விலங்கு மால் வரைச்சுரம்*
*கடந்த கால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்*
*கிடந்த வாறு எழுந்திருந்து பேசு! வாழி கேசனே!*

*(திருச்சந்த விருத்தம், 61)*

*என்று சந்தச் சுவை சொட்டச் சொட்ட, தாளகதியுடன் இன்பப் பாவால் விருத்தப் பாடல்கள் பாடி, "எம்பெருமானே! நீ ஏன் பள்ளி கொண்டாய்? நாட்டில் பிறந்து மனிசர்க்காய் படாதனபட்டு நடந்ததால் வந்த களைப்போ? பூமியின் கம்பம்தீர வராஹனாய் நிலம் கீண்டு கோட்டிடைக்கொண்டதால் வந்த இளைப்போ? எதுவாயினும் அடியாரைக் கண்டதும் புன்முறுவல் பூத்து உடலில் சிறிது அசைவினை*

*யாயினும் ஏற்படுத்தாயோ? அடியேன் வருகையை உன் இன்முகம் காட்டி அருளாயோ? குளிர்ந்த காவிரி ஓடும் குடந்தையில் பள்ளி கொண்டு உள்ளாயே!'' என்று கூறியதும், ஆழ்வாரின் தமிழமுதூறும் சொல்லின்பச் சுவையில் மோஹித்து (லயித்து) விழித்தவாறிருக்க, ஆழ்வாரும் 'கிடந்தவாறு எழுந்திருந்து பேசு' என்று அன்பு ஆணையிட அர்ச்சா ஸமாதியையும் மீறி, பாம்பணையில் இருந்து எழ முற்பட்டார். பக்த பராதீனனான எம்பெருமான் எழுந்திருக்க முயல, ஆழ்வார் ஆச்சரியப்பட்டு, "வாழி கேசனே!, அப்படியே உத்தான சயனத்தில் சேவை சாதிக்கவேண்டும்" என்று மங்களாசாசனம் செய்தார்.*

*பக்தரான திருமழிசை யாழ்வாருக்கு 'பிரான்' என்ற பட்டத்தை அளித்து, தான் 'ஆராவமு தாழ்வான்' என்னும் பிருதத்தைப் பெற்றான்.*

*இலங்கை மன்னன் ஐந்தொடைந்து பைந்தலை நிலத்துக*
*கலங்க அன்று சென்று கொன்று, வென்றி கொண்ட வீரனே!*
*விலங்கு நூலர் வேத நாவர் நீதியான கேள்வியார்*
*வலங் கொளக் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே?*

*(திருச்சந்த விருத்தம், 56)*

*அன்று இலங்கை அரசன் இராவணனின் பத்துத் தலைகளை நிலத்திலே விழும்படி, கொன்று வெற்றி அடைந்த இராமபிரானே! பூணுநூல் அணிந்த, நீதி மிக்க, வேத விற்பன்னர்கள் வலம் வரும் சிறப்புடன் திருக்குடந்தையிலே கண் வளர்ந்த திருமால் நீயே அன்றோ!*

*சங்கு தங்கு முன்கை நங்கை கொங்கை தங்கலுற்றவன்*
*அங்கம் மங்க அன்று சென்றடர்த்து எறிந்த ஆழியான்*
*கொங்கு தங்கு வார்குழல் மடந்தை மார்குடைந்த நீர்*
*பொங்கு தண் குடந்தையுள் கிடந்த புண்டரீகனே.*

*(திருச்சந்த விருத்தம், 57)*

*முன்கை வளை அணிந்த அழகிய சீதையை ஆசைப்பட்ட இராவணனின் உடல் அழிய தலை அறுத்துக் கொன்றவனும், மணம் வீசும் கூந்தலுடைய பெண்கள் குடைந்தாடும் சிறப்புடைய திருக்குடந்தையுள் பள்ளிகொண்ட தாமரைக் கண்ணனும் கடல் நிற வண்ணனும் ஸ்ரீராமனே ஆவர்.*

*மரம்கெட நடந்து அடர்த்து, மத்தயானை மத்தகத்து*
*உரம் கெடப்புடைத்து, ஓர் கொம்பு ஒசித்து உகந்த உத்தமா!*
*துரங்கம் வாய் பிளந்துமண் அளந்த பாத! வேதியர்*
*வரம் கொளக் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே!*

*(திருச்சந்த விருத்தம், 58)*

*மருதமரங்கள் சாய்ந்து அழியும்படி தவழ்ந்தவனே! மதம் மிக்க குவலயாபீடத்தின் மத்தகத்தில் அடித்து அதன் கொம்புகளை முறித்து மகிழ்ந்தவனே! உத்தமனே! கேசியின் வாய் பிளந்தவனே! பூமி அளந்த பாதனே! வேதியர்கள் வரம் பெறும்படி திருக்குடந்தையில் பள்ளி கொண்ட திருமால் நீயே!*

*சாலி வேலி தண்வயல் தடங்கிடங்கு பூம்பொழில்*
*கோல மாடம் நீடு தண் குடந்தை மேய கோவலா!*
*கால நேமி வக்கரன் கரன் முரன் சிரம் அவை*
*காலனோடு கூட விற்குனித்த வில்கை வீரனே!*

*(திருச்சந்த விருத்தம், 59)*

*நெல் வயல்களும், அகன்ற அகழிகளும், பூந்தோட்டங்களும் உயர்ந்த மாடங்களும் நிறைந்த திருக்குடந்தையில் எழுந்தருளிய திருமாலே (கண்ணனே)! காலநேமி, தந்தவக்கரன், கரன், முரன் ஆகியோர் தலைகளை அறுத்து யமனுலகுக்கு அனுப்பிய வில்லாளி நீயேயன்றோ!*

*செழுங் கொழும் பெரும்பனி பொழிந்திட உயர்ந்த வேய்*
*விழுந்துலர்ந்து எழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள் நின்று,*
*எழுந்திருந்து தேன் பொருந்து பூம்பொழில் தழைக் கொழும்*
*செழுந்தடங் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே?*

*(திருச்சந்தவிருத்தம், 60)*

*திருவேங்கட மலையில் பனி மூடின மூங்கில்கள் சாய்ந்து, சூரிய வெப்பத்தால் உலர்ந்து எழுந்து விண்ணை முட்டும். திருக்குடந்தையிலோ, வண்டுகள் உயரக்கிளம்பிக் கீழே வந்து, பூக்கள் மலர்ந்த சோலைகளிலும் குளங்களிலும் வந்து தங்கும். திருவேங்கடத்துள் (திருமலையில்) நின்ற திருமாலே, திருக்குடந்தையுள் பள்ளி கொண்டுள்ளான்!*

திருமழிசையாழ்வார், திருச்சந்தவிருத்தத்தில் ஆறு பாசுரங்களும், நான்முகன் திருவந்தாதியில் ஒரு பாசுரமும் திருக்குடந்தைக் கோமானை மங்களாசாஸனம் செய்துள்ளார்.

பள்ளிகொண்டுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளை மங்களாசாசனம் செய்ய முற்பட்ட ஆழ்வார், நான்முகன் திருவந்தாதியில்

நாகத்தணைக் குடந்தை வெஃகா திருஎவ்வுள்
நாகத்தணை அரங்கம் பேர் அன்பில் -- நாகத்து
அணைப் பாற்கடல் கிடக்கும், ஆதி நெடுமால்
அணைப்பார் கருத்தன் ஆவான்.

(நான்முகன் திருவந்தாதி, 36)

என்று திருக்குடந்தை, திருவெஃகா, திருஎவ்வுள், திருவரங்கம், திருப்பேர், திருஅன்பில் ஆகிய திவ்விய தேசங்களிலும், திருப்பாற்கடலிலும் ஜகத் காரணனான திருமால், பக்தர்கள் இதயத்தில் புகுவதற்காகப் பள்ளி கொண்டிருக்கிறான் - என்கிறார்.

"நாகத்தணை" என்றதுமே ஆழ்வார் முதலில் ஈடுபட்டது திருக்குடந்தை எம்பெருமானிடத்திலே என்பதை இப்பாடல் காட்டுகிறது.

**பெரியாழ்வார் ஆராவமுதனிடம் கொண்ட அனுபவம்**

4. பெரியாழ்வாருக்கு ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் மிகுந்த ஈடுபாடு. தன்னை யசோதைப் பிராட்டியாக பாவித்து,கண்ணனின் குழந்தைப் பிராயத்தின் லீலா ரஸத்தைப் பருகி, தன் அனுபவ பரீவாஹமாக பாசுரங்கள் பாடுகிறார். பாசுரங்கள் முழுவதும் ரஸகனம் மிக்கவை. கண்ணனைத் தாலாட்டுதல், அவனுடைய சப்பாணிப் பருவம், செங்கீரைப் பருவம், அவன் அம்மம் உண்ணுதல், நீராட்டல், பூச்சூடுதல், தளர்நடை, குழல் வாரிப் பின்னுதல், அவனுக்குக் காப்பிடல், கண்ணனின் ஆச்சரிய சேஷ்டிதங்கள், கண்ணனை மாடு மேய்க்க அனுப்புதல், மாடுமேய்த்து திரும்பி வரும் அழகு, குழலெடுத்தூதிய ஆச்சரியானுபவம், முதலியவை களை பதிகங்களாக அனுபவிக்கிறார். அப்படி அனுபவிக்கும் போது ஆராவமுதனையும் மங்களாசாசனம் செய்கிறார்.

எம்பெருமான் கண்ணனைத் துயில் கொள்ளச் செய்ய, தாலாட்டு பாடுகிறார் பெரியாழ்வார். தால் என்றால் நா; ஆட்டு என்றால் அசைத்தல் நாவை அசைத்து எழுப்பும் ஒலியைக் கொண்டு குழந்தையைத் தூங்கச் செய்வது பற்றி, பெரியாழ்வார் ஒவ்வொருவராக பிரமன், கபாலீசன், தேவேந்திரன், அமரர்கள், குபேரன், வருணதேவன், பூமிப்பிராட்டி, காளிதேவி -- என இவர்கள் எம்பெருமானுக்குக் கொடுத்த பலவித பொருட்களைக் காட்டிப் பாடுகிறார். இப்பாட்டில், ஸ்ரீமஹாலக்ஷ்மி திருத்துழாய் கண்ணிகளைக் கொண்டு கட்டிய மாலையையும், கற்பகப் பூக்களாலான திருநெற்றி மாலையையும் கொடுக்கிறாள் -- என்கிறார்.

(1) கானார் நறுந்துழாய் கை செய்த கண்ணியும்
வானார் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேனார் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள்
கோனே! அழேல், அழேல் தாலேலோ!
குடந்தைக் கிடந்தானே! தாலேலோ!

(பெரியாழ்வார் திருமொழி, 1.4.7.)

ஸ்ரீமஹாலக்ஷ்மி கொடுத்துள்ள நெற்றிமாலை எம்பெருமான் திருநெற்றிக்கும், கிரீடத்துக்கும் இடையே சாற்றப்படுவது. உலோகத் தாலான கிரீடம், கோமள சுகுமாரனின் நெற்றியில் பதிந்தால் உறுத்தலெடுத்து வலிக்குமே! என்று, தன் மணாளனின் (பதியின்) அந்தரங்க கைங்கரிய ருசியறிந்தவளாய் நெற்றிமாலை இட்டாள். அதுவோ ஆகாயம் நிறையும்படி சோலை போன்றுள்ளது.

இப்பாசுரத்தில் குடந்தைக் கிடந்தானே! என்றழைத்தார் ஆழ்வார். மற்றைய பாசுரங்களில் தேவகி சிங்கமே! சுந்தரத்தோளனே! நாராயணா! என பல பெயர்கள் இட்டழைத்தார். அவை பிரமன் முதலான மற்ற தேவர் குழுக்கள் எம்பெருமானுக்கு இட்ட வஸ்துக்களைப் பார்த்துப் பாடியவை. ஆனால், இப்பாசுரத்தில் திருமகள் தன் நாதனுக்குக் கொடுத்த அன்பு மாலையைக் கண்டதும், ஹேம புஷ்கரணியில், ஹேம முனிவருக்கு, ஹேமலக்ஷ்மியாக கோமளவல்லி என்ற திருநாமத்துடன் வளர்ந்து பின் எம்பெருமான் சார்ங்கபாணியாக, திருக்குடந்தையைத் தேடி வந்து மலர்

சூடி மணந்த திருத்தலப்பெருமை நினைவு வர, ஆழ்வார் திருவுள்ளம் மகிழ்ந்து 'திருமங்கை' என்ற பதம் வந்ததும், "குடந்தைக் கிடந்தானே" எனத் தொடர்ந்து பாடிக் களிப்புற்றார்.

*(2) தூநிலா முற்றத்தே போந்து விளையாட*
*வான்நிலா அம்புலீ! சந்திரா! வா என்று*
*நீநிலா, நின் புகழாநின்ற ஆயர்தம்*
*கோநிலாவக் கொட்டாய் சப்பாணி!*
*குடந்தைக் கிடந்தானே! சப்பாணி!*

*(பெரியாழ்வார் திருமொழி, 1.7.4)*

ஆகாயத்தில் உலாவும் அம்புலிச் சந்திரனே! நிலா முற்றத்தில் விளையாட வா! என்று அழைத்து, உன் குறும்புகளைப் பாராட்டும் இடையர் தலைவரான நந்தகோபர் மகிழும்படி சப்பாணி கொட்டு! திருக்குடந்தையில் கண் வளர்ந்தருள்பவனே! மெதுவாகச் சப்பாணிக் கொட்டு.

தூநிலா முற்றம்

திருக்குடந்தையில் ஸ்ரீஆராவமுதன் சந்நிதியில் உள்ளது இம் முற்றம். ஸ்ரீ ஆண்டாள் சந்நிதிக்கு எதிரில் பரந்து காணப்படும் வடக்குச் சுற்றைப் பெரியாழ்வார்,

*"தூநிலா முற்றத்தே போந்து விளையாட*
*வானிலா அம்புலீ சந்திரா வா வென்று..."*

என்ற அருளிச் செயல் பகுதியினால் மங்களாசாசனம் செய்தபடியால், இப்பகுதிக்கு 'தூநிலா முற்றம்' என்றே பெரியோர்கள் பெயரிட்டனர். திருவரங்கத்தில் உள்ளது 'அணி அரங்கன் திருமுற்றம்' என்று குலசேகரப் பெருமாளும், திருக்கண்ணபுரத்தில் "நீணிலா முற்றம்" எனத் திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளபடிக்கு, இவ்விடத்திய இப்பெரும்முற்றத்தைப் பெரியாழ்வார் 'தூநிலா முற்றம்' என மங்களாசாசனம் செய்தருளினார்.

*ஆடுக செங்கீரை! என்று உடலசைத்து ஆடியபின், குழந்தையின் வளர்ச்சியின் ஒரு நிலையாக, இரு கைகளால் தட்டி சத்தமெழுப்புதலாக இப்பத்து பாசுரங்களை சப்பாணிப் பருவம் என்ற தலைப்பில் "கொட்டாய் சப்பாணி!" என்று அருளிச் செய்துள்ளார்.*

*(3) பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை*
*இரந்திட்ட கைம் மேல் எறிதிரை மோதக்*
*கரந்திட்டு நின்ற கடலைக் கலங்கச்*
*சரந் தொட்ட கைகளால் சப்பாணி*
*சார்ங்கவிற் கையனே! சப்பாணி!*

*(பெரியாழ்வார் திருமொழி, 1.7.7)*

*ஸ்ரீ சார்ங்கம் எனும் வில்லைக் கையில் தாங்கியவனே! ஆழ்ந்த அகன்ற கடலிடத்தே சரணாகதி செய்தும், கடலரசன் தன் முகம் காட்டாமல், அலைத் திவலைகள் உன் கைகளில் வீசும்படி செய்தான். கடலரசன் கலங்கும்படி அம்புகளை ஏவின கைகளால் சப்பாணி கொட்டு! "குடந்தைக்கிடந்தானே!" என்று கிடையழகைக் காட்டியபடி எழுந்து- அருளியுள்ள ஆராவமுதனை (மூலவரை) முன் பாசுரத்திலும், பொற்றாமரைக் குளத்தில் சார்ங்கவில்லை ஏந்தியவனாய் எழுந்தருளிய சார்ங்கபாணியை (உற்சவரை) இப்பாசுரத்திலும் மங்களாசாசனம் செய்கிறார். இப்பதிகம் முழுவதுமே எம்பெருமான் தன் திருக்கரங்களால் செய்த அமானுஷ்ய சேஷ்டிதங்களைப் பாடி ஆழ்வார் மங்களாசாசனம் செய்கிறார். ஆழ்வார் மிக அழகாக, சார்ங்கவில் என்று குறிப்பிட்டு உள்ளார். இது வடமொழிச் சொல்லாயினும் தமிழிலும் ஆளப்படுகிறது. சிலர் சாரங்கம் என்று அழைத்து தவறிழைக்கின்றனர். சாரங்கம் என்றால் மான். எம்பெருமான் விற்கையன். மானை ஏந்தியவனல்லன்.*

*(4) கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்*
*எங்கும் திரிந்து விளையாடும் என் மகன்*
*சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்க நல்*
*அங்கம் உடையதோர் கோல் கொண்டு வா*
*அரக்கு வழித்ததோர் கோல் கொண்டுவா.*

*(பெரியாழ்வார் திருமொழி, 2.6.2)*

பூமணம் வீசும் திருக்குடந்தையிலும், திருக்கோஷ்டியூரிலும், திருப் பேர் நகரிலும், மற்றும் எல்லா இடங்களிலும் திரிந்து விளையாடும் என் பிள்ளை, தன்கையில் பாஞ்சசன்னியச் சங்கை பிடித்துக் கொண்டு இருக்கிறான். அக்கைக்குத் தகுதியாக நல்ல வடிவுடைய ஓர் கோலைக் கொண்டு வா. அரக்குப் பூசப்பட்ட கோலைக் கொண்டுவா.

முன்பதிகத்தில் காக்கையை அழைத்து குழல் வார வா! என்றார். இப்பதிகம் முழுதும், மாடுமேய்க்கப் போகும் கண்ணனுக்காக ஒரு கோலைக் கொண்டு வருமாறு கூவுகிறார்.

'எங்கும் கழனி! எங்கும் கோயில்' என்ற சொற்றொடர் திருக்குடந்தைக்கே பொருத்தமானது. 'கொங்கு' என்று தேன் நிறைந்த மலர்களை நினைக்கும் போதே திருக்குடந்தையே மற்ற திவ்விய தேசங்களைவிட முன்னம் முந்துற வருகிறது.

*(5)* *ஆலத்து இலையான், அரவின் அணை மேலான்*
*நீலக் கடலுள் நெடுங்காலம் கண் வளர்ந்தான்*
*பாலப் பிராயத்தே பார்த்தற்கு அருள் செய்த*
*கோலப் பிரானுக்கோர் கோல் கொண்டு வா!*
*குடந்தைக் கிடந்தார்க்கு ஓர் கோல் கொண்டு வா!*
*(பெரியாழ்வார் திருமொழி, 2.6.6)*

ஆதிசேஷசாயியான எம்பெருமான், உலகம் பிரளய காலத்தில் அமிழ்ந்த போது, நீலக் கடல் மீது, ஆலந்தளிர் ஒன்றில் உலகங்களை வயிற்றில் அடக்கியவனாய்க் கண் வளர்ந்தான். கண்ணனான அப்பிரான் அர்ச்சுனனுக்கு அருள் செய்தான். திருக்குடந்தையில் பள்ளி கொண்டுள்ள அப்பிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா!

எம்பெருமானின் பரத்துவ நிலையையும், அவனே கண்ணனாய் வந்த எளிமையையும், பின்னும் பின்னானார் வணங்கும் வகையில் திருக்குடந்தையில் கண்வளரும் அழகையும் காட்டி அனுபவிக்கிறார் பெரியாழ்வார்.

'பிரான்' - என்றால் உபகாரம் / உதவி செய்பவன் என்று பொருள். கோலப்பிரான் என்றால் அழகிய பிரான். அவனே, அவ்வழகனே ஆராவமுதன் என்று குடந்தை எம் கோவைப் போற்றுகிறார்பெரியாழ்வார்.

*(6) குடங்கள் எடுத்து ஏற விட்டுக் கூத்தாட வல்ல எம் கோவே!*
*மடம் கொள் மதிமுகத்தாரை மால் செய்ய வல்ல என்மைந்தா!*
*இடந்திட்டு இரணியன் நெஞ்சை இருபிளவு ஆக முன் கீண்டாய்!*
*குடந்தை கிடந்த எம் கோவே! குருக்கத்திப் பூச்சூட்ட வாராய்.*

*(பெரியாழ்வார் திருமொழி, 2.7.7)*

*பல குடங்களைக் கைகளில் தூக்கி வானில் வீசி எறிந்து குடக்கூத்து ஆடுவதில் வல்லவனான எங்கள் தலைவனே! மடப்பமுடைய சந்திரனைப் போன்ற முகங்களை உடைய பெண்களை மயக்க வல்ல என் மைந்தனே! முன்பு இரணியன் ஆகத்தை நகத்தால் இருபிளவு படும்படி கிழித்தவனே! திருக்குடந்தையில் பள்ளி கொண்ட எங்கள்அரசே! குருக்கத்திப்பூச் சூட்டிக் கொள்ள வரவேண்டும்.*

*கண்ணன் வேறல்ல, ஆராவமுதன் வேறல்ல, கண்ணனாக விபவாவதாரம் செய்த எம்பெருமானே அர்ச்சையில் ஆராவமுதனாக ஸேவை ஸாதிக்கிறான் என்று ஆழ்வார் அகமகிழ்கிறார்.*

*(7) காரார் கடலை அடைத்திட்டு இலங்கை புக்கு*
*ஓராதான் பொன்முடி ஒன்பதோடு ஒன்றையும்*
*நேரா அவன் தம்பிக்கே நீள் அரசு ஈந்த*
*ஆராவமுதனைப் பாடிப்பற!*
*அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற!*

*(பெரியாழ்வார் திருமொழி, 3.9.10)*

*கருங்கடலை மலைகளால் அடைத்து, இலங்கை புகுந்து, தன் வீரத்தை மதிக்காத இராவணனின் பத்துத் தலைகளையும் அறுத்து, அவன் தம்பிக்கு ஆட்சி கொடுத்த ஆராவமுதனைப் பாடிப்பற அயோத்தி அரசனைப் பாடிப்பற!*

*எம்பெருமானின் அகடிதகடநா (செய்ய வொண்ணாததைச் செய்யத்தக்க) சேஷ்டிதங்களையும், விரோதி நிரஸநத்தையும், சிஷ்ட பரிபாலநத்தையும் சொன்னதோடு, ஸ்ரீராமனாய் நின்று நிறைவேற்றிய (ஸாதித்த) காரியங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் காட்டி, இராமனாய், விற்கைவீரனாய் (தனுஷ்பாணியாய்) நின்ற கோலம் திருவுள்ளத்தில் ஓட, சார்ங்கபாணியை நினைக்கிறார். அயோத்தி அரசனைப் போற்று முகமாக, ஆராவமுதனைப் புகழும்படி அனைவரையும் அழைக்கிறார்.*

*5. பெரியாழ்வார் குமாரத்தியாகிற ஸ்ரீஆண்டாளும் திருக்குடந்தை எம்பெருமானாகிற ஆராவமுதனிடம் ஆராத அன்புடையவள். அவன் திருமேனி சம்பந்தப்பட்ட குளிர்ச்சியான திருத்துழாயைக் கொணர்ந்து தனது மிருதுவான திருக்குழல் கற்றையில் சூட்டித் தன் விரஹ தாபத்தைப் போக்குமாறு சுற்றி நின்றோரை வேண்டுகிறாள்.*

*சூடிக்கொடுத்த நாச்சியார் ஸ்ரீஆண்டாள் கண்ணனையே கண்ணுறக் கண்டு முசித்துத் தழுவி கசிந்து அனுபவிக்க வேண்டும் என்று ஆவிகாத்திருந்தவளாய், அவனது பிரிவால் துயரம் தாளாது, எம்பெருமான் சம்பந்தப்பட்ட ஏதேனும் ஒரு பொருளை இட்டுத்தன் உயிரைக் காக்குமாறு வேண்டுகின்ற பதிகமாக நாச்சியார் திருமொழி 13ம் பதிகம் 2ம் பாசுரத்தில் அமைந்துள்ளது.*

*முதல் பாசுரத்தில் விபவமாகிற கிருஷ்ணாவதாரத்தை அனுபவித்து, அதற்கடுத்த (இரண்டாம்) பாசுரத்தில் "ஆராவமுதனின் திருத்துழாயை யாவது சேர்ப்பியுங்கோள்!" என வேண்டுகிறார்.*

*பாலாலிலையில் துயில் கொண்ட பரமன் வலைபட்டிருந்தேனை,*
*வேலால் துன்னம் பெய்தாற்போல் வேண்டிற்றெல்லாம் பேசாதே,*
*கோலால் நிரை மேய்த்தாயனாய்க் குடந்தை கிடந்த குடமாடி,*
*நீலார் தண்ணந்துழாய் கொண்டு என் நெறிமென்குழல்மேல் சூட்டீரே.*
*(நாச்சியார் திருமொழி, 13.2)*

*கோதை நாச்சியார், ஸ்ரீஆண்டாள் இப்பாசுரத்தில், "எம்பெருமான் எல்லாம் வல்ல இறைவன் (ஸர்வஸ்மாத் பரன்), அனைத்துலகக் காவலன்*

(ஸர்வலோகரக்ஷகன்), ப்ரளய காலத்தில் மூவேழ் உலகத்தையும் தன் வயிற்றில் வைத்து சிறிய ஆலிலையில் கண்துயின்று காத்தளித்தவன். அவனே பின் ஆயர் குலத்தில் இடையனாக வளர்ந்து, கோலை எடுத்து பசுக் கூட்டங்களை மேய்த்தவன். அவனே இன்று திருக்குடந்தையில் வந்து ஆராவமுதனாகக் கண்வளர்ந்தருளுகிறான் (சயனித்துள்ளான்). ஸர்வ ஸ்வாமியான எம்பெருமான் இன்று பரமஸுலபனாக அர்ச்சையில் காட்சியளிக்கிறான். அவனுடைய சம்பந்தப்பட்ட திருத்துழாயே என் எல்லாத்துக்கங்களையும் போக்க வல்லது" என்று ஆராவமுதன் புகழ் பரப்புகிறாள் (சாதித்தருளுகிறாள்).

6. நம்மாழ்வாரின் அனுபவம் (5ம் பத்து, 8ம் திருவாய்மொழி)

ஆழ்வார்களுக்கு அங்கியாக ஆசார்யர்களுள் திலகமாகத் திகழும் செல்வக் கோனான நம் குருகைநகர் முனிவன், வாழ் தொல் புகழார் குடந்தைக் கிடந்தானை மங்களாசாசனம் செய்யப் புகுந்து கண்களாரவும் கண்டு, அநுபவித்துத் தொழுது தொழுது தோத்திரங்கள் பாடும் அளவில், திருக்குடந்தையை நினைத்த மாத்திரத்தில், குடந்தை எங்கோவை பிரதம தரிசனம் கிடைக்கப் பெற்றார்.

'எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி தோறும்
அப்பொழுதைக்கப்பொழுது என் ஆராவமுதமே'

(திருவாய்மொழி, 2.5.4)

என்று பார்த்து அனுபவிக்கும்படியாய் விளங்கும் அமுதனின் ஸமுதாய சோபையின் (முழுமையான அழகு வெள்ள) அனுபவத்தில் ஈடுபட்டு 'ஆராவமுதே' என்று அழைக்கிறார். உடனே, 'அடியேன்' என்று சேஷத்வமாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூப நிரூபக தர்மத்தை(முழுமையான தன் சுய நிலையை) வெளியிடுகிறார்.

இவ்வாறு மேன்மேலும் இவ்வெம் பெருமானை அனுபவிப்பதில் ஈடுபட்டும், பல பாசுரங்களால் அனுபவித்தும், அடைபவனும் அடைவிப்பவனும் அவனே என நமக்குக் காட்டிக் கொடுக்க, "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகள் மற்றிலேன்" என்றும், "உன்னால்

அல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்" என்றும் நம்மாழ்வாரின் அளப்பரிய அனுபவ வெள்ளம் கரை புரண்டோடுகிறது. 'அமுதன் என்று எம்பெருமானை அழையாமல் 'அமுது' என்றழைத்து அமுதமாகவே ஆழ்வார் இவரை அனுபவிப்பதும், ரசனைக்குரியது.

ஸ்ரீ ஸ்வாமி தேசிகன், இப்பதிகத்தின் வடமொழிச்சுருக்கமாகிய, தாத்பர்ய ரத்னாவளிச் சுலோகத்தில் "நிஸ்ஸௌஹித்யாம்ருதத்வாத்" என அப்படியே மொழிபெயர்த்து அருளியுள்ளது இவ்வெம்பெருமானின் பெரும் சிறப்புக்கு பொன்முத்திரையாயிற்று.

நம்மாழ்வாருக்குக் குடந்தைக் கிடந்தானிடம் தனி ஈடுபாடு என்பதை ஆழ்வாரின் அனுபவ ப்ரகாரத்தை அறிந்தவர்கள் பணிப்பர். உதாரணமாக, திருக்குருகூரில் ஆழ்வார் யோக தசையில் பத்மாஸனத்தில் திருப்புளி யாழ்வாருக்கு கீழே எழுந்தருளியிருந்தே பகவதனுபவம் பண்ணினாரே யன்றி ஒரு திவ்வியதேசத்திற்காவது திருமங்கை மன்னன் போல் திருவடி கொண்டு நடந்தேறி மங்களாசாசனம் செய்ததாகச் சமயமரபு (சம்பிரதாயம்) இல்லை. ஆகவே, ஆழ்வாரிடமிருந்து அருளிச் செயல் என்னும் சன்மானம் பெற 107 திவ்விய தேசத்து எம்பெருமான்களும் ஆழ்வார் அமர்ந்திருந்த புளியமரத்தின் கிளைகளில் அந்தந்த அர்ச்சாவதாரத் திருமேனியுடன் காத்திருந்தனர். அவர்களுள் ஆழ்வார் அருளிச் செயல் பெற்றவர்கள் சுமார் 36 எம்பெருமான்களே!

ஆராவமுதன் மட்டும் அங்கு எழுந்தருளாமல் வாளாவிருக்க, தன் மனதிற்கினிய ஆராவமுதன் எழுந்தருள வில்லையே என்ற ஆதங்கமும், ஆர்த்தியும், அலமாப்பும் ஆழ்வாருக்கு ஏற்பட்டது. "அசைவில் உலகம் பரவக் கிடந்தாய்!காண வாராயே!" என்று தழுதழுத்த மிடற்றோசை எழுப்பி வேண்டினார். ஆழ்வாரே அழுதகண்ணராய் இருக்கக் கண்ட நம் ஆசார்யர்கள் அந்நிலையை விரித்துரைக்கும் போது, அனுபவிக்கும் நம் நெஞ்சு இடிந்துகும்; கண்பனிக்கும்; தன் அமுதன் பால் ஆழ்வாருக்கு எத்தகைய ஈடுபாடு என்று நம் உள்ளம் துள்ளும்.

'அசைவில்' என்ற சொல்லுக்கு இருபொருள் கூறி சொல்நயம் அனுபவிப்பர். "(அ) ஒரு பொருளால், அசைவில் என்பதற்கு, கண்களால்

காண முடியாதவனை நாம் எங்கே அடையப் போகிறோம் என்கிற வருத்தம் தீர, அடையும் படி கிடந்தாய் என்றும்,(ஆ) இரண்டாம் பொருளால், அசைவில் = ஞானத்தில் குறைவில்லா உலகான நித்யவிபூதியில் இருக்கும் நித்யசூரிகளும் வந்து அடையும்படி கிடந்தாய்" என்றும் இரண்டு நிர்வாஹம்.

"காணவாராயே!" என்று பக்தசிரோமணியான ஆழ்வார் குரல் கேட்டதும், பக்த பராதீனனான ஆராவமுதன் திவ்விய தரிசனம் தர, ஆழ்வாரின் அருளிச் செயல் அமுதம் ஆறாக வெள்ளமிட்டது (விரிந்தது).

திருச்சிரீவர மங்கல நகரிலே எழுந்தருளியிருக்கின்ற வானமாமலை எம்பெருமான் திருவடிகளிலே,வேர் அற்ற மரம் போலே வீழ்ந்து வேறு கதி இல்லாதவராய்க் கொண்டு சரணமடைந்தார். அப்படியும் முகம் காட்டாமையாலே, தாங்கொணா (பெரிய) வருத்தமடைந்தார். 'கடலில் அமிழ்ந்துவார் அங்கே ஒரு மிதப்புப் பெற்றுத் தரிக்குமாறு போலே', "ஆறு எனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று தேறினார். ('நின் பாதமே ஆறாக' என்கையாலே ஆகிஞ்சந்யமும், உன் திருவடிகளே உபாயம் என்றும், வேறு எதுவும் உபாயமில்லை என்ற த்ருடவிச்வாசமும் காட்டப்படுகிறது... "நின்பாதமேசரணாக" என்கையாலே வேறு ரக்ஷகங்களை நீக்கலும், அநந்ய கதித்வமும், உன்திருவடிகளே தஞ்சம், வேறு எவரும் ரக்ஷகரில்லை என்ற உறுதியும் காட்டப்படுகிறது.)

இவ்வாறு 'வேறு ஒன்றாலே பேறு' என்றிருத்தல், மற்றவர் வாசலிலே சென்று கூப்பிடுதல் செய்தல் என்ற மயக்கங்கள் தவிர்க்கப்பட்டனவே என்று தரித்திருந்தார். இந்த தரிப்பே பற்றாசாகத் திருக்குடந்தையளவும் செல்லும்படியாயிற்று.

ஒருகால் சரணாகதி செய்து பலிக்கவில்லை என்றாலும், இன்னானை இன்ன காலத்திலே, இன்ன தேசத்திலே அங்கீகரிக்கலாம் என்ற நிலையை உடையவன் என்பதை அறிந்திருக்கிற இவர், திருக்குடந்தை சென்றால் அபேட்சிதம் நிறைவேறும் என்று ஆராவமுதனை அடைந்தார்.

பகைவனிட்ட உணவை உண்டு வளர்ந்தவனான அக்ரூரனின் மனோரதமே நிறைவேறினாற் போல், தனக்கும் பேறுகிட்டும் என்று நம்பினார். எம்பெருமான் தன் அருகில் வந்து அணைக்கையோ,

புன்முறுவலிக்கவோ செய்யவில்லையே என்று அவனழகிலும் இனிமையிலும் ஈடுபட்டு, பால் குடிக்கும் குழந்தை தாய் பக்கலிலே கிட்டமுகம் பெறாவிட்டால் அலமந்து நோவு படுமாறு போலே" எம்பெருமான் அமுதன் சந்நிதியில் தளர்ந்துகிடந்து கூப்பிடுகிறார்.

*1. ஆராவமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே!*
*நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே!*
*சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய், கண்டேன் எம்மானே!*

"ஆராவமுதே! எம்மானே! தெவிட்டாத அழகே! அடியேன் சரீரமானது உன் விஷயத்தில் உள்ள அன்பே நீராகி ஒரு நிலையின்றிகரையும்படி உருக்கின்ற நெடுமாலே! சிறப்பான செந்நெல் பயிர்கள் கவரி வீசுவது போன்று, செழுமை உடைய நீர்வளம் மிக்க திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில், அழகு பொருந்திய உடை(வஸ்த்ர), அணிகலன் (ஆபரண), ஆயுதங்கள் - ஆகிய இவற்றின் மாலைகளால் அலங்கரிக்கப் பட்ட உன் திருமேனி எடுத்துக்காட்டும் படியாக சயனித்திருக் கின்றவனே! என் கண்களாலே கண்டு அனுபவிக்கப் பெற்றேன். அந்தோ!, என்னைக் குளிரநோக்குதல், அணைத்தருளுதல் செய்யக் காண்கின்றிலேன்" என்கிறார்.

அ. (1) ஆரா அமுதே - என்றது உண்ண உண்ண தெவிட்டாத திருப்தி பிறவாத அமுதம் என்றபடி,முதலில் கண்டு, பின் அணுகி, அதற்குப் பின் தொட்டு என்று இப்படி கிரமங்கள் இருக்க, இவற்றை மீறி வரும்படி அன்றோ உன் அழகிருப்பது!

(2) இன்னார்க்கு ஆரா அமுது என்னுதல், இன்னபோது ஆரா அமுது என்னுதல் என்றில்லாமல், அனைவருக்கும் பொதுவாக இருத்தல். கடலிலே அமுதம் பெற வேண்டுமெனில் தேவனாக இருக்க வேண்டும். பிரம்மசர்யம் அனுஷ்டிக்க வேணும். எம்பெருமான் என்னும் அமுதம் பெற எவ்வதிகார நியமும் தேவையில்லை. எப்பொழுதும் எவரும் உண்ணலாம்படி தெவிட்டாத அமுது.

*(3)* ஆராவமுது என்ற இத்திருநாமம் பரமபோக்கியம் என்பதற்கு ஈட்டில் காட்டப்படும் ஐதிஹ்யம்:

"வட தேசத்திலே லோக சாரங்க மஹாமுனிகள் வசித்துக் கொண்டிருக்க, இங்கேயுள்ள ஒருவன் அங்கு ஏறச் செல்ல, "பிள்ளாய்! தென் தேசத்தில் விசேஷம் என்ன?" என்று கேட்க, "திருவாய்மொழி என்றொரு பிரபந்தம் அவதரிக்க, அதனை மேற்கொண்டு, போரக் கொண்டாடி கொடு போகா நின்றார்கள்" என்ன, "அதிலே உனக்குப் போவது ஒரு பாசுரத்தைச் சொல்லிக் காணாய்" என்ன, "ஆராவமுதே" என்கிற இத்துணையே எனக்கும்போம்" என்ன, "நாராயணன் முதலான திருநாமங்கள் கிடக்க, இங்ஙனேயும் ஒரு பெயர் உண்டாவதே" என்று அதனைக் காண மிக்க ஆவலுடையவராய், "இச்சொல் நடையாடுகிற தேசத்து ஏறப் போவோம்" என்று அப்பொழுதே புறப்பட்டுப் போந்தார்.

*(4)* ஆராவமுதே - "ஸஹ பத்ந்யா - பத்தினியோடு கூட," இத்திரு நாமத்தின் இனிமையின் மிகுதி ஈச்வரனுக்கும் தனியே அனுபவிக்கப் போகாது.

*"கதே புரோஹிதே ராம: ஸ்நாதோ நியதமானஸ: !*
*ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணம் உபாகமத் !!"*[1]

ஆழங்காலிலே இழிவார் ஒரு கொம்பை, ஒரு கொடியைப் பிடித்துக் கொண்டு இழிவது போலே, *" கொம்பு போல் சீதை."*[2]

கிண்ணகத்திலே - ஆற்றுப் பெருக்கிலே இழிவார் அறிந்தவர்களைக் கைப்பிடித்துக் கொண்டு இழியுமாறு போலே, பெருமாள், பெரிய பெருமாளை அனுபவிக்கும்போது, ஸீதைப் பிராட்டியைக்கூட கொண்டாயிற்று இழிவது.

விசாலாட்சி என்ற திருநாமம் ஏற்படக் காரணம் யாதெனில், ஸ்ரீராமன் ஸீதையை அணைக்கும்போது ஏற்படும் பிரேமத்தால் பெரிய

---

*1. ஸ்ரீமத் ராமாயணம், 2.6.1.*

*2. திருவாய்மொழி, 4. 2. 8.*

கண்களாக ஆகுமாம், ஆனால் ராமனாகிய பெருமாள் மிகுந்த ப்ரீதியுடன் பெரிய பெருமாளை ஆராதனை செய்யும்போது ஏற்படும் பிரேம மிகுதியால் , ஸீதையின் உடம்பெல்லாம் கண்களாகுமாம். தான் தன்னை அனுபவிக்கும்போது கூட்டு தேட வேண்டும்படியாறிற்று ஆராமை இருக்கும்படி.

*(5)* ஆராவமுதே என்ற இச்சொல்லே, "ஆழ்வாரின் ஆற்றாமைக் கெல்லாம் வித்து" என்னும்படி ஆயிற்று.

ஆ. அடியேன் - ஆழ்வார் மயர்வு அற மதிநலம் அருளப்பெற்ற ஸ்வரூபத்தால் சொல்லுகிறார் அல்லர். எம்பெருமானின் இனிமைக்குத் தோற்று, எழுந்த வார்த்தை இது. நிருபாதிக ஸ்வாமியானவனை, காலதத்துவம் முழுதும் அனுபவித்தாலும் திருப்தி வராதபடி நிரதிசய போக்யனாய் இருக்கும் எம்பெருமானுடைய கருணையால், மயர்வற மதிநலம் அருளப் பெற்று ஸ்வஸ்வரூபம் தெளிந்ததால், அடியேன் என்கிறார் அல்ல. இனிமைக்குத் தோற்றுப் புற் கவ்விச் சொல்லுகிறார். (போரிலே தோற்றவன் ஆயுதத்தைப் போட்டு கீழே விழுவது போல்.)

> பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷசதம் ஸ்திதே !
> ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம்வத !![1]

என்று ஸ்வரூபத்தினாலே அடியேனானேன் என்ற இலக்குவன்,

> அஹம் அஸ்ய அவரோ ப்ராதா குணைர்தாஸ்யம் உபாகத: !
> கிருதஞ்ஜஸ்ய பஹுஞ்ஜஸ்ய லக்ஷ்மணோ நாம நாமத:!![2]

"ஸ்ரீராமனின் குணங்களால் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிறேன்" என்றது போலே ஆராவமுதனிடம் ஆழ்வார் உருகுவது.

இ. உடலம் : தேஹமானது உருகுகிறதே! ஜ்ஞானானந்த குணங்களை உடையவனாகையாலே இந்த ஜீவாத்மா நீராய் உருகுவதற்கு தகுதி

---

1. ஸ்ரீமத் ராமாயணம், 3. 15. 17 .

2 .மேற்படி, 4. 4. 12.

உடையது என்றிருந்த நிலை மட்டுமின்றி, அசேதனமான இந்த சரீரம் கூட உருகுகின்றதே!

ஈ. நின் பால் - உன் விஷயத்தில், சேதனம் அசேதனம் என்ற வாசியின்றி அழிக்கவல்லது உன்னிடம் ஏற்பட்டுள்ள அன்பு. சேஷத்துவம் ஆத்மாவுக்கு ஸ்வரூபமானால் சரீரம் அதற்கு விரோதியாய் நிற்கும் நிலை குலையும்.

சரீரம், அடிமை அறிவு கொண்ட ஆத்மாவைத் தன் வழியே இழுக்கை மறந்து, தவிர்ந்து, அதன் வழியே தான் ஒழுகும்படி ஆயிற்று விஷயத்தினுடைய இனிமை. இதனால் விரோதியான சரீரமும் அழிந்துவிட்டது, அசேதனமான சரீரமும் அழிந்துவிட்டது. அவன் பக்கல் அன்பை உடையதாயிற்று என்ற நிலை தவிர்ந்து, அவனிடம் கொண்ட அன்பே ஒரு வடிவு கொண்டாற்போல், திரவியமாய், உடலே - அன்பாகப் பரிணமித்தது.

நீர் தன் பக்கலிலே அகப்பட்டதனைக் கரைத்துத் தான் கரையா திருக்கும். ஆனால் இங்கு நீரே கரைகின்றது. "வடிவு இல்லாத அன்பு நீராகக் கூடுமோ?" என்ன, அசேதனமான சரீரம் (உடல்) விஷய வைலக்ஷண்யத்தாலே அன்பானாற்போல், வடிவில்லாத அன்பும் நீராயிற்று. சரீரம் ப்ரேமமாய் பரிணமித்து அதுவும் கனீபூதமாய் (மேகமாய்) இருக்கையன்றிக்கே, த்ரவ்யமாகி, நின்ற இடத்திலே நில்லாது வியாகுலப் பட்டது.

திரவியமானாலும் குடத்துநீர் போல், அசையாது இடமாற்றமின்றி நில்லாது, நிலை இன்றி அலைகின்றதாயிற்று. தட்டான் (அழிக்கிறவன்) ஆபரணங்கள் என்று பாராது, உருக்கி அழிப்பது போலே இவனும் உருக்கி அழிக்கிறான்.

"தேசமான அணிகலனும்"[1] இவர் கைகூப்பும் செய்கையேயன்றோ? ஆழ்வார் உடலை உருக்கி அழித்தவனுக்கு ஒரு அழிவில்லையோ? எனில், அவன் நெடுமால், மிக்க வியமோஹம் உடையவன், மிகப் பெரியவன், பிரமன், சிவன் முதலானோர் அளவோ? எனில் அன்று, "மனிதர்க்கு தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ!"[2] என்னும்படி ஸர்வேச்வரன்.

1. திருவாய் மொழி, 4.3.2.

2. மேற்படி, 8.4.5.

*உ. சீரார் செந்நெல் கவரிவீசும்:*

*(1) மிக்க கனத்தை உடைய செந்நெற் கதிர்களானவை எம்பெருமான் திருக்கண் வளர்ந்தருளுகிற அழகைக் கண்டு திருவாலவட்டக் கைங்கர்யம் செய்வாரைப் போலே, கனமும் அழகும் கொண்டு அசைந்தபடி இருக்கும்.*

*(2) "அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத:"[1] என்னும்படி ஆராவமுதாழ்வாருக்கு அமுது படியாகிற சீர்மையை உடையதாதலின் சீரார் செந்நெலாயிற்று "ஸர்வேச்வரனுக்கு போக்யன்" என்ற சீர்மை.*

*(3) 'அகால பலிநோ வ்ருக்ஷா: ஸர்வே' என்றபடி, மரங்கள் எல்லாம் காலம் அல்லாத காலத்திலும் பயன் அளிக்கக்கடவன என்பது போல், எப்பொழுதும் செந்நெற்கள் உள்ளன என்பதை 'வீசும்' என்ற நிகழ் காலத்தால் கூறுகிறார். "முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங் காலத்தானே" என்பது இலக்கணம்.*

*(4) அறுத்து நடவேண்டா போலே காணும் இருப்பது.*

*(5) கருத்து அறிந்து அடிமை செய்யும் நித்திய ஸூரிகளைப் போலே, அதேசதநமான செந்நெல்லும் கவரிவீசுவதாகக் கூறப்படுவது, செந்நெல் பயிர்கள் நித்யஸூரிகளின் அவதாரம் என்கையாலே,*

*(6) சேஷ வஸ்துக்களின் தொழில்கள் முழுதினையும் சேஷி தனக்கு அடிமையாக நினைத்திருக்கிறபடியால், 'கவரி வீசும்' என்கிறார்.*

*ஊ. செழுநீர் திருக்குடந்தை:*

*திருக்கண் வளர்ந்தருளுகிற சௌகுமார்யத்துக்குப் போகும்படி, அழகிதான தண்ணீர் நிறைந்திருக்கின்ற திருக்குடந்தை.*

*எ. ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்:*

*பூரண அழகை உடைய, அலங்கார, மால்ய பூஷண வஸநாதிகள் (உடைகள்) நன்கு விளங்கும்படி நிச்சலமான இந்திரநீல சிலாதலத்திலே*

---

*1. தைத்திரீய உபநிஷத் 2, 10.*

கனக மாணிக்யாதிகளைப் போலே பரபாகம் பெறும்படி, அசைகின்ற காலத்தில் ஏற்படும் அழகைவிட, சயனத் திருக்கோலத்தில் கண் வளர்ந்தருளுகிறபோது, லாவண்ய தரங்கிதமான (அழகு அலைகள் நிறைந்த) திருமேனியாலே ஆபரணங்கள் இன்னும் அழகு பெறுகின்றன. இவன்கிடந்த கிடைக்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படி இருப்பதால் "ஏரார் கோலம் திகழ" என்றார்.

ஏ. கிடந்தாய் கண்டேன்:

"சுகமாகத் தூங்குகிற அழகைக் கண்களாலே காணப் பெற்றேன். ஆனால் என் மனதில் கொண்ட எண்ணம் நிறைவேறவில்லையே, கிடந்த கோலத்திலிருந்து, என்னைக் கண்டு, எழுந்திருக்கவில்லை, எழுந்து அமரவில்லை, சிறிதே நடந்துவரவில்லை, 'என் செய்தாய்' என்று வினவ வில்லை, இளநகை புரியவில்லை, வாரி எடுத்து அணைக்கவில்லை, ஆரத்தழுவவில்லை." இத்தனை நிகழ்வுகளையும் கிரமமாக ஆழ்வார் எம்பெருமானிடமிருந்து எதிர்ப்பார்த்துத் தவித்தபடி.

ஐ. எம்மானே:

நிருபாதிக ஸ்வாமியே! உனக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லையாகில் ஆறியிருக்கலாம். சம்பந்தத்தை நன்கு உணர்ந்த படியால், 'இப்போதே பெறவேண்டும்' என மனம் தவிக்கிறது. இதனை அறிந்து விரைவாக உதவவேண்டும் என்கிறார்.

2. எம்மானே! என் வெள்ளை மூர்த்தி! என்னை ஆள்வானே!
எம்மா உருவும் வேண்டுமாற்றால் ஆவாய்! எழிலேறே!
செம்மா கமலம் செழுநீர் மிசைக்கண் மலரும் திருக் குடந்தை
அம்மா மலர்க்கண் வளர்கின்றானே! என் நான் செய்கேனே!

"எம்மானே! பரிசுத்தமான சொரூபத்தையுடையவனே! என்னை ஆள்கின்றவனே! எத்தகைய பெருமை பொருந்திய உருவங்களையும் விரும்பும் வகையிலே மேற்கொள்கின்றவனே! அழகிய ஏறே! சிவந்த பெரிய தாமரை மலர்கள் செழுமை பொருந்திய தண்ணீர் மேலே கண்கள் போன்று மலர்கின்ற திருக் குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் அவ் வழகிய தாமரை போன்ற திருக்கண்களை மூடிக் கொண்டு உறங்கு கின்றானே! நான் என் செய்வேன்? " என்கிறார் ஆழ்வார்.

அ. எம்மானே! - இப்படிக் கூப்பிடச் செய்தேயும் மறுமாற்றம் தாராமையாலே, உம்முடைய கார்யம் நீரே செய்யும்படி அன்றோ, பலம் - பயன் உம்முடையதான பின்பு அதற்குத் தக்க முயற்சியும் நீரே செய்ய வேண்டாமோ? உடையவனன்றோ உடைமையை நிர்வஹிப்பது. சொத்தான என்னைப் பெறுமைக்கு ஸ்வாமியான நீயே சாதனானுஷ்டானம் பண்ண வேண்டும், வெறும் சுதந்திரனாக நானிருக்க வில்லையே, உம்மைச் சேர்ந்தவனாக, உம்மை எதிர்ப்பார்த்திருக்குமவனாகவே இருந்தேன்.

ஆ. என் வெள்ளை மூர்த்தி! - உலகத்திற்கெல்லாம் தலைவனே! 'பதிம் விச்வஸ்ய ஆத்மேச்வரம்' எனவே, உன்னைப் பெற எந்த முயற்சியையும் பண்ணப் பிராப்தி இல்லை. 'வெள்ளை' என்றது சுத்தியை, தூய்மையைச் சொல்லுகிறது. மூர்த்தி என்பது சுத்த ஸ்வரூபனே, சுத்த விக்ரஹனே! என்றபடி "அசேஷ தோஷ நிவர்த்தக திவ்ய விக்ரஹமுடையவனே!" என்ற படி எவ்விதக் குறையும் இல்லாதபடி, எனக்குத் தன் பேறாகத் தானே காட்டக் கண்டேன். உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே என்னை வசீகரித்து அடிமை கொண்டவனே! என்னை ஆள்வானே! என்னை ஆள்கின்றவனே! மீண்டும் மீண்டும் உன்னுடைய குணங்களைக் காட்டி, அந்த குண க்ருத தாஸ்ய ரஸத்தை (குணங்களில் ஈடுபட்டுப் பெற்ற அடிமை ருசியை) வளர்த்து என்னை நித்தியமாக அடிமை கொள்கின்றவனே!

இ. எம்மா உருவும் ஆவாய்: எனக்காகவும், அடியார்கட்காகவும், நீ படும் பாடு அறிவேன்! அப்ராக்ருதமாகையாலும், இச்சையே காரண மாகையாலும், பரார்த்த மாகையாலும் விலக்ஷணமான விக்ரஹங்களை மேற்கொள்பவனே! தேவ, மனுஷ்ய, மத்ஸ்ய கூர்மாதி, நாநாவித-அதிசுந்தர திவ்விய விக்ரஹ சாலியாய் அவதரிப்பவனே!

ஈ. வேண்டுமாற்றால்: உனக்கு வேண்டிய, இச்சித்த உருவைக் கொண்டு அல்லது அடியார்கள் வேண்டின உருவத்தைக் கொண்டு,

தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் - தமருகந்து
எவ்வணண்ம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியானாம்.[1]

என்றபடி எனக்கும், ஆச்ரிதர்க்கும் முன்பே இத்தனை உபகாரங்களை செய்தாயாகையாலே, இன்னமும் என் கார்யமெல்லாம் நீயே செய்ய வேண்டும்.

"எந்நின்ற யோனியுமாய் பிறந்தாய்"[2] என்பதால் எல்லாச் சாதிகளிலும் பிறந்தவனே! என்று பொருள்.

இங்கு மூன்று விதப் பொருள்களைக் காட்டுகிறார் உரை ஆசிரியர்.

1. இச்சித்த படியே எங்களுக்காக விலக்ஷணமான அவதார விக்ரஹங்களை உடையவனே!
2. இச்சையாலே எல்லா வகையாலும் விலக்ஷணமான விக்ரஹங்களை உடையவன்.
3. அநேகமான, எண்ணற்ற, விக்ரஹங்களை உடையவனே!

இத்துடன் பிரக்ருதி ஸம்பந்தம் இல்லாத தெய்வத் திருமேனியை உடையவன். 'தோன்றுதல்' என்று இதைக் குறிப்பர். நாம் கர்மமடியாகப் பிறப்பது போல், எம்பெருமான் அனுக்ரஹமடியாக பிறக்கிறான்.

ததோ (அ)'கில ஜகத் பத்ம போதாய அச்யுத பாநுநா |
தேவகீ பூர்வ ஸந்த்யாயாம் ஆவிர்பூதம் மஹாத்மநா ||[3]

உ. எழில் ஏறே! -

"யுவா ஸுவாஸா: பரிவீத ஆகாத் ",
"ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:"[4]

பல பிறப்பாய் ஒளி வரும் முழுநலமன்றோ! எம்பெருமான் அவதரித்த பின் மிகுந்த ஒளியுடையவனாகின்றான் என்கிறது வேதம். 'வானிளவரசு வைகுந்த குட்டன்'[5] என்றபடி முதியோர்களான

---

1. முதல் திருவந்தாதி, 44.
2. திருவிருத்தம், 1.
3. ஸ்ரீ விஷ்ணு புராணம், 5:3:2.
4. யஜுர் வேதம், 3.6.1.
5. பெரியாழ்வார் திருமொழி, 3.6.3.

அமைச்சர்களின் கீழே இளவரசன் இருப்பதுபோல் நித்யஸூரிகள் நிறைந்துள்ள பரமபதத்திலே இளவரசாக உள்ளவன்.

பரமபதத்தில் இருக்கும் இருப்பைக் காட்டிலும், "பட்டி மேய்ந்தோர் காரேறு"[1] என்றபடி பிறக்கப் பெற்றோம். என்னும் மேனாணிப்பை உடையவனாய் இருப்பான்.

ஊ. செம்மா கமலம் செழுநீர் மிசைக்கண்... வளர்கின்றானே!

1. அவதார காலங்களில் உதவாதார்க்கும் இழக்க வேண்டாதபடி கோயில்களிலே வந்து திருக்கண் வளர்தருளுவது. 'நாகத்தணை குடந்தை வெஃகா திருவெவ்வுள்' என்றபடியும்

2. பரிமளம் முகத்தே வந்து அலை எறிய, அதுதானே துடை குத்தக் கிடந்து உறங்குகிறபடி செம்மா கமலம் என்றது. "அரைக்கணத்திலே செவ்வி மாறும் தாமரையையோ அவன் திருக்கண்களுக்கு ஒப்பு சொல்வது?" என்ன, வருந்திச் சொல்லுகிறபோதிலும் இத்தனை சொல்ல வேண்டும் என்பர்.

சிவந்த தாமரை மலர்கள் மலரக் கண்டேன் குடந்தை கழனிகளிலே, ஆனால் அம் மா மலர்க்கண் மலராமல் கண் வளரக் கண்டேன் என்கிறார்.

தாமரைகள் மலர்ந்தால் தேனைப் பருக வண்டுகள் களித்திருக்கும். எம்பெருமானின் நயனங்களாகிற தாமரைகள்அலர்த்தால், தேனைக் குடிக்கக் கூடிய வண்டு இங்ஙனே பட்டினி கிடப்பதோ எனக் கேள்வி எழ, இவை ஒழிய மற்றைப் பூக்களில் மதுபானம் செய்ய ஒண்ணாது, இனி, தாமரை அலருகையாவது விசேஷ கடாக்ஷம் பண்ணுகை, எம்பெருமான் கண் விழியாத போது ஆழ்வாரும் கண் விழிக்கமாட்டார் என்றபடி.

3. என்நான் செய்கேன்? யாரே களைகண் என்னை என் செய்கின்றாய்?
உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்
கன்னார் மதிள் சூழ் குடந்தைக் கிடந்தாய் அடியேன் அருவாணாள்
செந்நாள் எந்நாள் அந்நாள் உனதாள் பிடித்தே செலக் காணே.

---

1. நாச்சியார்திருமொழி, 10, 1.

"என்னாலாவதொரு செயலில்லை, நீ அல்லதெனக்கு மற்றொரு கதி இல்லை. என்னுடைய பிரயத்னத்தாலே உன்னுடைய திருவடிகளைப் பெறுவேனென்றோ பார்த்தருளுகிறது. உன்னுடைய க்ருஷியாலே (திருவுள்ளத்தாலே) உன்னுடைய திருவடிகளைப் பெறுகையொழிய வேறொரு உபாயத்தால் பெறிலும் வேண்டாம். ஆனபின்பு இனி இவ்வாத்மா உள்ள காலமும் உன்திருவடிகளைப் பிரியாதே இருக்கும்படி பார்த்தருள வேணும் " என்கிறார்.

ஆழ்வார் பிராணனில் நசையற்ற நிலையில் துடித்து கிடந்து கூப்பிட்ட காலத்திலும், குளிர் நோக்குதலோ, வினவுதலோ செய்யாமல் ஆராவமுதன் கிடக்கிறதைக் கண்டு, "என் நான் செய்கேன்?" என்கிறார். இது அநுவாதமோ, வினாவோ அல்ல. அசக்தனான, அஜ்ஞனான (அறிவிலியான) நான் என்ன சாதனானுஷ்டானம் செய்வேன்? என்கிறார்.

"என் நான் செய்கேன்" என்னும்போது இம்மூன்றும் உண்டு என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி இங்கு அனுஸந்தேயம். இதில் தம்முடைய செயல் அநுதியை(தோன்றாமையை)யும், உன்னை அடைய நான் செய்த முயற்சி என்று எதுவுமில்லை என்றும், "யாரே களைகண்" என்று "பிறர் ரக்ஷகர் அல்லர், நீயே ஸர்வருக்கும் ரக்ஷகன். எனக்கும் நீயே ரக்ஷகன்" என்றும் "என்னை என் செய்கின்றாய்" - என்று உன் அபேக்ஷை ஒழிய முகம் காட்டாமைக்கு வேறு காரணம் இல்லை என்பது ஆழ்வார் திருவுள்ளம்.

நெறிகாட்டி நீக்குதியோ? நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ? மேல் நாள் -அறியோமை
என் செய்வானெண்ணினாய்? கண்ணனே! ஈதுரையாய்
என் செய்தாலென்படோம் யாம்?[1]

பிறர் என்னை ரக்ஷிகிறார்கள் என்று பிறர் மேலே விட்டிருக்கிறாயோ? அமிந்துகிறாரான (சக்தியில்லாதவர்கள்) பிற தெய்வங்கள் அமிந்துகிறாரை (என்போல்வாரை) எருக்கமோ? கை கொடுத்துக் காக்க முடியுமோ? பின்னும் வழி இது என்று காட்டி என்னை உன்னிடமிருந்து நீக்கப்பார்க்கிறாயோ?

1. பெரிய திருவந்தாதி, 6.

ஒருவருக்கு ஒருவர் உணர்த்திக் கொள்வதற்கும் ஆள் அல்லாதவர்கள், அறிவின்மையால் என் காரியம் செய்யமாட்டார்கள். என்னைஅறியாயோ? அஜ்ஞன், அசக்தன், அப்ராப்தன் என்று பிறரை அறியாயோ? ஞானமும் பலமும் சக்தியும் ஓரளவுபட்டதென்று உன்னை அறியாயோ? ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தன், ப்ராப்யன் என்று உன் திருவருளுக்கு இலக்காகாதவர்கள், என்னைப் போல் ஞான பக்தி இல்லாத அவர்கள் என்று என்னளவு கிட்டாதார் எனக்கு ரக்ஷகர் ஆவதோ? நளன் தமயந்திக்கு வழி காட்டினாற்போலே என்னைக் கைவிடப் பார்த்தாயோ?

1. எனக்கு நான் ரக்ஷகன் அல்லன் (ஆகிஞ்சன்யம்). பிறரையும் ரக்ஷகனாகக் கொள்ளேன் (அநன்யகதித்வம்). நீயே ரக்ஷகன் என்ற மஹாவிச்வாசம் கொண்டவன்.
2. உன்னால் பெறும் உன்னை ஒழிய, வேறு உபாயங்களாலும் வேறு தெய்வங்களாலும் பெறும் உன்னையும் வேண்டேன்.
3. "பெறுவது நம்மையானால், வேறு உபாயங்களாலும், வேறு தெய்வங்களாலும் நம்மைப் பெற்றால் விரோதம் என்ன?" என்ன, காலன் கொண்டு மோதிரம் இடுமாறுபோலே, ஸ்வரூப விரோதியான இது எனக்கு வேண்டும்.
4. திருவடியினால் (அனுமனால்) கடல் கடத்த விண்ணப்பம் வந்தபோதும், பிராட்டியாகிய தான் சபித்துப் பெற வந்தபோதும் செய்யவில்லை. அப்படிச் செய்தால் எம்பிரானுடைய ஆளுமைக்கும் (ரக்ஷகத்வத்துக்கும்) தன்னுடைய அடிமைத்திறத்திற்கும் (பாரதந்த்ர்யத்துக்கும்) சேராது.
5. பிராப்யனான உன்னை ஒழிய மற்றைய ஐச்வர்யாதிகள் தேவையில்லை.

வேலைப்பாடு மிகுந்த மதிள் சூழ்ந்த திருக்குடந்தை ஊரில் பள்ளி கொண்டருளும் பெருமானே! இவ்வாத்மா உடம்பில் தங்கி வாழும் நாள்களிலும் தொடர்ந்து செல்லும் நாள்கள் எத்தனை உண்டோ, அத்தனை நாள்களிலும் உன் திருவடிவாரத்திலே தங்கி அதனையே பற்றாகக் கொண்டு நடக்கும்படி நீ திருவருள் புரியவேண்டும்.

4. செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லும் கீர்த்தியாய்! உலப்பிலானே! எல்லா உலகுமுடைய ஒரு மூர்த்தி நிலத்தார் மிக்கார் குடந்தை கிடந்தாய்! உன்னைக் காண்பன் நான் அலப்பாய் ஆகாசத்தை நோக்கி அழுவன் தொழுவனே.

(எந்த அளவுக்கு அனுபவம் ஏற்படுகிறதோ, அந்த அளவுக்கு பூரணமாக தன் பரத்துவ ஸௌலப்யாதிகளை அனுபவிக்க அளிக்கிறான்.) பெருங்கீர்த்தியை உடையவனே! முடிவு இல்லாதவனே! எல்லா உலகங்களையுடைய ஒப்பற்ற மூர்த்தியே! பக்தியினால் மேம்பட்டவர்கள் தங்கியிருக்கிற திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்திலே திருக்கண் வளர்கின்றவனே! உன்னைக் காணும் பொருட்டு நான் அலமந்து ஆகாசத்தை நோக்கி அழுவன் தொழுவனே!

ஸர்வேச்வரனாய் இருந்தும் அடியார்களுக்காக திருக்குடந்தையிலே, மிக அருகிலே இருக்கத் தன் மனோரதம் நிறைவேறாமலே உள்ளதென்று, கைங்கர்யம் பெறாமையாலே நோவுபடுகிறார் ஆழ்வார்.

எம்பெருமானே! உன் குணங்களால் வந்த புகழ் அடங்கலும் அழியாது நிற்கும். எத்தனையேனும் அளவுடையாரும் தங்கள் நின்ற அளவுகளைக் கழித்து உன் கீர்த்தியின் அளவைக் குறிப்பிட்டுக் கூற இயலாதவர்கள், எவ்வளவு ஞானம் சம்பாதித்தாலும் அதற்கும் மேற்பட்டே உன் புகழ் விஞ்சிநிற்கும். அவரவர் தங்கள் தங்களுக்கேற்ப அளவிட்டு எண்ணும் வரை இருக்கும், யாராலும் உன் புகழின் தன்மை அறுதியிட்டுக் கூறமுடியாது. குணம், விபூதி ஆகிய உன் தன்மைகளுக்குத் தொகை கூறிக் குறிப்பிட முடியாது. வடிவழகைக் காட்டி எல்லா உயிர்களையும் காற்கீழ் இட்டுக் கொள்ளக் கூடியவனே!

"பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே ...
வக்கரனைக் கொன்றார் வடிவு"[1]

என்றபடி திவ்விய மங்கள விக்ரஹத்தின் வைலக்ஷண்யத்தைப் பற்றிப் பேசுமவர்கள் சொல்லும் வார்த்தைகளில் பூரண அனுபவத்தைத் தருபவன். உலப்பிலானே! இயல்பிலே எல்லைகாண ஒண்ணாதபடி இருப்பன்.

1. மூன்றாம் திருவந்தாதி, 21.

1. 'தனக்கும் தன் தன்மை அறிவரியான்' அன்றோ, இவன் விக்ரஹ ஸௌந்தர்யத்தாலே எல்லா உலகங்களையும் சேஷமாகக் கொண்டவன்.
2. இவனுடைய விக்ரஹத்தைக் கண்டவாறே, 'இவனே எல்லா உலகங்களுக்கும் சேஷி' என்று தோற்றும்படியாக இருப்பவன்.

எல்லா உலகங்களும் அதனுள் அடங்கியவைக்கும் நீயே ஸ்வாமி என்றானபோது, "நீர் நோவுபடுகிற இடம் என் எல்லைக்குள் அன்று" என்ன ஒண்ணாதே உனக்கு!

பக்திமிகுந்த அடியார்கள் வாழும் திருக்குடந்தை நகரில் பள்ளி கொண்டுள்ள பெருமானே! உன்னைக் காண்பதற்கு நான் பெருவிடாய்ப்பட்டு, அலமந்து, ஆகாசத்தை நோக்கி அழுகிறேன் தொழுகிறேன்.உன்னைக் காணும்போது, காலம் வரும் போது பெறலாம் என்று ஆறியிருக்க முடியவில்லை.'காண்பவன் நான் அன்றோ,காண்கிறது உன்னை அன்றோ' ஆன பின்னர் எங்ஙனே ஆறியிருப்பது? நீ ஆராவமுதாயிற்றே.

காணப் பெராமையால் வந்த துடிப்பு - அலமருகின்றேன் உதய சூரியனைக் காண்பதுபோல், சீதை கலக்கத்தினால் வாயுபுத்ரனான அனுமனை பார்த்தபடி விஷயமாகிய நீ மிக அருகில் இருக்க, உன்னை விட்டு ஆகாசத்தை நோக்குகிறேன். ஒரு வேளை கஜேந்திரனுக்கு வந்து தோன்றினாயே, அதுபோல் என் தசையைப் பார்த்து நீ எனக்கும் தோன்றுவாயோ என்று ஆகாசத்தைப் பார்த்தேன்.

எனக்கு ஓராலம்பநம் (- பற்றுக்கோடு) இல்லாததால் ஆகாசத்தைப் பார்த்தேன். அதுவும் வயோதிகரான தசரதன் கைகேயியின் சொல்கேட்டு வெம்மை தோன்ற பெருமூச்சு விட்டபடி துக்கத்தால் பீடிக்கப்பட்டவராய், ஆகாசத்தை நோக்கிய கண்களை உடையவராய், கண்கள் இலக்கில்லாமல் பார்த்தபடி இருந்த நிலை போலே, அழுகிறேன் - உபாசகர்களும், சபலர்களும் செய்வதுபோல், தொழுகிறேன் - பிரபன்னர்களும், விரக்தர்களும் செய்வதுபோல்.

*5. அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடி அலற்றுவன்*
*தழுவல் வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்*
*செழுவொண் பழனக் குடந்தைக் கிடந்தாய்! செந்தாமரைக் கண்ணா!*
*தொழுவனேனை உன தாள் சேரும் வகையே சூழ் கண்டாய்.*

*(திருவாய்மொழி, 8.4.6)*

*கலக்கத்தாலே அழுவேன். தெளிவாலே தொழுவேன். மயக்கத்தால் ஆடுவேன். குணங்களுக்குப் பரவசப்பட்டு பாடுவேன். துன்பத்தால் அலற்றுவேன், என்னைத் தழுவி நிற்கின்ற காதலாகிற கொடிய பாவங்களால் நீ வருவதற்கு ஏலும் (சம்பாவனையுள்ள) பக்கத்தை நோக்குவேன். வரக் காணாமையாலே நாணங்கொண்டு தலை குனிந்திருப்பேன். செழுமை பொருந்திய அழகிய வயல்களால் சூழப்பட்ட திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் திருக்கண் வளர்கின்றவனே! செந்தாமரைக் கண்ணா! வேறு கதி இல்லாதவனாய்த் தொழுகின்ற என்னை உன் திருவடிகளைச் சேரும்படி ஒரு நல்ல விரகு பார்க்க வேண்டும்.*

*அழுவன் தொழுவன் என்று மீண்டும் இப்பாசுரத்தில் உரைத்தது. கூறியது கூறலாகாதோ? என்ன, அங்கு எம்பெருமானைக் காணப் பெறாமையாலே பாடினார். இங்கு காண வேணும் என்று 'அழுவன் தொழுவன்' என்கிறார். ஆதலால் குற்றமாகாது.*

*எம்பெருமானே! குழந்தைகள் செய்வதனை நான் செய்யத் தொடங்கிவிட்டேன். (1)"அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன் அருள் நினைந்தே அழுங்குழவி அதுவே போன்றிருந்தேனே." என்றபடி அழுதும்(பெருமாள் திருமொழி, 5.1), (2) "அஞ்சலி: பரமா முத்ரா" எனத் தொழுத கையனாய் வேதாந்த ஞானமுடையார் செய்வதனையும் செய்கின்றேன். (3) 'இத்தனை சோறிடுகிறோம், ஆடவல்லையோ' என்றால் பசியர் ஆடுவதுபோல் ஆடியும் பார்க்கிறேன். (4) 'என் பட்டால் பெறலாம்' என்று உன் குணங்களுக்கு ஆட்பட்டதால் அவற்றை எண்ணிப் பிரேமம் வழியப் பாடுகிறேன். -- இவைகளைச் செய்தும் என் விருப்பம் நிறைவேறவில்லை. ஆதலால் எப்படியாவது உன்னை அடைய வேண்டும் என்பதால் எதையும் செய்யத் துணிந்திருக்கிறேன்.*

உன்னை வா! வா! என்று அழைத்துப் பார்ப்பேன். பெரும் கூப்பாடு போடுவேன். காதலால் வழிந்த சொல் பாட்டாய், அது தானும் அடைவுகெடக் கூப்பிடுவேன். அலற்றுவேன், இதெல்லாம் ஏன்? உன் மீது நான் கொண்டுள்ள காதல் அல்லவா, இப்படி என்னைத் தழுவிக் கொண்டு விடாது வினை செய்கிறது. நான்கொண்ட பக்தியே அல்லவா, பாவ வினைபோல் என்னை இப்படி ஆட்டிப் படைக்கிறது. ஆதலால் நீ வருகிற திசை எதுவோ என நாணத்துடன் கவிழ்ந்தபடி உன் வரவு எதிர்பார்க்கிறேன். அப்படியும் நீ தோன்றாமையாலே 'அழகிது' என்று வெறுப்புடன் நோக்குகிறேன்.

அழகிய பெரும் நீர்நிலைகளை உடைய திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருளுகிறவனே! செந்தாமரைக் கண்ணனே! 'கையிலே நிதி உண்டாயிருக்க வறியர்க்கு இடாதாரைப் போலே' என் துன்பம் நீங்குதற்கானப் பரிகாரம் உன்கையிலே இருக்க, என்னைக் கடாட்சியாதே இருக்கிறாய்!

'புறம்பு புகல் அற்று' -- "(1) உன்னை விட்டு வேறெங்கும் செல்ல முடியாத என் போக்கற்ற தன்மை (கார்ப்பண்யகார்யம்) கண்டும், (2) பிற தாழ்ந்த விஷயங்களில் ஈடுபட்டுள்ள நீசனாய்க் கண்டும், தொழுகின்ற என்னை, உன் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளும் வகையை நீயே காட்ட வேண்டும். என்னுடைய ஆற்றாமை பேற்றுக்குக் காரணமன்று, ஆனையின் காலைக் கொண்டு ஆனை மேல் ஏறுவார் போல், உன்னாலேயே பேறு" என்று தாம்இருக்கிறபடியை ஆழ்வார், வேறு பிரயோஜநங்களை விரும்பாதார் திறத்தில் காரிய சிந்தையும் அவனதாக இருக்கிறபடியைத் தெரிவிக்கிறார்.

6. சூழ் கண்டாய், என் தொல்லை வினையை அறுத்து, உன் அடிசேறும்
ஊழ் கண்டிருந்தே தூராக்குழி தூர்த்து எனை நாளகன்றிருப்பன்
வாழ் தொல் புகழார் குடந்தைக் கிடந்தாய்! வானோர் கோமானே!
யாழினிசையே! அமுதே! அறிவின் பயனே! அரியேறே!

இயல்பான புகழை உடைய பெரியோர்கள் நித்யவாசம் செய்கின்ற திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் திருக்கண் வளர்கின்றவனே!

*நித்திய சூரிகளுக்குத் தலைவனே! யாழினிசையே! அமுதே!(ஆராவமுதே!) அறிவின் பயனே! ஆண் சிங்கம் போன்ற பெருமானே! என்னுடைய பழைமையான இரு வினைகளையும் அறுத்து உனது திருவடிகளைச் சேர்வதற்குரிய முறையை யான் அறிந்திருந்தும் தூர்க்க முடியாத இந்திரியங்களாகிற குழியை நிறைத்துக் கொண்டு எத்தனை காலம் உன்னை நீங்கி இருப்பேன்? உன்னைச் சேர்வதற்குரிய உபாயத்தைச் செய்தருள வேண்டும்.*

*உன் இனிமையை அனுபவிக்கிற எனக்கு ஒரு பிரிவு வராதபடி உன்னை அடைவதற்குத் தடையாகவுள்ள விரோதிகளையும் போக்கி, உன்னைப் பெறுவதற்கு நீயே ஒரு வழியைச் செய்தருள வேண்டும். ஆண்சிங்கம் போன்றவனே! எம்பெருமானே! என்னுடைய பழமையான கர்மங்களை, "பாரமாகிய பழவினை பற்றறுத்து"[1] என்றபடியும், "பண்டை வல்வினை"[2] களை வாசனையோடே போக்கி, உன் திருவடிகளை நான் வந்து அடையும் வழியை நீயே தான் பார்த்தருள வேண்டும்.*

*"உன் திருவடி அடையும் வழியை உன்னருளால் நான் கண்டிருந்தும், இறைக்க இயலாத இந்திரியங்களுக்கு இரை இட்டுக் கொண்டே இன்னும் எத்தனை நாட்கள் இங்கே இருக்கக் கடவேன்? உன் கண் வட்டத்தில் வாழப் பெற்றவர்களுக்கு, "உன்னைப் பிரிந்திருக்கும் நாள் எத்துணை?" என்று தெரியாது. ஸ்ரீ ராமனைப் பிரிந்த ஸ்ரீபரதாழ்வானுக்குப் "பிரிந்திருக்கும் நாள் எத்துணை?" என்று தெரியும், ஆகவே திருக்குடந்தையில் வாழ்பவர்கள் சிலாக்கியமான புகழை உடையவர்கள். தன்னைப் போன்று அலற்றாமல் எம்பெருமானோடு நினைத்த பரிமாற்றம் பெற்றவர்கள்."என்கிறார் ஆழ்வார்.*

*யாழினிசையே! -- மிடற்று ஓசை, சிலபோது சிலேஷ்மத்தால் கண்டம் அடைபட்டிருக்கும். அது அன்றிக்கே 'யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே'[3] என்னும்படி செவிக்கு இனிமையான அனுபவமாய்.*

---

*1. அமலனாதிபிரான், 5.*

*2. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 7.*

*3. திருவாய்மொழி, 2:3:7.*

நாவிற்கு வேறொன்று தேட வேண்டாதபடி இனிய பொருளாய் இருப்பவனே! மனத்திற்கு இனியதாய் ஞானத்துக்குப் பயனான சுகமானவனே! அளவிட்டுஅறிந்து அனுபவிக்க ஒண்ணாத இனிமையை உடையவனே!

இங்குள்ளார்க்கும் அங்குள்ளார்க்கும் உன்னை அனுபவிக்கக் கொடுத்து நிரதிசயபோக்யனாயிருக்க, நான் இந்திரியங்களுக்கு இரை இட்டு எத்தனை காலம் அகன்றிருக்கக் கடவேன்! உன்னை நீங்கி என்னால் இருக்க முடியாது. உன்னைச் சேரும் வழியை நீயே காட்டித் தலைக் கட்ட வேண்டும்.

*7. அரியேறே! என் அம் பொற்சுடரே! செங்கட்கருமுகிலே!*
*எரியே! பவளக் குன்றே! நால்தோள் எந்தாய்! உனதருளே!*
*பிரியா அடிமை என்னைக் கொண்டாய்! குடந்தைத் திருமாலே!*
*தரியேன் இனி உன் சரணம் தந்தென் சன்மம் களையாயே!*

அரியேறே! அழகிய பொன்னின் சுடரே! சிவந்த கண்களை உடைய கரிய முகிலே! நெருப்புப் பொருந்திய பவளக் குன்றே! நான்கு தோள்களை உடைய எந்தையே! உன்னுடைய திருவருளாலே என்னைப் பிரிதல் இல்லாத அடிமை கொண்டவனே! திருக்குடந்தையில் திருக்கண் வளர்கின்ற திருமாலே! இனி, தரித்திரேன், உன்னுடைய திருவடிகளைத் தந்து என் பிறவியை நீக்குவாய்.

தன்னைவிட வேறுபட்ட பொருள்களுக்கெல்லாம் தானே கடவனாகையாலே வந்த மேனாணிப்பு! அழகிய பொன் போல ஒளிமயமானவனே! அரியேறே என்ற மேன்மைக்குத் தக்க திருக்கண்களும் திருமேனியும் உடையவனே! நக்ஷத்திர மண்டலம் வரை ஓங்கிய பவளக் குன்றே! ஒளியையும்,விரும்பப்படுகிற தன்மையையும் உடையவனே! உகவாதார்க்கு நெருங்க முடியாதவனாய், அநுகூலர்க்கு ஒளியால் விருப்பத்திற்கு விஷயமாய் இருப்பவனே! அளவிடற்கு அரியவனே! கல்பகதரு பணைத்தாற் போலத் திருத்தோள்களைக் காட்டி, என்னைத் தனக்கே உரியவனாக எழுதிக் கொண்டவனே! திருவடி ஸ்ரீராமனைக் கண்டு திருத்தோளழகுக்குத் தோற்றது போல் -- ஆழ்வாரும் தோற்றது.

உன்னுடைய கேவல கிருபையாலே என்னை நித்திய கைங்கர்யம் கொண்டாய்,

*"பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே*
*அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச்ச தே"*[1]

என்று இராமனைப் பார்த்து, இளைய பெருமாள் உரைத்தது போல் இவரும் அடிமை கொள்ளுகைக்காகப் பெரிய பிராட்டியாரோடு கூடத்திருக் குடந்தையிலே கண்வளரும் எம்பிரானிடம் வேண்டுகிறார்.

சேர்த்தியைக் கண்டபின் என்னால் பிரிந்து தரித்திருக்கப் போகாது. பெற்றோர்கள் ஸ்ரீமான்களாய், உதாரர்களாய் அருகிலிருக்க, பெற்ற குழந்தை பசித்தும் தனித்தும் தவித்தும் கிடக்குமோ? 'முலை கொடுத்து சிகிச்சை செய்வாரைப் போலே' திருவடிகளை முதலில் தந்து பின் பிறவியின் சம்பந்தத்தை அறுக்க வேண்டும். "புண்ணார் ஆக்கை தன்னுள் புலம்பித் தளர்ந்து எய்த்தொழிந்தேன்"[2] என்றபடி, என் பிறவியைக் களைய வேண்டும், என்கிறார்.

*8. களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்*
*வளைவாய் நேமிப் படையாய்! குடந்தைக் கிடந்த மாமாயா!*
*தளரா உடலம் என்னதாவி சரிந்து போம் போது*
*இளையா துனதாள் ஒருங்கப்பிடித்துப் போத இசை நீயே!*

வளைவான வாயை உடைய சக்கரபடையை உடையவனே! திருக்குடந்தையில் கிடக்கும் மாமாயனே! என்துன்பத்தைப் போக்குவாய்! போக்காதொழிவாய்! துணை எவருமிலர். சரீரம் தளர்ந்து என் உயிரும் இந்த உடலை விட்டு நீங்கும் காலமாயிற்று. தளராமல் உன் திருவடிகளைப் நன்றாகப் பிடித்தபிடி நழுவாமல் இருக்க நீயே அருள வேண்டும் - என்கிறார்.

---

1. ஸ்ரீமத் ராமாயணம், 2.31.25.
2. பெரிய திருமொழி, 1.9.6.

உன்னை அன்றி, இனி ஒரு கணமும் தரியேன் என்ற பின்பும், எம்பெருமான் முகம் காட்டாமையாலே கலங்கி, உன் அனுபவம் பெறவில்லை என்றாலும், 'உன் திருவடிகளே தஞ்சம்' என்று விசுவாஸம் குலையாதபடி நீயே பார்த்தருள வேண்டும். நீ என் துன்பத்தைப் போக்கினாலும் சரி, போக்காவிட்டாலும் சரி, செய்வதோ தவிர்வதோ இரண்டும் உன் காரியங்கள்.

*"த்வம் ஏவ உபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநா மதி:"*
*(சரணாகதிரித்யுக்தா ஸா தேவே'ஸ்மின் ப்ரயுஜ்யதாம்)*

என்றபடி நீயே உபாயமாகிறாய் - என்ற நம்பிக்கையில் குறையாதவன் நான்.

'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:'[1] -- என்று ஸ்ரீபகவத் கீதாசார்யனாய் நீ சொன்னதைச் செய்யிலும் செய், தவிரிலும் தவிர்; உன்னை அன்றி வேறு ஒருவரையும் துணை உடையேனல்லன் நான்.

நேமிப்படையானே! கையிலிருந்து ஆழி சென்றுவிட்டது, இனி படை திரட்ட வேண்டும், வேறு ஆயுதம் இல்லை என்று சொல்லுவாயோ? நீ கூரார் ஆழி வெண்சங்குடையாய்! உன்கையில் உள்ள ஆயுதத்துக்கு வாய் இல்லாத இடமுண்டோ? வாய் படைத்த பயன் பெற வேண்டாமா? கூர்மை மழுங்கிற்று, பட்டறையில் இட்டுக் கூராக்க வேண்டும் என்னும்படியான ஆயுதமோ நின்னது? "வளைவாய் நேமிப் படை ஒன்று தானே என்கையிலுள்ளது," என்பாயா? என் கையில் ஓர் ஆயுதம் உண்டோ? பிறர் கையில் ஓர் ஆயுதம் உண்டோ? உன் கையில் ஆயுதம் இல்லையோ?

ஆச்சர்யப்பட வைக்கும் அழகுடன் திருக்குடந்தையிலே கிடந்த கோலத்தில் எழுந்தருளியிருப்பது அடியார்களுக்காகத்தானே! அவதார தசையிலும் அர்ச்சாவதாரமே சுலபம் என்றபடி, சக்திக்குக் குறைவில்லை, அரியன் என ஒண்ணாது, ருசியை உண்டாக்குபவனல்லன் என்ன

---

1. பகவத் கீதை, 18,66.

ஒண்ணாதபடி எளியன், அழகன், ஆராவமுதன் நீ! மாமாயச் செயல்களைச் செய்வதில் வல்லவன் நீ!

எனது உயிர் உடலைவிட்டு முடிந்து போகும் காலமும் ஆயிற்று. பிரிவுத் துன்பத்தால் ஆடித் தளர்ந்து உயிர் உடலை விட்டுப் போன்ற நிலைவரும் காலத்தில், இக்கடைசிக்காலத்தில் நான் விரும்பியது சித்திக்கும்படி செய்தருள வேண்டும்.

"ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்ட பாஷாண ஸந்நிபம்
அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்"[1]

"இதை அந்திம ஸ்ம்ருதி பிரார்த்தனையாகக் கொண்டு, கட்டை, கல் போன்ற நிலையிலுள்ளவனை நான் நினைக்கிறேன்" என்று வராஹ நயினார் (ஸ்ரீபூவராஹப்பெருமான்) உரைத்த பெருவார்த்தையை அறியாதவர் இலர். அந்திம ஸ்ம்ருதி மிக அவசியமான பக்தியோகத்தில் இழிந்த அதிகாரியும் அல்லர். ஆகையால் பிரிவுத் துன்பத்தால் சரீரம் தளர, பற்றின பற்று குலையாமல், த்ருட அத்யவஸாயம் (நிலையான நம்பிக்கை) பரிமளிக்கும்படி நீயே அளித்து எனக்கு அருள் செய்! இந்நிலைக்கு ஆழ்வார் வரக்காரணம் ஆழ்வார் கோரின அனுபவம் கிடைக்கப் பெறாமையே!

9. இசைவித் தென்னை உன் தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே!
அசைவில் அமரர் தலைவர் தலைவா! ஆதிப்பெருமூர்த்தி!
திசைவில் வீசும் செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை
அசைவில் உலகம் பரவக் கிடந்தாய்! காண வாராயே!

என்னை உடன்படச் செய்து உனது திருவடிகளிலே சேரச் செய்த அம்மானே! அழிதல் இல்லாத நித்திய சூரிகளுக்குத் தலைவரான சேனை முதலியாருக்கும் தலைவனே! முழுமுதல் மூலப்பொருளே! திசைகளில் எல்லாம் ஒளியை வீசுகின்ற செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்திலே வருத்தம் இல்லாதவாறு உலகமானது பரவும்படி திருக்கண் வளர்கின்றவனே! நான் காணும்படி வரவேண்டும்.

---

1. ஸ்ரீவராஹ சரமசுலோகம்.

ஸர்வேச்வரனான ஆதிமூர்த்தி நீ, எல்லோரும் எளிதில் பற்ற வேண்டுமென்பதற்காக அருகில் வந்து என்னை உன்னடிமையில் சேர்ப்பித்த அம்மானே! அடியேன் காணும்படி வரவேண்டும்' என்கிறார்.

நெடுநாள் விமுகனாய் இருந்த என்னை, 'எதிர் சூழல் புக்கு' இசைவித்து, நித்யசூரிகள் அடிமை செய்கின்ற உன் திருவடிகளிலே இருத்தினவனே! 'பரகு பரகு' என்று திரியாதபடி தன் திருவடிகளிலே விஷயமாம்படி செய்தவனே! அழிவில்லா அமரர் தலைவரான சேனை முதலிக்கும் நீ தலைவன் அன்றோ! ஆதிமூர்த்தியாகிய அம்மானே! திசைகளெல்லாம் ஒளிவீசும் செழுமை கொண்ட மணிகள் நிறைந்த திருக்குடந்தையிலே உலக வருத்தம் நீங்கும்படி பள்ளி கொண்டவனே! நான் என் கண்களால் சேவித்து உய்வு பெறும் வண்ணம் வந்தருள வேண்டும். திருக்கண் வளர்ந்தருளுகின்ற அழகினைக் கண்டு அனுபவித்தேன். இனி நடையழகு கண்டு நான்வாழும்படி வரவேண்டும்.

ஸ்ரீஆராவமுதாழ்வார், திருமழிசைப்பிரான் போன்ற புருஷரத்னங்கள் சேர்ந்து ஞான ஒளி உலகெங்கும் பரவும்படி பிரகாசிக்கும் திருக்குடந்தை என்று "செழுமாமணிகள்" என்பதற்குப் பூர்வாசார்யர்கள் உரையிடுவர்.

*10. வாராவருவாய் வரும் என் மாயா! மாயா மூர்த்தியாய்!*
*ஆராவமுதாய் அடியேன் ஆவி அகமே தித்திப்பாய் !*
*தீரா வினைகள் தீர என்னை ஆண்டாய்! திருக்குடந்தை*
*ஊரா! உனக்காட்பட்டும் அடியேன் இன்னம் உழல்வேனோ?*

புறக்கண்களால் காணும்படி வராமல், அருவமாய் மனத்தின்கண் தோன்றிக் காட்சி அளிக்கின்றவனே! அழிதல் இல்லாத் திருமேனியை உடையவனே? ஆராவமுதம் போன்று அடியேனுடைய நெஞ்சுக்குள்ளே தித்திக்கின்றவனே! தீராத வினைகள் எல்லாம் தீரும்படியாக என்னை அடிமைகொண்டவனே! திருக்குடந்தையாகிய திவ்விய தேசத்தை உடையவனே! உனக்கு அடிமைப்பட்டும் இன்னமும் இங்கே அடியேன் அலைந்து திரிவேனோ?

"திருக்குடந்தையிலே சென்றால் நம் மனோரதம் சித்திக்கும் என்று செல்ல நினைத்தபடி தாம் பெறாமையாலே இன்னமும் எத்தனை திருவாசல் தட்டித் திரியக்கடவேன்?" என்கிறார். உன்னை மறந்து பிழைக்க ஒண்ணாதபடி, அகவாயிலே ஆத்மாவுக்குத் தாரகனாய், அருவாய்க் கொண்டு பிரகாசிக்கின்ற ஆச்சரியத்தை உடையவனே! புறத்திலே ஊனக் கண்களால் கண்டு அனுபவிக்கலாம்படி வாராய் என்று அறிவேன். நித்தியமான திவ்ய மங்கள விக்ரஹத்தை உடையவனே! பிறருடைய சரீரங்கள் முழுதும் பிறத்தல், இறத்தல்களை உடையனவாய் இருப்பன. ஆனால் நீயோ நிரதிசய போக்யனாய், மிக இனியனாய்,என்னால் மறக்க ஒண்ணாதபடி இருக்கின்றவனே!

என்றும் உனக்கு சொத்தாகவுள்ள என் நெஞ்சினுள்ளே உன் இனிமையைத் தோற்றுவித்து அனுபவிக்கச் செய்தவனே! அனுபவித்தே போகக் கூடியனவாய், உன்னை ஒழிய வேறு ஒருவரால் போக்க ஒண்ணாத, உன்னை அனுபவிப்பதற்குத் தடையாக உள்ள கருமங்களைப் போக்குவித்து, 'அடியேன் ஆவியகமே தித்திப்பாய்' என்னும்படி புகுர நிறுத்தினவனே! என்னை அடிமை கொள்ள திருக்குடந்தையிலே வந்து அருகிலிருப்பவனே!

'நான் கிட்டாத அம்சத்துக்கு நீ கிட்ட வந்து கிடக்கிறவனே!' என்றபடி, நீ இருக்கிற இடத்திலே, என்னைப் பெற நீ கிட்ட வந்து கிடக்கிறவனே! (பரத்வ, வியூஹ, விபவங்களை விட அர்ச்சைக்கு உண்டான சிறப்பைக் காட்டுகிறார்) என் அடிமையை ஏற்றுக்கொண்டாய். என்னுடைய முயற்சிகள் எல்லாவற்றையும் உன் திருவடிகளிலே பொகட்டு, நீ செய்து தலை கட்டக் கடவையாக நினைத்திருக்கிற நான் இன்னம் எத்தனை திருப்பதிகள் புக்குப் பலன் பெறாமல் திரிந்து துன்புறுவேனோ! என்கிறார்.

*11. உழலை என்பின் பேய்ச்சி முலையூடு அவளை உயிர் உண்டான்*
*கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்*
*குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்*
*மழலை தீர வல்லார் காமர் மானேய் நோக்கியர்க்கே!*

மரத்துண்டுகளைக் கோத்தாற்போல் இருக்கும் எலும்புகளை உடைய பூதனையின் முலை வழியே அவளுடைய உயிரையும் உண்டவனான கண்ணனுடைய திருவடிகளையே உபாயமாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன், வேணுகானத்தைவிட இசை மிக்கு அருளிச் செய்த ஒப்பற்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களையும் இளமை தீரும்படிப் பயில வல்லவர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிகவும் இனியவர்கள்.

மான் விழியுடையோருக்கு மன்மதன் எப்படியோ அதுபோல பாசுரம் பயில வல்லவர் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உகப்புடையவர் ஆவர். இப்பத்தைப் பழுதறக் கற்க வல்லவர்கள்; காமினிகளுக்கு காமுகரைப் போலே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இனியர் ஆவர் -- என்கிறார்.

மனதில் மட்டுமின்றி, வடிவிலும் ஒரு பசை இன்றி, வெறும் உழலை கோத்தாற்போலே இருக்கிற எலும்புகளை உடைய பூதனை முலை வழியே அவளுடைய உயிருண்டான். விரோதி நிரஸநமே தனது இயல்பாகக் கொண்ட கண்ணன் எம்பெருமானது திருவடிகளையே இஷ்ட பிராப்திக்கும், அநிஷ்ட நிவர்த்திக்கும் உபாயம் என்று அறுதியிட்டார் ஆழ்வார்.

திருக்குழலின் ஓசையைக் காட்டிலும் விஞ்சி, கேட்பாரின் உள்ளம் உருக வைக்கும் திருப்பாசுரங்கள் இவை என்கிறார். பெரியாழ்வார்,

கருங்கண் தோகை மயிற்பீலியணிந்து கட்டிநன்குடுத்த பீதக வாடை
அருங்கல வுருவின் ஆயர் பெருமான் அவனொருவன் குழலூதின போது
மரங்கள் நின்று மது தாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர்கொம்புகள் தாழும்
இரங்கும்கூம்பும் திருமால்நின்ற நின்ற பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே.[1]

என்றார்.

மரங்கள் நின்று மதுதாரைகளைச் சொறியுமங்கு: திருவாய்மொழி கேட்ட மரங்கள் இரங்கும் வகை இங்கு –

"இரங்கி நாள்தொறும் வாய்வெரீஇ இவள் கண்ண நீர்கள் அலமர
மரங்களும் இரங்கும் வகை மணிவண்ணவோ என்று கூவுமால்..."[2]

---

1. பெரியாழ்வார் திருமொழி, 3.6.10.

2. திருவாய்மொழி, 6.5.9.

# ஆழ்வார்களும் திருக்குடந்தையும்
## ( பகுதி:2 )

ஆழ்வார்களில் கடைக்குட்டி என்றும் நற்கலியன் என்றும் ஆசார்யர்களால் போற்றப்படும் திருமங்கையாழ்வார், போர உகந்து, போற்றிப்பாடி, அனுபவித்து, ஆனந்தம் அடைந்தது ஆராவமுதனிடமே என்றால் மிகையாகாது. தம்முடைய ஆறு பிரபந்தங்களாகிற பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல் மற்றும் பெரிய திருமடல் ஆகிய எல்லாவற்றிலும் மங்களாசாசனம் செய்தது ஸ்ரீஆராவமுதாழ்வான் ஒருவனையே! அதிலும் திருவெழுகூற்றிருக்கை என்னும் பிரபந்தம் ஆராவமுதனுக்கே அஸாதாரணமானது. இப்பிரபந்தத்தில் தண் குடந்தைக் கிடந்த மாலையே போற்றிப் புகழ்ந்துள்ளார்.

திருமங்கையாழ்வார் திருமணங் கொல்லையிலே ஸர்வேச்வரன் பக்கலிலே திருவெட்டெழுத்து உபதேசிக்கப் பெற்றதும், முதன்முதலில் மங்களாசாசனம் செய்தது ஆராவமுதனையே! பெரியதிருமொழி தொடக்கத்தில் இரண்டாம் பாட்டிலேயே "சூழ் புனற்குடந்தையே தொழுது என் நாவினால் உய்ய நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்று அருளிச் செய்கிறார். தான் கண்டு கொண்ட திருவஷ்டாக்ஷரத்தை அப் பதிகத்திலேயே பிறருக்கு உபதேசிக்கிறார்:

"...சூழ் புனற் குடந்தையே தொழுமின்,
நற்பொருள் காண்மின், பாடி நீருய்ம்மின், நாராயணா என்னும் நாமம்"

இவ்வாழ்வார், திருக்குடந்தையைச் சுற்றியிருக்கும் பல திவ்விய தேசங்களுக்கு ஒரு பதிகமோ, அதற்கு மேற்பட்ட பதிகங்களோ பாடியுள்ளார்:

| | | | | |
|---|---|---|---|---|
| திருப்புள்ளம்பூதங்குடி | - 1 பதிகம் | திருவிண்ணகரம் | - | 3 பதிகம் |
| திருக் கூடலூர் | - 1 பதிகம் | திருச்சேறை | - | 1 பதிகம் |
| திருவெள்ளியங்குடி | - 1 பதிகம் | திருநறையூர் | - | 10 பதிகம் |
| திரு நந்திபுரவிண்ணகரம் | - 1 பதிகம் | திரு அழுந்தூர் | - | 4 பதிகம் |

ஆனால், திருக்குடந்தை எம்பெருமானைப் பதிகமாகப் பாடாமல் பல பதிகங்களில் தனித்தனி பாசுரங்களால் அனுபவித்துப் பாடியுள்ளார். வெவ்வேறு திவ்விய தேச எம்பெருமான்களுடன் சேர்ந்து பாடியிருப்பது ஆராவமுதனுக்கு ஏற்றமே!

**திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியில் ஆராவமுதன்**

"பல நாட்களாக பகவானை மறந்து சிற்றின்பங்களில் திளைத்து, காலத்தை இழந்தேன். பழுதே பல பகலும் போயின, ஆயினும் எம்பெருமானின் இயல்பான திருவருளால் அவனிடமிருந்தே திரு வஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை உபதேசமாகப் பெற்றேன், ஜீவாத்மா - பரமாத்மா ஸ்வரூபத்தை உணர்ந்து திருந்தினேன்," என்று திருமங்கை ஆழ்வார் திருமந்திரத்தின் பெருமையைச் சொல்லும் பதிகமாக பெரிய திருமொழியின் முதற்பத்து, முதல் பதிகம் அமைந்துள்ளது. தாம் பெற்ற பேற்றினை அனைவரும் பெற வேண்டும் என்றும் விரும்புகிறார். முதல் பதிகம் - 2ம் பாசுரத்தில் --

*(1) ஆவியே! அமுதே! என நினைந்துருகி அவரவர் பணை முலை துணையா*
*பாவியேனுணரா தெத்தனை பகலும் பழுது போயொழிந்தன நாள்கள்*
*தூவிசேரன்னம்துணையொடும்புணரும்சூழ்புனற்குடந்தையேதொழுதென்*
*நாவினாலுய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்.*

*(1.1.2)*

அன்னப் பறவைகள் படையோடு புணரும் இடமாயும், நீர்வளம் மிக்க இடமாயுமுள்ள திருக்குடந்தையை சேவித்து உய்வு பெறும்படியாக திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்தை என் நாவினால் சொல்லப் பெற்றேன். நம் பெரியோர்கள், இப்பாட்டில் வரும், 'தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும் சூழ்புனற்குடந்தை' என்பதை, திருக்குடந்தையில் பெருமாளும் பிராட்டியும் சேர்ந்து நிலையாக வாழ்வதையே ஆழ்வார் உணர்த்தி யிருப்பதாகக் கொள்வர்.

இத்துடன் ஏழாம் பாசுரத்திலும், குடந்தை எங் கோவலனை... "நற்பொருள் காண்மின், பாடிநீர் உய்ம்மின்!" என்று தீர்ந்த உறுதிப்

பொருளைக் கூறியும், கேட்கும் படியும் வலியுறுத்துகிறார்:

*(2) இற்பிறப்பு அறியீர், இவர் அவர் என்னீர்,*
*இன்னது ஓர் தன்மை என்றுணரீர்,*
*கற்பகம் புலவர் களைகண் என்றுலகில்*
*கண்டவாதொண்டரைப் பாடும்*
*சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின்*
*சூழ்புனற்குடந்தையேதொழுமின்*
*நற் பொருள் காண்மின் பாடி நீருய்ம்மின்*
*நாராயணா என்னும் நாமம் !*

*(1.1.7)*

பொருள்பொதிந்த சொற்களை ஆளும் திறனுடைய கவிகளே! உமது வாய்ச்சொற்களை, தகாத தனவானுக்கு காணிக்கை ஆக்குகின்றீர்! "கற்பகமே! கற்றோரைக் காப்பவரே!" என்று கண்டபடி புகழ்கின்றீர் இன்றைய பணக்காரன் முன்பு ஏழையாக இருந்தவனே என்றும் உணர்வதில்லை. வாய் படைத்த பயனைப்பெற, 'நாராயணா' என்று பொருளுணர்ந்து வாழ்த்த வேண்டாவோ! வாரும்! ஸர்வரக்ஷகனை, அனைத்து ஐச்வர்யங்களை உடைய கோமானைக் காட்டுகிறேன், நற்பொருளான குடந்தையில் கிடந்தவனைத் தொழுது, அவன் நாமம் பாடி உய்வு பெறுங்கள்! என்கிறார்.

*(3) ஊரான் குடந்தை உத்தமன் ஒருகால் இருகால் சிலை வளைய*
*தேராவரக்கர் தேர் வெள்ளம் செற்றான் வற்றா வருபுனல் சூழ்*
*பேரான் பேராயிரமுடையான் பிறங்கு சிறைவண்டறைகின்ற*
*தாரான், தாரா வயல் சூழ்ந்த சாளக் கிராம மடை நெஞ்சே!*

*(1.5.4)*

திருச்சாளக்கிராமத்துப் பெருமானை அனுபவிக்கும் போது ஆழ்வாருக்கு திருக்குடந்தை ஆராவமுதன் நினைவு. "ஊரான் குடந்தை உத்தமன்" என்று ஆரம்பித்து, முன்பு இராமபிரானாக அவதரித்துப் பெருவில் வளைத்து அரக்கர் சேனைகளை அழித்தவன், பேராயிர முடையான் என்றெல்லாம் எம்பெருமானின் பெருமைகளைப் பரக்கப் பாடி .... சாளக்கிராம மடை நெஞ்சே என்கிறார்.

*(4) கண்ணனாய் அவதரித்த காலத்தில் நப்பின்னையுடனும் மாமலர் மங்கையுடன் அன்புடன் களித்தவனும், எக்காலத்திலும் அசுரர்களை வதைப்பவனும் சோலைசூழ் திருநறையூரில் அர்ச்சாரூபமாய் நிற்பவனும், திருவாலியில் இருந்தவனும், திருக்குடந்தையில் கிடந்தவனும், தடாகங்கள் நிறைந்த திருக்கோவலூரிலே நடந்தவனும் ஆகிய எம்பெருமான் நித்ய வாஸம் செய்யுமிடம் திருநீர்மலையே!*

*அன்றாயர் குலக் கொடியோ டணிமா*
*மலர் மங்கை யொடன் பளவி அவுணர்க்கு*
*என்றானு மிரக்கமிலாதவனுக்கு உறையு*
*மிடமாவது இரும் பொழில் சூழ்*
*நன்றாய புனல் நறையூர் திருவாலி*
*குடந்தை தடம் திகழ் கோவல் நகர்*
*நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தார்க்கு*
*இடம் மாமலையாவது நீர்மலையே!*

***(2.4.1)***

*திருநீர்மலையைச் சொல்ல வந்த பதிகத்தில், மற்ற திவ்ய தேச எம்பெருமான்களையும் சொல்லி, கிடந்த கோலம் நினைக்குங்கால் குடந்தை எம்பெருமானை மொழிந்து தன் ஆராக்காதலைக் காட்டுகின்றார்.*

*(5) தம் மனத்திலே உறையும் பெருமானை அணைய வேணுமென்று ஓராசை பிறந்து, நினைத்தபடி நேராமையாலே தலைவி நிலை எய்தினார். தலைவனைப் பிரிந்த தலைவியின் பிரிவாற்றாமையைக் காட்டும் படியாக, பறவைகளைத் தூதுவிட்டு, தன்முன் தலைவன் இருப்பதாகக் கருதி அவனுக்குச் சொல்லியவை இப்பாசுரம்:*

*வாளாய கண்பனிப்ப மென் முலைகள் பொன்னரும்ப*
*நாணாளும் நின்நினைந்து நைவேற்கு, ஓ! மண்ணளந்த*
*தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த*
*தோளாளா! என்றனக்கோர் துணையாளனாகாயே!*

***(3.6.5)***

முன்பு பூமியை அளந்த திருவடிகளை உடையவனே! தாபம் தீற திருக்குடந்தையில் கண் வளர்பவனே! கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த திருத்தோள்களை உடையவனே! வாள் போன்ற கண்கள் நீரைப் பெருக்கியும், மென்முலைகள் பயலை படரவும் ஒவ்வொரு நாளும் உன்னையே நினைத்து வருந்துகின்ற அடியேனுக்கு நீ ஒப்பற்ற துணையாக வேண்டும்!

(6) மீண்டும் எட்டாம் பாசுரத்தில்,

குயிலாலும் வளர் பொழில் சூழ் தண் குடந்தைக் குடமாடீ!
துயிலாத கண்ணிணையேன் நின் நினைந்து துயர்வேனோ?
முயலாலும் இளமதிக்கே வளையிழந்தேற்கு இது நடுவே
வயவாலி மணவாளா! கொள்வாயோ மணிநிறமே!

(3.6.8)

குயிலோசை நிறைந்த ஓங்குயர் சோலைகள் சூழ்ந்து குளிர்ந்த திருக்குடந்தையிலே உறையும் குடக்கூத்தாடினவனே! நீ கண் உறக்கம் கொள்கின்றாய்! என் கண்கள் உறக்கத்தை அறியாதவை, அடியேன் உன்னையே நினைந்து துன்புறுகின்றேன். துயிலும் போயிற்று, என் வளையும் போயிற்று, மேனி நிறமும் போயிற்றே!

(7) எம்பெருமான் திருவடிகளில் கைங்கரியம் செய்ய ஆசைப்பட்டுப் பெறாமையால், ஆற்றாமை மிகுந்த தலைவியின் நிலை ஏற்பட்டது. தலைவியின் துன்பம் கண்ட தாய் வருந்தி உரைக்கும் பதிகம்.

வாராளு மிளங் கொங்கை வண்ணம்
வேறாயினவா றெண்ணாள் எண்ணில்
பேராளன் பேரல்லால் பேசாளிப்
பெண் பெற்றேன் என் செய்கேன் நான்
தாராளன் தண் குடந்தை நகராளன்
ஐவர்க்காய் அமரி லுய்த்த
தேராளன் என் மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் செப்புகேனே?

(5.5.7)

என் பெண் பேசுவதானால் பெரியோனாகிய எம்பெருமானின் திருநாமமல்லது பேசாள், காப்பதற்காகவே திருமாலை அணிந்து தண் குடந்தையில் உறைபவனாய், பஞ்சவர்க்குத் தேராளனாய் இருந்த கண்ணன் என் பெண்ணைப் படுத்தும் பாடு குறித்து என்னவென்று உரைக்கேன்?

(8) இந்திரன் முதலான தேவர்களுக்காக இரப்பாளனாகியும் கடல் கடைந்தும் செய்த உதவியை ஆழ்வார் அனுசந்தித்து, திவ்விய ஆயுதங்களான திருச்சக்கரத்தையும், சங்கையும் ஏந்திய தடக்கைப் பெருமாளை, தேன் பெருகும் பொழில்கள் சூழ்ந்த திருக்குடந்தையில் கண் வளர்ந்தருள்பவனாய், நமக்கு ஸ்வாமியானவனைத் திருநறையூரில் கண்டேன்! என்று கீழ்வரும் பாசுரத்தின் மூலம் பாடுகிறார்:

பொங்கேறு நீள் சோதிப் பொன்னாழி தன்னோடும்
சங்கேறு கோலத் தடக்கைப் பெருமானைக்
கொங்கேறு சோலைக் குடந்தைக் கிடந்தானை
நங்கோனை நாடி நறையூரில் கண்டேனே! (6.8.9)

(9) அடுத்த பாடலில், தமது நெஞ்சைக் குறித்து, "பெருமானது திருவடிகளில் சரணம் புகுவாய்" என்கிறார். சரணம் புகுந்தபின் திருநாமத்தை ஓத வேண்டும். எல்லா வகையிலும் நமக்கு உதவி செய்யும் மேம்பாடுடையவன் இவன் என்கிறார்.

திருக்குடந்தையில் பொருந்தி பள்ளி கொண்டருளும் அழகால் பூர்ணன், வராகமாய் உலகை இடந்ததால் பூர்ணன். ஸம்ஸாரிகளின் குறை தீர்ப்பதில் பூர்ணன். இலங்கையை பாழாளாகச் செய்ததில் பூர்ணன். உலகை இரண்டடியால் அளந்து கொண்டதில் பூர்ணன். இத்தகைய எம்பெருமானுடைய திருநாமம் நமோ நாராயணமே!

கிடந்த நம்பி குடந்தை மேவிக் கேழலாய் உலகை
இடந்த நம்பி எங்கள் நம்பி யெறிஞரரணழியக்
கடந்த நம்பி கடியாரிலங்கை யுலகை யீரடியால்
நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோ நாராயணமே. (6.10.1)

*(10) அடுத்தபத்தில், 'நானே எய்தப்பெற்றேன்' என்று தாம் பெற்ற பேற்றை ஆழ்வார் அனுபவிக்கிறார்:*

*வந்த நாள் வந்தென் நெஞ்சிடங் கொண்டான்*
*மற்றோர் நெஞ்சறியான் அடியேனுடைச்*
*சிந்தையாய் வந்து தென்புலர்க் கென்னைச்*
*சேர்கொடான் இதுசிக்கெனப் பெற்றேன்*
*கொம்புலாம் பொழில்சூழ் குடந்தைத் தலைக்*
*கோவினைக் குடமாடிய கூத்தனை*
*எந்தையை யெந்தை தந்தை தம்மானை*
*எம்பிரானை யெத்தால் மறக்கேனே!*

*(7.3.3 )*

*"தானே என் நெஞ்சில் புகுந்து தன்னை மறக்காமல் செய்தான். இவனை நான் எப்படி மறப்பேன்" என்கிறார். முதலிலே என்னைத் தனக்காக்கிக் கொள்வதற்காக வருந்தருளி, என் நெஞ்சைத் தனக்கு இருப்பிடமாக ஏற்றுக் கொண்டான். பின்பு வேறு ஒருவருடைய நெஞ்சையும் தனக்கு இருப்பிடமாக அறியமாட்டான். என்னுடைய மனோரதமான கைங்கரியத்தைத் தானே கொடுக்கக் கருதி வந்தவனாகி, தெற்கிலுள்ள யமதூதர் கையில் என்னை அகப்படும்படி செய்யமாட்டான். இப்பேற்றைத் திண்ணியதாகப் பெற்றேன். ஆதலால் பூங்கொத்துக்கள் எங்கும் அடர்ந்துள்ள சோலை சூழ் திருக்குடந்தையில் பள்ளி கொண்டருளும் ஸ்வாமியாய், வியக்கத்தக்க செயல்களை உடையவனாய், எனக்குப் பிதாவாய், என் பிதாவுக்கும் பிதாவான என் குலநாதனாய், எனக்கு உபகாரகனானவனை எக்காரணத்தால் நான் மறப்பேன்?*

*(11) தம்மடியார்களிடம் கைங்கரியம் கொள்வதற்காகவே உகந்தருளின நிலங்களிலே உறைகிறான் எம்பெருமான்.*

*பேரானைக் குடந்தைப் பெருமானை, இலங்கொளிசேர்*
*வாரார் வனமுலையாள் மலர்மங்கை நாயகனை,*
*ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற,*
*காரார் கருமுகிலைக் கண்டுகொண்டு களித்தேனே.*

*(7.6.9.)*

பெரிய பிராட்டியாருக்கு வல்லபனை அனுபவிக்க, அனுபவிக்க மேன் மேலும் இனிமையைத் தரும் அமுதம் போன்றவனை, திருப்பேர் நகரில் உறைபவனை, திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் பெருமானை, அழகிய திருவழுந்தூரில் நித்திய வாஸம் செய்பவனைக் கறுத்த மேகம் போல் இருப்பவனை நான்கண்டு கொண்டு களித்தேன் -- என்கிறார் ஆழ்வார்.

*(12) எம்பெருமானே! உன்னை மறவாமை பெற்றேன்.இதற்கு மேல் பேறு உண்டோ?*

வந்தாய் என் மனத்தே வந்து நீ புகுந்த பின்னை
எந்தாய்! போயறியாய்; இதுவே யமையாதோ?
கொந்தார் பைம் பொழில்சூழ் குடந்தைக் கிடந்துகந்த
மைந்தா! உன்னை என்றும் மறவாமைப் பெற்றேனே!

*(8.9.5)*

" எனக்கு ஸ்வாமியே! நான் இருக்குமிடம் நாடி வந்தாய், நீயே கிட்டி என் மனத்துள் புகுந்த பின்பு, நீ நித்யஸூரிகள் பக்கலிலும் போக நினைக்க மாட்டாய். இந்தப் பேறே எனக்குப் போதாதா? பூங்கொத்துகள் அடர்ந்த பொழில்கள் சூழ்ந்த திருக்குடந்தையில் கண் வளர்ந்தருளி உகந்த பெருமானே! உன்னை எக்காலத்திலும் மறவாமையும் பெற்றேன். எவ்வளவு மகத்தான உபகாரமிது! " என்று ஆழ்வார் தனக்குக்கிட்டின பேற்றை எண்ணி திருக்கண்ணபுரம் சௌரிராஜப் பெருமாளை மங்களாசாசனம் செய்து ஆனந்திக்கிறார்.

*(13) திருநாகை அழகியாரைக் காணப்புக்கு, ஆராவமுதனின் ஆச்சரியமான அழகு அகவாயில் மயக்க:*

தோடவிழ் நீலம் மணங் கொடுக்கும்
சூழ்புனல் சூழ் குடந்தைக் கிடந்த
சேடர் கொலென்று தெரிக்கமாட்டேன்;
செஞ்சுடராழியும் சங்கு மேந்தி
பாடக மெல்லடியார் வணங்கப்
பன்மணி முத்தோடிலங்கு சோதி
ஆடகம் பூண்டொரு நான்கு தோளும்
அச்சோ ஒருவர் அழகியவா!

*(9.2.2)*

ஆழ்வார் அச்சோ! என்று ஆச்சரியப்பட்டு, நீல மலர்கள் பரிமளத்தைப் பரப்பி தடாகங்களை மணக்கப் பண்ணும் திருக்குடந்தைத் திருப்பதியில் கண் வளரும் இளைஞனான ஆராவமுதனை எண்ணத்தில் நினைந்தவராய், திருக்கைகளில் ஏந்திய சிவந்த அழகுடைய திருவாழியும், திருச்சங்கும் நாகை அழகியாரைக் காணும் காலத்தில் திருக்குடந்தை அமுதனோ என்று திகைக்க வைத்தது. சௌந்தரராஜப் பெருமாளின் நாற்றோள் அமுதில் நனைந்து, ஒப்பற்ற இவரது அழகு இருந்தபடி என்ன ஆச்சர்யம்! என்று வியந்ததைக் காட்டும் பாசுரமாகும்.

*(14) மற்றோர் பாடலில்,*

*வானை யாரமுதந் தந்த வள்ளலைத்*
*தேனை நீள்வயல் சேறையில் கண்டுபோய்*
*ஆனை வாட்டி யருளும் அமரர்தம்*
*கோனை, யாம் குடந்தைச் சென்று காண்டுமே!*

*(10.1.6)*

திருச்சேறை எம்பெருமானான சாரநாதப் பெருமாளை சேவித்தபோது ஆழ்வார் திருக்குடந்தை எம்பெருமானை இனி காணக் கடவோம்! என்று தொடர் நினைவு கொண்டவராய் இவரைப் பாடிப்பரவுகிறார்.

தேவ லோகத்திலுள்ளவர்களுக்கு அமுதத்தை அளித்த உதாரனாய்த் தேன் போலும், இனியவனான ஸர்வேச்வரனை பரந்த வயலுடைய திருச்சேறையிலே முன்பு சேவித்தோம். நித்ய ஸூரிகளின் தலைவனும் குவலயாபீட மெனும் யானையைக் கொன்றவனைத் திருக்குடந்தையில் சேவிக்கக் கடவோம் என்ற ஆழ்வார், "நித்யஸூரிகளுக்குத் தன்னைக்கொடுப்பதுபோல் எனக்கும் தன்னைக் கொடுத்துத் தேன் போல் இனியனான உதாரனை" என்றும் பாடுகிறார்.

(15) பரகால நாயகி (திருமங்கையாழ்வார்) தன் ஆற்றாமையால் பட்சிகளை அழைத்து, தலைவனோடே என்னைச் சேர்க்க வேண்டும் என்று அவற்றின் காலிலே விழுகிறாள்.

இங்கே போதுங்கொலோ?

இனவேல் நெடுங்கண் களிப்பக்

கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்தமால்

இங்கே போதுங்கொலோ?

*(10.10.8)*

தேன் அடர்ந்த சோலைகள் சூழ்ந்த திருக்குடந்தையிலே பள்ளி கொண்டருளும் ஸர்வேச்வரன் ஒன்றுக் கொன்று ஒப்பாய் வேல் போலே நீண்டுள்ள கண்களானவை களிக்குமாறு இந்த இடத்திற்கு எழுந்தருளுவானோ? என்று எதிர்ப்பார்ப்புடன் பாடிய இப்பாசுரத்தின் தொடர்ச்சியாக, "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்!..." (பெரிய திருமொழி, 10.10.9) என்றும் பாடி ஸ்ரீசார்ங்கபாணியை மங்களாசாசனம் செய்கிறார்.

(16) "போகார் மனம் புகுந்து..." என்று பேற்றுக்கு மிகவும் விரைவில் ஆசைப்பட்ட ஆழ்வார், இப்பாசுரத்தில் "இவரை அறியோம் என்றுஉரைக்கலாமோ?" என்கிறார்.

அறியாமே யென்றுரைக்கலாமே எமக்கு

வெறியார் பொழில் சூழ் வியன்குடந்தை மேவி,

சிறியானோர் பிள்ளையாய் மெள்ள நடந்திட்டு

உறியார் நறுவெண்ணெய் உண்டுகந்தார் தம்மையே.

*(11.3.4)*

நாயகி தசையில் பாடிய பாசுரமிது. அழகிய, மணம் மிகுந்த சோலைகளால் சூழப்பட்ட திருக்குடந்தையிலே சயனித்தருளுபவராய், சிறு பாலகனாய் பொய்யடி இட்டுப்போய் உறியிலகப்பட்ட வெண்ணெய் அமுது செய்து திருவுள்ளம் உகந்தருளிய பெருமானை, அறியவில்லை! என்பது நமக்குத் தகுமோ? -- என்கிறார்.

(17) யாவரையும் ஒழியாமே முற்றும் உண்ட எம்பெருமானின் பிரளயகால லீலையைப்பாடி, அத்தகைய அகடிதகடனா சாமர்த்தியம் உடையவனே திருக்குடந்தையில் எழுந்தருளியுள்ளான் என்று காட்டுகிறார்.

அவனைப் பாடி ஆடுவீர்:

அண்டத்தின் முகடழுந்த வலை முந்நீர்த்
திரைத்தும்ப வா வா வென்று,
தொண்டர்க்கும் அமரர்க்கும் முனிவர்க்கும்
தானருளி உலகமேழும்
உண்டொத்த திருவயிற்றினகம் படியில்
வைத்தும்மை உய்யக் கொண்ட
கொண்டற்கை மணிவண்ணன் தண் குடந்தை
நகர் பாடி ஆடீர்களே!

*(11.6.9)*

திருமங்கையாழ்வாரின் திருக்குறுந்தாண்டகத்தில் ஆராவமுதன்

*(1)* திருக்குறுந்தாண்டகத்தில் ஆராவமுதனை ஏற்றிப்பாடுவது ஒரு சொல்லோவியமாகும்.

மூவரில் முதல்வனாய ஒருவனை, உலகம் கொண்ட
கோவினைக் குடந்தை மேய குருமணித் திரளை, இன்பப்
பாவினைப் பச்சைத்தேனைப் பைம்பொன்னை, அமரர் சென்னிப்
பூவினைப் புகழும் தொண்டர் என் சொல்லிப் புகழ்வர் தூமே?

(திருக்குறுந்தாண்டகம், 6)

பிரமன், சிவன், இந்திரன் மூவர்க்கும் முதல்வனான ஒப்பற்றவன், மாவலியிடம் உலகம் கொண்ட இறைவன். திருக்குடந்தையில் எழுந்தருளுபவன். நீலமணி போன்றவன்.இன்பப் பாடலையும் தேனையும் போல இனியவன். பொன்னைப் போல் ஒளிர்பவன், நித்திய சூரிகள் தலையில் ஆடும் பூப்போன்றவனை அடியார் என் சொல்லிப் புகழ்வர்? என்று சொல்லினால் சொலப்படாத அழகினை ஆழ்வார் விவரிக்கிறார்.

*(2)* மேலும் *14*ம் பாசுரத்தில்:

காவியை வென்ற கண்ணார் கலவியே கருதி, நாளும்
பாவியேன் ஆக எண்ணி அதனுள்ளே பழுத்தொழிந்தேன்,
தூவிசேர் அன்னம் மன்னும் சூழ் புனல் குடந்தையானைப்
பாவியேன் பாவியாது பாவியேன் ஆயினேனே!

(திருக்குறுந்தாண்டகம்,*14*)

அழகிய கண்களுடைய பெண்களுடன் கலந்துபெரும் பாவக் குழியில் விழுந்து மூழ்கினேன். சிறகுடைய அன்னங்கள் வாழும் நீர் சூழ்ந்த திருக்குடந்தை ஆராவமுதனை நினையாமல் நான் பாவிகளில் முதல்வனாய் பெரும்பாவி யானேன்! என்கிறார்.

## திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகத்தில் ஆராவமுதன்

*(1) திருநெடுந்தாண்டகத்தில், பரகாலநாயகியாகப் பாடும்போது,*

*பொங்கார் மெல்லிளங் கொங்கை பொன்னே பூப்ப*
*பொருகயற்கண்ணீர் அரும்பப் போந்துநின்று,*
*செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்*
*சிறு குரலுக்கு உடல் உருகிச் சிந்தித்தாங்கே,*
*தண்காலும் தண் குடந்தை நகரும் பாடித்*
*தண் கோவலூர் பாடி ஆடக் கேட்டு*
*'நங்காய்! நம் குடிக்கு இதுவோ நன்மை?' என்ன,*
*நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே.*

*(திருநெடுந்தாண்டகம், 17)*

ஆழ்வார், பரகாலநாயகியாய் ஆற்றாமை வீஞ்சிப் படும் துன்பத்தைக் கண்ட தாய் பாடும் பாசுரமாகிறது. என்மகளின் இளமுலைகளில் பசலை படர, கயல் கண்கள் நீர் அரும்ப, என்னைவிட்டு தனித்திருக்கிறாள். செங்காற் புறவங்கள் பேடையோடுபேசும் உரையைக் கேட்டு உருகுகின்றாள். திருத்தண்கால், திருக்குடந்தை, திருக்கோவலூர் ஆகிய திவ்விய தேசத்து எம்பெருமான்களை நினைத்துப் பாடியாடுகிறாள். "வாய்விட்டு ஊரார் அறியப்பாடுகிறாயே! நம் குலத்துக்கு நன்மை தருமா உன் செயல்?" என்று கேட்டதும், திருநறையூர் எம்பெருமானைப் பற்றியும் பாடத்தொடங்குகிறாள்.

*(2)* மேலும் திருநெடுந்தாண்டகத்தில், ஆழ்வார் நாயகி பாவத்தில் பாடும்போது,

முற்றாரா வனமுலையாள், பாவை மாயன்
    மொய்யகலத் துள்ளிருப்பாள் அஃதும் கண்டும்,
அற்றாள், தன் நிறையழிந்தாள், ஆவிக்கின்றாள்,
    'அணியரங்கம் ஆடுதுமோ? தோழீ! என்னும்
பெற்றேன் வாய்ச் சொல் இறையும் பேசக் கேளால்;
    பேர்பாடித் தண்குடந்தை நகரும் பாடி
பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்
    பொரு அற்றாள், என்மகள்உம் பொன்னும் அஃதே !

(திருநெடுந்தாண்டகம், 19)

திருவோடு திகழும் திருமார்பினை உடைய பெருமாளைக் கண்ட பின்னும் அவனுக்கே அற்றுத் தீர்ந்தாள், தன் நிறை அழிந்தாள். நெடுமூச்சு விட்டபடி, தன் தோழியிடம் திருப்பேர் நகர், திருக்குடந்தை எம்பெருமான்களைப் பாடியபடி திருவரங்கம் சேர்ந்து பகவத் குணக் கடலில் நீராடலாம் என்றழைக்கிறாள்.

நிகமனப் பாசுரமாக, ஆழ்வார் தானான நிலையில் ஞானம் மீதூற, தன் நைச்சியத்தை (இழி நிலையை) எடுத்துரைக்கிறார். நப்பின்னைக்கு நாயகர், பாற்கடல் கடைந்தவர், சேது பந்தனம் செய்தவர். இராவணன் முதலான அரக்கர் குலம் களைந்தவர். கோவர்த்தனமென்னும் குன்றெடுத்த அழகிய தோளினர். இத்தகைய ஆச்சரிய சேஷ்டிதங்களைச் (செயல்களைச்) செய்தவர்.

அன்றாயர் குலமகளுக்கரையன் தன்னை
    அலைகடலைக்கடைந்தடைத்த அம்மான் தன்னை
குன்றாத வலியரக்கர் கோனை மாளக்
    கொடுஞ்சிலைவாய்ச் சரந்து குலங்களைந்து
வென்றானை, குன்றெடுத்த தோளினானை
    விரி திரை நீர் விண்ணகரம் மருவி நாளும்
நின்றானை, தண் குடந்தைக் கிடந்த மாலை
    நெடியானை அடி நாயேன் நினைந்திட்டேனே.

(திருநெடுந்தாண்டகம், 29)

பொய்கை நிரம்பிய திருவிண்ணகரிலே நின்றும்,திருக்குடந்தையில் பள்ளி கொண்டும் இருக்கும் நெடிய மாலான திருமாலை, அடியேன் நாய்போன்று தாழ்ந்தவன் நினைக்கும்படியாக செய்தனையே! என்று எம்பெருமானின் கருணையை எண்ணி வியந்து தலைக் கட்டுகிறார்.

## திருமங்கையாழ்வார் அருளிய சிறிய திருமடலும் பெரிய திருமடலும்

பெரிய திருமொழி முதலாக, திருநெடுந்தாண்டகம் வரை இரண்டாமாயிரத்தில், திருமங்கை மன்னன். ஆழ்வாராகி வாடி வருந்தி திருமந்திரத்தைப்பெற்றது, 'சூழ் புனல் குடந்தையை தொழுது' என்றபடி, பரகாலநாயகியாய் பாடியதோடு கடைசியில் தாமான நிலையில் திவ்யதேச எம்பெருமானைப் பாடலில் குறிப்பிட்டது, திருக்குடந்தை ஆராவமுதனயே! சிறிய திருமடலில் 'காரார் குடந்தை' (எப்பொழுதும் மேகங்கள் நிறைந்திருப்பதால் குளிர்ந்திருக்கும் திருக்குடந்தை) என்றும் பெரிய திருமடலில், "பொன்மணி கொழிக்கும் பூங்குடந்தைப் போர் விடையை" (ரத்தினங்கள் காவிரி ஆற்றின் கரையில் குவிகிறது. அதனால் அழகு பெறுகிறது குடந்தை மற்றும் அங்குள்ள எம்பெருமான் போர் புரியும் ரிஷபம்போல் விளங்குகின்றான்) என்றும், திவ்விய தேசத்தையும் திவ்விய தேச எம்பெருமானையும் போற்றிப் புகழ்கிறார்.

## திருமங்கையாழ்வார் அருளிய திருவெழுகூற்றிருக்கை

மற்றைய திவ்விய தேசங்களுக்கு இல்லாத பெரும் சிறப்பு, ஆசுகவி,விஸ்தார கவி, சித்திரகவி, மதுரகவி என்ற நான்கு விதமான கவிதைகள் இயற்றுவதில் வல்லவரான நாலுகவிப் பெருமாளான திருமங்கை ஆழ்வார், இத்தலத்துத் தேருக்கென ஒரு தனிப் பிரபந்தம் அருளிச் செய்துள்ளார். அதற்குத் 'திருவெழுகூற்றிருக்கை' எனப் பெயர், அதிலும் முக்கியமாக, இத்தலத்தைப் பற்றிய பிரபந்தமானதால் அதன் பெருமையை சிறிதளவாவது அறிய வேண்டும் என்ற நோக்கத்தால் அதன் விளக்கத்தைக் காண்போம்.

திருமங்கை மன்னன் அருளிச் செய்த ஆறு பிரபந்தங்களில் ஒன்றானதும், 'இயற்பா' என்ற மூன்றாவது ஆயிரத்தில் எட்டாவதாகக் கணக்கிடப்பட்ட பிரபந்தமே திருவெழுக் கூற்றிருக்கை யாகும்.

"ஏழு, ஏழு கூறாய் மேலும் கீழும் அமைந்த தேரில் எம்பெருமான் எழுந்தருளி இருக்கை" என்று பொருள். இப்பிரபந்தம் சித்திரக் கவி வகையில் சேர்ந்தது. சித்திரகவி என்றால்: "ஏக பாதமும், எழு கூற்றிருக்கையும் காதைக் கரப்பும், கரந்துரைச் செய்யுளும், கூடச் சதுக்கமும், கோமூத்திரியும் இவை முதலாவன சித்திரக் கவியே" எனத் தமிழிலக்கண நூல்கள் கூறும். பத்ம பந்தம், சக்ரபந்தம் என வடமொழிப் புலவர்கள் செய்யுள் அமைப்பது போல், தமிழர்களும் செய்வதுண்டு. எழுகூற்றிருக்கை என்ற நூல் (ரதம் - தேர்) ரதபந்தம் என்னும் தேர் அமைப்பில் எழுதப்பட்டது.

ரதபந்தம் ஆக்கும் முறையாவது: தேரின் உருவம் தோன்றக் கட்டங்கள் போட்டு, அவற்றில் எண் முறையே பாசுரப் பகுதிகளை அடக்குவதாகும். தேருக்குள் பெருமாள் எழுந்தருளியிருக்கும் நடுப்பகுதிக்கு மேலும் கீழும் ஏழு பாகங்கள் ஏழு கூறுகள் உண்டு. அப்படிக் கூறுகள் அமைத்து எழுதும்போது முதலில் மூன்று அறைகளும் மேன்மேலும் இரண்டு இரண்டுஅறைகள் மிக ஆறும் ஏழும் கூறுகள் அமைந்ததாய் பதின் மூன்றறைகள் கொண்டதாய் சொற்களை அமைக்க வேண்டும் என்பர்.

'வீர சோழியம்' முதலிய இலக்கண நூல்களில் இதன் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இத்திவ்விய பிரபந்தத்தில் 'ஒரு பேருந்தி' என்று தொடங்கி, "இரு வகைப் பயனாய் ஒன்றாய் விரிந்து நின்றனை" என்ற அளவே, அறைகளில் (கட்டங்களில்) அடக்கத் தக்கவை. அதற்கு மேல் "குன்றாமது மலர்ச் சோலை" என்று தொடங்கியுள்ளவை, பாசுரத்தின் முடிஉரையாய் அமையும், அப்பகுதியை வேண்டுமாயின் தேரின் நடுப்பகுதியில் அமைக்கலாம் என்றும் கருத்துரைப்பர் (காண்க: தேர்ப் படம் அடுத்த பக்கம்).

இந்த திவ்விய பிரபந்தம் 46 அடிகளினால் அமைந்த ஒரு ஆசிரியப்பா வாகும். இதுபோல், ஸ்ரீவைணவத்தில 'திரு குருகைப் பெருமாள் கவிராயர்' என்பவர், நம்மாழ்வார் விஷயமாக 'மாறன் அலங்காரம்'என்னும் நூலில் ஒரு எழு கூற்றிருக்கையையும், சைவ சமயப் புலவர்களான திருஞான சம்பந்தரும், நக்கீரரும் இரு எழுகூற்றிருக்கை - ரத பந்த பாசுரங்கள் இயற்றியுள்ளனர்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1 | 2 | 1 | | | | | |
| | | | | 1 | 2 | 3 | 2 | 1 | | | | |
| | | | 1 | 2 | 3 | 4 | 3 | 2 | 1 | | | |
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 4 | 3 | 2 | 1 | | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |

## திருவெழுகூற்றிருக்கை

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | |
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 4 | 3 | 2 | 1 | | |
| | | | 1 | 2 | 3 | 4 | 3 | 2 | 1 | | | |
| | | | | 1 | 2 | 3 | 2 | 1 | | | | |
| | | | | | 1 | 2 | 1 | | | | | |
| | | | | | | | | | | | | |

ஒரு பேருந்தி இருமலர்த் தவிசில்
ஒரு முறை அயனை ஈன்றனை: ஒரு முறை
இரு சுடர் மீதினில் இயங்கா மும்மதில்
இலங்கை இருகால்வளைய ஒரு சிலை
ஒன்றிய ஈர் எயிற்று அழல் வாய் வாளியில்
அட்டனை; மூவடி நானிலம் வேண்டி
முப்புரி நூலொடு மான் உரி இலங்கு
மார்வினில் இரு பிறப்பு ஒரு மாண் ஆகி
ஒரு முறை ஈரடி மூவுலகு அளந்தனை;
நால் திசை நடுங்க அஞ்சிறைப் பறவை
ஏறி, நால் வாய்மும் மதத்து இரு செவி
ஒரு தனி வேழத்து அரந்தையை ஒரு நாள்
இருநீர் மடுவுள் தீர்த்தனை; முத்தீ
நான்மறை, ஐவகை வேள்வி, அறு தொழில்
அந்தணர் வணங்கும் தன்மையை; ஐம்புலன்
அகத்தினுள் செறுத்து நான்கு உடன் அடக்கி
முக்குணத்து இரண்டு அவை அகற்றி, ஒன்றினில்
ஒன்றி நின்று ஆங்கு இரு பிறப்பு அறுப்போர்
அறியும் தன்மையை; முக்கண், நால் தோள்
ஐவாய் அரவோடு ஆறு பொதி சடையோன்
அறிவு அரும் தன்மைப் பெருமையுள் நின்றனை;
ஏழ் உலகு எயிற்றினில் கொண்டனை; கூறிய
அறுசுவைப் பயனும் ஆயினை; சுடர்விடும்
ஐம்படை அங்கையுள் அமர்ந்தனை; சுந்தர
நால் தோள்முந்நீர் வண்ண! நின் ஈரடி
ஒன்றிய மனத்தால் ஒரு மதிமுகத்து
மங்கையர் இருவரும் மலரன அங்கையில்
முப்பொழுதும் வருட அறிதுயில் அமர்ந்தனை;
நெறிமுறை நால் வகை வருணமும் ஆயினை;
மேதகு ஐம் பெரும் பூதமும் நீயே
அறுபதம் முரலும் கூந்தல் காரணம்.

ஏழ் விடை அடங்கச் செற்றனை;
அறுவகைச் சமயமும் அறிவு அரு நிலையினை
ஐம்பால் ஓதியை ஆகத்து இருந்தின:
அறம் முதல் நான்கு அவையாய்,
மூர்த்தி மூன்றாய், இருவகைப் பயனாய்
ஒன்றாய் விரிந்து நின்றனை;
குன்றா மதுமலர்ச் சோலை வண் கொடிப் படப்பை
வரு புனல் பொன்னி மாமணி அலைக்கும்
செந்நெல் ஒண் கழனித் திகழ் வனம் உடுத்த
கற்போர் புரிசைக் கனக மாளிகை
நிமிர் கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்
செல்வம் மல்கு தென் திருக் குடந்தை
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க
ஆடு அரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம! நின் அடி இணை பணிவன்,
வருமிடர் அகல மாற்றோ வினையே.

விளக்கம்:

எம்பெருமானே! நிகரில்லாததும், அகன்றதுமான உன் திருஉந்தியில் தோன்றிய பெரிய தாமரைப் பூவில் ஒருமுறை பிரமனைப் படைத்தாய், இராமனாக வந்தபோது, சூரிய சந்திரர்கள் புகமுடியாத, கடல், மலை காடு என்ற மூன்று வகை மதிள்களை உடைய இலங்கையை, வளைந்த உன் சிலையால் தீயைக் கக்கும் அம்புகளிட்டு அழித்தாய்.

முன்னொரு கால், பூணூலும், மான் தோலும் உன் திருமார்பில் விளங்க, அழகிய அந்தண சிறுவனாகி, மாவலியிடம் மூவடி மண்ணை யாசித்து, உன் இரண்டு திருவடிகளாலே மூவுலகங்களையும் அளந்தாய்.

ஒருமுறை நான்கு திசைகளில் உள்ளோர் நடுங்கும்படி அழகிய சிறகுடைய கருடன் மீதேறி, பொய்கைக் கரை அடைந்து, மூவிடங்களில் (வாய், கண், பின்பகுதி) மத ஜலம் பெருகும் ஒப்பற்ற கஜேந்திரனின் பெருந்துயரைக் களைந்தாய், நீயே மூவகைத் தீயால் நான்கு வேதங்களால் ஐவகை வேள்விகளால், ஆறு கருமங்களால் உன்னை அந்தணர்கள் வழிபடுகின்றனர்.

ஐம்புலன்களை மனத்தால் அடக்கி, உண்ணல், உறங்கல், அஞ்சுதல், புணர்தல் ஆகிய நான்கையும் தவிர்த்து, இராட்சச, தாமசங்களைத் தவிர்த்து, சத்துவத்தில் நின்று பிறவித்துயரைப் போக்கவல்ல மேலோர்களால் அறியத் தக்கவன் நீயே! முக்கண்கள், நான்கு தோள்களுடன் ஐந்து வாய்கள் உடைய பாம்பையும், கங்கையையும் சடையில் தாங்கிய சிவனாலும் அறிய முடியாத பெருமை உடையவன் நீயே!

ஏழுலகங்களை வராக வடிவில் கொம்பில் எடுத்து வந்தாய்! ஆறு சுவைப் பயனும் நீயே! அழகிய கையில் சுடர் சக்கரத்தை ஏந்தியுள்ளாய்! நான்கு தோள்களுடைய கடல்நிற வண்ணனே! உன் இரு திருவடிகளையும் ஒன்றிய பக்தியுடன் மதிமுகத் திருமகளும், பூமகளும் தத்தம் மலர்க்கரங்களால் எப்பொழுதும் வருட, யோக நித்திரை கொண்டாய்! சாத்திர முறையான நால் வகை வருணங்களுக்கும் தலைவன் நீயே! ஆத்மாக்கள் பொருந்தும் படியான ஐம்பூதங்களும் நீயே! அழகிய வண்டார் மலர்க் கூந்தலை உடைய நன்னையைப்பெற்ற ஏழு எருதுகளை அடக்கினாய், அறுவகை சமயத்தாரும் அறியமுடியாத அரியவன் நீ! ஐவகைப் பெருமைகளோடு கூந்தலுடைய திருமாமகளை உன் திருமார்பில் கொண்டுள்ளாய், அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கைத் தருபவன் நீ! மூன்று மூர்த்திகளாயும், சுக, துக்கம் எனும் இருவகைப் பயனுமாயும், நீ ஒருவனே உலகெங்கும் வியாபித்துள்ளாய்.

குறையாமல் தேன் சொறியும் பூஞ்சோலைகள் நிறைந்த திருக்குடந்தையில் வெற்றிலைத் தோட்டங்கள் உள்ளன. நீர் நிறைந்த காவிரி ஆறானது, மணிகளைக் கொழித்தபடிநெல் வயல்களில் பாயும், ஊரின் நாற்புறங்களிலும் வனங்கள் உள்ளன. கல்வியிற் சிறந்தோர் வாழும் பொன் வேய் மாளிகைகளில், சந்திரனைத் தொடும்படியான கொடிகள் விண்ணை நோக்கி உயர்ந்திருக்கும்.

செல்வச் சிறப்பு மிக்க இந்தத்தென் திருக்குடந்தை நகரில் அந்தணர்கள் வேத மந்திரங்களை ஓதியபடி வணங்கும் பெருமை உடையவனாய், படமுடைய ஆதிசேஷனாகிய படுக்கையில் யோக நித்திரை கொள்ளும் பரம புருஷனே! இந்தப் பிறவியில் ஏற்படும் இன்னல்கள் தீரும்படி, அடியேன் உம் இருதிருவடிகளிலும் பணிகின்றேன், பிறவித் துயரறுத்து அருள வேண்டும்.

கம்ப நாட்டாழ்வார், திருக்குடந்தையின் செழுமையையும், இத்திருப்பதியின் நாயகனான ஆராவமுதனையும் மங்களாசாசனம் செய்கிறபடி:

"இடம் கொண்ட நெஞ்சத்திணங்கிக் கிடப்பன, என்றும் பொன்னித்
தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங்குடந்தை
விடங்கொண்ட வெண்பல் கருந்துத்தி செங்கண் தழலுமிழ்வாய்
படங்கொண்ட பாம்பணைப் பள்ளி கொண்டான் திருப்பாதங்களே."

பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும், நூற்றெட்டு திருப்பதி அந்தாதியில் "உலகைப் படைத்து, காத்து, அழிக்கும் ஸர்வ சக்தி படைத்தவன், மற்றும் வாமனாவதாரம் செய்த எம்பெருமான், அவனே திருக்குடந்தையில் சயனத் திருக்கோலத்தில் காட்சியளிக்கிறான்" என்று போற்றுகிறார்.

தானே படைத்துலகைத் தானே யளித்து நீ
தானே யழிக்கும் தளர்ச்சியோ? - வானிற்
திரும குடந்தைக்கச் சிறுகுறளாய் நீண்ட
பெரும! குடந்தைக் கிடந்தாய்! பேசு.

(நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 14)

கவிதார்கிக்க ஸிம்ஹம் என்று போற்றப்படும் நம் ஸ்வாமி தேசிகன், 'தயாசதகம்' என்று நூறு சுலோகங்களால் திருமலையப்பனைத் துதிக்கிறார். '...சமித விமத பக்ஷா சார்ங்க தந்வானு கம்பா' (தயாசதகம் - 106) என்றபடி, ஸ்வாமி தேசிகனுக்கு திருவேங்கட மலையில் சேவை சாதிக்கும் ஸ்ரீநிவாஸன் சார்ங்கபாணியாகக் காட்சியளிக்கிறான்.(ஸ்ரீசார்ங்கபாணி, ஸ்ரீஆராவமுதனின் உத்ஸவ மூர்த்தி)

இது போலவே, ஸ்வாமி தேசிகனுக்கு, மதிட்கச்சி தன்னில் கண்கொடுக்கும் பெருமாளான பேரருளாளனும்,

...தாவன் ந சேத் த்வமுபகச்சஸி சார்ங்கதந்வா
சக்யம் த்வயாபி ந ஹி வாரயிதும் கரீச !

(வரதராஜ பஞ்சாசத், 38)

என்றபடி 'சார்ங்க தன்வா' ஆகக் காட்சியளிக்கிறான்.

ஆழ்வார்களால் மட்டுமின்றி ஆசார்ய சிரேஷ்டர்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்டவன் ஆராவமுதன். 'திருக்குடந்தை தேசிகன்' என்று புகழ் பெற்ற ஸ்ரீகோபாலார்ய மஹா தேசிகன், ஆராவமுதனின் வடிவழகில் ஈடுபட்டு, பாதாதி கேசமாய் அனுபவித்து "அபர்யாப்தாம்ருத த்யாந ஸோபாநம்" என்ற ஸ்தோத்திரத்தை அருளிச் செய்துள்ளார். இது ஸ்வாமி தேசிகன் திருவரங்கன் மீது பாடிய "பகவத் த்யாந ஸோபாநத்தின்" அமைப்பில் அமைந்துள்ளது ரஸிக்கத்தக்கது.

அரசாணிபாலை ஸ்ரீவேங்கடாத்வரி என்னும் மஹாகவியும் தனது விச்வகுணாதர்ச சம்பு என்ற நூலில் எம்பெருமானின் மூல விக்ரஹ ஸேவையையும் சார்ங்கபாணியாகக் காட்சி தரும் உத்ஸவரையும் போற்றிப்பாடியுள்ளார்.

# திருக்குடந்தையின் அண்மையில் அமைந்துள்ள சில முக்கிய திவ்ய தேசங்கள்

திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோயில்), திருநறையூர் (நாச்சியார் கோயில்), திருச்சேறை, திருக்கண்ணன் கவித்தலம், திருஆதனூர் மற்றும் திருப்புள்ளம்பூதங்குடி முதலிய திவ்ய தேசங்கள் திருக்குடந்தைக்கு மிக அருகில் அமைந்துள்ளன. இத்திருத்தலங்கள் பற்றிய சுருக்கமான ஆய்வு இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 1. திருவிண்ணகர் எனப்படும் ஒப்பிலியப்பன் கோயில்

இது மார்க்கண்டேய க்ஷேத்ரம் என்றும் அழைக்கப்படும். கும்பகோணம் என்னும் திருக்குடந்தையிலிருந்து 6 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருநாகேச்வரம் ரயில்வே ஸ்டேஷனில் இருந்து 2 கி.மீ. தூரத்தில் உள்ளது.

**மூலவர்:** ஒப்பிலியப்பன் (ஒப்பற்றவன்) ஸ்ரீநிவாஸன் என்று பெயர், திருமலையப்பனைப் போன்ற திருக்கோலத்துடன் எழுந்தருளியுள்ளார். (நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்). எம்பெருமானின் வலது திருக்கையில் ''மாம் ஏகம் சரணம் வ்ரஜ'' என்ற சரம ச்லோகப் பகுதி, வைரங்களால் பொறிக்கப்பட்டுள்ளது.

**தாயார் :** ஸ்ரீபூமிப்பிராட்டி, பூமி நாச்சியார் என்ற திருநாமத்துடன் பெருமாளுக்கு வலதுபுறம் கீழே மண்டியிட்டு, வணங்கும் நிலையில் திருக்கல்யாண திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். தாயாருக்கு தனிக் கோவில் இல்லை.

**தீர்த்தம்:** அஹோராத்ர புஷ்கரிணி என்னும் இப்புஷ்கரிணியில் எந்த வேளையிலும் எம்பெருமானின் பக்தர்கள் நீராடலாம்.

**விமானம்:** விஷ்ணு விமானம், சுத்தானந்த விமானம்.

**பிரத்யட்சம்:** மார்க்கண்டேயர், பெரிய திருவடி (கருடன்), காவேரி, தர்மதேவதை ஆகியோருக்கு எம்பெருமான் திருக்காட்சி தந்தருளினார்.

**வரலாறு:** பிரம்மாண்ட புராணத்தில், தன் தந்தையாகிய பிரமனிடம் நாரதர் இத்தலத்து மேன்மையைக் கேட்க, அப்போது பிரம்மா நாரதருக்குச் சொல்வதாக அமைந்துள்ளது.

ம்ருகண்டு மகரிஷியின் திருப்புதல்வரான மார்க்கண்டேயர், "திருமகள் தனக்கு மகளாகவும், திருமால் தனக்கு மாப்பிள்ளையாகவும் வரவேண்டும்" என்ற பேராவலுடன் நெடுங்காலம் இத்தலத்தில் தவமிருந்தார். முனிவரின் வேண்டுதலுக்கிணங்க ஸ்ரீதேவி பிராட்டியார் திருத்துழாய்ச் செடியருகில் தோன்றினாள். திருமகளே இவள் என்று எடுத்து வளர்த்துவரும் வேளையில், பங்குனி ஏகாதசி அன்று, திருமால் முதியவராகத் தோன்றி, இச்சிறுபெண்ணைத் தனக்கு மணம் முடித்து வைக்கும்படி வற்புறுத்தினார். "தளிகைகூட சரிவரத் தெரியாத இப்பெண், உப்பு குறைவாகச் சேர்த்தாலும் நீர் சினந்து சபிக்கக் கூடும், ஆதலால் இது வேண்டாம்" என்று மறுத்தார். முதியவரோ, "சிறு பெண் உப்பில்லாமலே தளிகை செய்தாலும் எமக்கு உகப்பு. இவளை மணக்காமல் இவ்விடம் விட்டுச் செல்லேன்" என்று மீண்டும் வற்புறுத்த, முனிவர் தம் தவ வலிமையால் வந்திருப்பது திருமாலே என்று உணர்ந்து கண் திறந்து பார்த்த போது எம்பெருமான் சங்க-சக்ர தாரியாய் காட்சி அளித்தான். முனிவரும் தண்டனிட்டு, தம் மகளைப் பெருமாளுக்கே கன்னிகாதானம் செய்து கொடுத்தார்.

'உப்பில்லாப் பண்டத்தையே உகப்போம்' என்றதால், இன்றும் உப்பில்லா நிவேதனமே பெருமாளுக்குச் சமர்ப்பிக்கப் படுகிறது. பெருமாளுக்கு " உப்பிலியப்பன் "என்ற திருநாமம் வழங்கப்படுகிறது.

**சிறப்புக்கள்:**

1. *108 திவ்ய தேசங்களில் இங்கு மட்டும் தான் உப்பில்லா நிவேதனம்*
2. *திருப்பதி போக இயலாதவர்கள், இங்கேயே பிரார்த்தனையைச் செலுத்தலாம். திருப்பதி ஸ்ரீநிவாஸனுக்குத் தமையனார் என்கிற ஐதீகம்.*
3. *இவ்வெம்பெருமானுக்கும் தனியாக சுப்ரபாத-ஸ்தோத்ரம் உண்டு.*
4. *தான் இருந்த இடத்திலேயே அருச்சை எம்பெருமான்களைச் சேவித்து மங்களாசாசனம் செய்த நம்மாழ்வாருக்கு, இத்தலத்து எம்பெருமான் ஒப்பிலியப்பன் ஐந்துவிதத் திருக்கோலங்களில் காட்சி அளித்தார்:1. பொன்னப்பன், 2. மணியப்பன், 3. முத்தப்பன், 4.என்னப்பன், 5. திருவிண்ணகரப்பன் (ஒப்பிலியப்பன்) என்றவாறு.*

*என்னப்பன் எனக்காயிகுளாய் என்னைப் பெற்றவளாயப்*
*பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்*
*மின்னப் பொன்மதில் சூழ் திருவிண்ணகர் சேர்ந்தவப்பன்*
*தன்னொப்பார் இல்லப்பன் தந்தனன் தனதாள் நிழலே.*

*(திருவாய்மொழி, 6.3.9)*

*இத்தலத்து எம்பெருமானைப் போற்றிப் பாடிய ஆழ்வார்கள் நால்வர்: நம்மாழ்வார் (11 பாசுரங்கள்), பொய்கையாழ்வார் (1), பேயாழ்வார் (2), திருமங்கையாழ்வார் (34 பாசுரங்கள்). பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும் மங்களாசாசனம் செய்துள்ளார்.*

*வைகுண்டத்திற்குச் சமமானதாகப் பேசப்படும் இத்தலம், ஆகாச நகரி என்றும் வழங்கப்படுகின்றது. ஸ்ரீவைகுண்டத்தில் ஓடக்கூடிய விரஜாநதியே நாட்டாறு (தக்ஷிண கங்கை) என்ற பெயரில் இங்கு ஓடுவதாக ஐதீகம்.*

## 2. திருநறையூர் என்னும் நாச்சியார் கோவில்

*அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டும்*
*அலைகடலும் குலவரையும் உண்ட கண்டன்*
*கொம்பமரும் வட மரத்தினிலை மேல் பள்ளி*
*கூடினான் திருவடியே கூடகிற்பீர்*
*வம்பவிழும் செண்பகத்தின் வாச முண்டு*
*மணிவண்டு வகுளத்தின் மலர்மேல்வைகு*
*செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த கோயில்*
*திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.*

*(பெரிய திருமொழி, 6.6.1)*

திருநறையூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் சோழ வேந்தன் கோச்செங்கணான் தொழுது இறைஞ்சிச் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேருமின்கள் என்று திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்திருத்தலம் "நாச்சியார்கோயில்" என்றே வழங்கப் படுகிறது. திருக்குடந்தையிலிருந்து திருவாரூர் செல்லும் சாலையில் 6 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது.

**வரலாறு:**

பிரம்மாண்ட புராணத்தில் சௌநக ஸம்வாதம் என்னும் பகுதியில் 12 அத்தியாயங்களில் இத்திருத்தலம் பற்றிப் பேசப்பட்டுள்ளது. பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் நம்பி மேக விடுதூது என்னும் நூலும், திரு டி. நரசிம்மாச்சாரியாரின் திருநறையூர் இரட்டை மணிமாலை என்னும் நூலும், திருமங்கையாழ்வாரின் 110 பாசுரங்களும் இத்தலத்தின் சிறப்பைப் போற்றுகின்றன.

இத்தலம் 'சுகந்தகிரி' என்று வடமொழி நூலில் கூறப்படுகிறது. திருவாகிய இலக்குமிக்கு தேன் போல் இனிக்கும் இருப்பிடமாதலால் திருநறையூர் என்ற சிறப்பைப் பெற்றது.

மேதாவி என்ற முனிவர் திருமகளே தனக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்று மணிமுத்தாறு நதிக்கரையில் கடும் தவம் புரிந்தார். தவத்தை மெச்சிய திருமகள் பங்குனி மாதம் உத்திரநக்ஷத்திர வெள்ளிக்கிழமையில் மணிமுத்தாற்றங்கரையில் வஞ்சுள மரத்தின் கீழ் அவதரித்தார். முனிவர் தம் தவ வலிமையால் இவளே திருமகள் என்று அறிந்து வஞ்சுளவல்லி என்ற திருநாமமிட்டு வளர்த்து வந்தார். வியூக வாஸுதேவனாக இவ்விடத்திற்கு எழுந்தருளிய எம்பெருமான் தனது ஐந்து நிலைகளில் உண்டான சக்தியை ஸ்ரீதேவிக்கு அளித்து ஸ்ரீநிவாஸன் என்ற திருநாமத்தோடு வஞ்சுளவல்லி யைத் திருமணம் புரிந்தார்.

திருமணத் திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளி இருப்பது தனிச்சிறப்பு. கிருஷ்ணாரண்ய க்ஷேத்ரங்களில் முதன்மையானது திருநறையூர், மற்றவை: திருச்சேறை, திருக்கண்ணமங்கை, திருக் கண்ணபுரம், திருக்கண்ணங்குடி ஆகியவை.

**மூலவர்:** திருநறையூர் நம்பி, ஸ்ரீநிவாஸன், வியூகவாஸுதேவன், சுகந்த வன நாதன்.

**தாயார்:** வஞ்சுளவல்லி, நம்பிக்கை நாச்சியார், திருமணத் திருக் கோலத்திலேயே நின்று அருளுகிறார்.

**விமானம்:** ஸ்ரீநிவாஸ விமானம், ஹேம விமானம்.

**விருட்சம்:** வில்வ விருட்சம், வகுளம் எனப்படும் மகிழமரம்.

**புஷ்கரிணி:**

1. மணிமுத்தா புஷ்கரிணியில் சோழன் தெய்வ வாள் பெற்றது.
2. ஸங்கர்ஷண தீர்த்தத்தில் நான் முகனின் தோஷம் விலகியது.
3. ப்ரத்யும்ன தீர்த்ததில் பானுதத்தன் எனும் அரக்கனின் சாபம் தீர்ந்தது.
4. அனிருத்தன் தீர்த்ததில் இந்திரனின் சாபம் அகன்றது.
5. ஸாம்ப தீர்த்தம்: ஸப்தரிஷிகள் தவம் செய்த பெருமை பெற்றது.

***பிரத்யட்சம்:*** மேதாவி முனிவரும், திருமணத்திற்கு வந்திருந்த நான்முகனும் பகவானை நேரில் கண்டனர்.

***சிறப்புக்கள்:***

1. திருமகளை மணம் புரிந்த கோலத்தில், வலது கையில் சக்கரமும், இடதுகையில் சங்கும் ஏந்தி, சற்றே முன்புறம் வருவது போல் ஒரு தோரணை காட்டி, பஞ்ச ஸம்ஸ்காரம் செய்ய முற்படுவதுபோல் தோன்றுகிறார் எம்பெருமான்.
2. ஆகம சிற்ப சாத்திரத்தின்படி அனைத்து இலக்கணங்களும் ஒருங்கே பொருந்தியவராய், ஸௌந்தர்யமயமாய், எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திவ்வியமங்கள விக்ரஹமான, அழகிய திருமேனியை வேறு எந்த திவ்விய தேசத்திலும் சேவித்து விடமுடியாது.
3. பிராட்டிமார்களால் புகழ்பெற்ற ஸ்தலங்களில் இதுவுமொன்று. ஸ்ரீதேவியால் பெருமை திருவரங்கத்தில், பூதேவியால் பெருமை ஸ்ரீவில்லிபுத்தூரில், நீளாதேவியால் பெருமை நாச்சியார் கோயிலில். ஸ்ரீவில்லிபுத்தூரை நாச்சியார் திருமாளிகை என்றும், திருநறையூரை நாச்சியார் கோயில் என்றும் அழைப்பர்.
4. மாடக்கோவில் அமைப்பை உடையது இத்தலத் திருக்கோவில். திருவாசலிலிருந்து உள்ளே நோக்கினால், எம்பெருமான் சிறுமலைமீது எழுந்தருளி இருப்பதாகத் தோன்றும்.
5. சிறிதும் பெரிதுமான 16 கோபுரங்களை உடையது. ராஜகோபுரம் 5 அடுக்கும் 76 அடி உயரமும் கொண்டது. கருவறைக்கு மேல் உள்ள விமானமும் கோபுர வடிவிலேயே அமைந்திருக்கும் தனிச்சிறப்பு வேறெங்கும் அதிகமாகக் காண முடியாது.
6. சோழ நாயனார் என்ற கோச்செங்கணான் எதிரிகளிடம் தோற்று, மறைந்து வாழும் காலத்தில், முனிவர்களால் கடாட்சிக்கப் பட்டு, மணிமுத்தாற்றில் நீராடுமாறு அவர்களால் உபதேசிக்கப் பட்டான். தெய்வவாள் கிடைக்கப் பெற்று, எதிரிகளை அழித்து, சிறந்த தம் நாட்டை மீட்டான். சிறந்த வைணவனாகி, பெரிய திருமண மண்டபம் கட்டினான். தங்கவிமானம் அமைத்தான். எம்பெருமானின் ஆராதனத்திற்காக பெருநிலம் அளித்தான். இவ்வரலாறு இத்திருதலப்பாடலில் (பெரிய திருமொழி, 6.6.3.)

"தெய்வவாள் வளம்கொண்ட சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே" என்று கூறப்பட்டுள்ளது.

7. மிக்க கீர்த்தியும் பெரும் சக்தியும் வாய்ந்த கருடாழ்வாரின் தனிச்சிறப்பு வரப்ரஸாதி.
8. திருமங்கையாழ்வார் 100 பாசுரங்கள் பெரிய திருமாழியிலும், திருநெடுந்தாண்டகத்திலும், சிறிய திருமடலிலும், பெரிய திருமடலிலும் இத்திருத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். திருமங்கை ஆழ்வாருக்கு பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தும்,சோழ அரசன் ஆழ்வாரை இவ்வூர்ச்சிறையில் இட்டபோது இந்த எம்பெருமானே தனமுள்ள இடம் காட்டியும் நித்திய ததீயாராதனத்துக்கும் வழிவகுத்தான்.
9. திருமங்கையாழ்வார் மதில் கட்டியதுஅரங்கனுக்கு, மடலூர்ந்து, தன் காதலைக் காட்டியது திருநறையூர் நம்பிக்கேயாம்.

**3. திருச்சேறை**

நாச்சியார்கோயில் திவ்வியதேசத்திலிருந்து குடவாசல் செல்லும் வழியில் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது இத்தலம். திருக்குடந்தையிலிருந்தும் செல்லலாம். இத்தலத்தைப் பற்றி பிரம்மாண்ட புராணத்தில் மகேச்வரனுடன் நாரதர் ஸம்பாஷணை விஷயமாக 1 முதல் 6-ம் அத்யாயம் வரையிலும், பவிஷ்யத் புராணத்தில் உள்ள 5 அத்யாயங்களிலும்(68 முதல் 72 வரை) பேசப்படுகிறது.

1. ஒரு பிரளயத்தின் போது நான்முகன் வேதங்களை ஒரு குடத்தில் வைக்க எண்ணி, குடம் செய்ய மண் எடுத்தான். பல இடங்களில் மண் எடுத்தும் குடம் செய்ய முடியவில்லை. எம்பெருமானைத் துதிக்க, அவரும் தமக்கு உவந்த இடமான 'ஸார க்ஷேத்ரத்தில்' மண் எடுத்துக் 'குடம்' செய்யுமாறு பணித்தார். பிரமனும் குடம் செய்து, அதனுள் வேதங்களை இட்டுக் காத்தான்.
2. ஒரு காலத்தில் விந்திய மலையடிவாரத்தில் கங்கை, யமுனை, ஸரஸ்வதி, சிந்து, காவேரி,கோதாவரி, நர்மதை ஆகிய ஏழு நதிகளும் கன்னிகைகளாக மாறி விளையாடிக் கொண்டிருக்கையில் விச்வாவஸு எனும் கந்தர்வன் இவர்களை வணங்கிச் சென்றான்.

இவன் யாரை மதித்து வணங்கினான், யார் உயர்ந்தவர் என்ற கேள்வி எழுந்தது. கங்கையும் காவிரியும் தம்மைத்தாமே உயர்ந்தவர் என்ற வாதத்தை எழுப்பினர். இறுதியில் பிரமனிடம் முறையிட, அவரோ எம்பெருமான் திருவடி ஸத்யலோகம் வரை நீண்டபோது செய்த திருமஞ்சனதீர்த்தமே கங்கையானது. ஆகவே கங்கையே உயர்ந்தது என்றார். தனக்கும் அத்தகைய உயர்வு வரவேண்டுமென கடுந்தவம் புரிந்த காவேரியாறு, தைப் பூசத்தன்று ஒரு சிறு குழந்தை தனக்கெதிரில் தவழ்ந்து வர, அதன் கோடிஸூர்ய ப்ரகாசம் கண்டு, தொழுது நின்றாள். எம்பெருமான் தன் மழலை வேடத்தை விட்டு கருடாரூடனாய், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, மகாலக்ஷ்மி, ஸாரநாயகி என்னும் தேவிகளுடன் காட்சி அளித்தான். இவ்வழகுடனே இத்தலத்தில் எழுந்தருள வேணு மென்றும், தனக்கும் கங்கையினும் மேன்மை தரவேண்டுமென்றும் காவேரி எம்பெருமானை வேண்டினாள். த்ரேதாயுகத்தில் இராமாவதார காலத்தில் விபீஷணன், எம்பெருமானை இலங்கைக்கு எடுத்து செல்லும் வழியில் காவிரி சூழ் திருவரங்கத்தில் தங்கினார். "கங்கையிற் புனிதமாய காவிரி" என்று தொண்டரடிப் பொடியாழ்வாரால் காவேரி போற்றப்படுகிறாள்.

3. குடந்தையின் சித்திரத்தேர், மற்றும் திருவாரூர் திருத்தேர் போன்று இங்குள்ள தேரும் மிகப் பெரியது.
4. திருமங்கையாழ்வாரால் மட்டுமே மங்களாசாசனம் பண்ணப் பெற்ற 13 தீஞ்சுவைப் பாசுரங்கள்.
5. 108 திவ்ய தேசங்களில் இத்தலம் தவிர, வேறெங்கும் எம்பெருமான் ஐந்து தேவிகளுடன் காட்சி தருவதில்லை, மூலவர் வலது திருக்கரத்தில் பத்மம் (தாமரை) வைத்துள்ளது பரமபதத்தில் கொண்ட கோலத்திற்கு ஒப்பாகும்.
6. ஸத்தியகீர்த்தி என்ற ஒரு அரசன் புத்திரப்பேறு வேண்டியபோது, மார்கண்டேய முனிவரால் ஏவப்பட்டு இத்தலத்திற்கு வந்து புத்திரப்பேறு அடைந்தான். அவ்வரசன் விமானம், மண்டபம் முதலிய திருப்பணிகள் செய்து, சித்திரை மாதத்தில் பிரம்மோத்ஸவமும் நடத்தி வைத்தான்.

7. திருமால் காவேரிக்கு தைப்பூசத்தில் வியாழன் ஸஞ்சரித்த காலத்தில் பிரத்யக்ஷமானதால், 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை தைப்பூசத்தில் வியாழன் கிரகம் சூரியனுடன் ஒரே ராசியில் சேரும்போது ஸார புஷ்கரிணியில் நீராடுவது மகாமகத்திற்கு ஈடானதாகும்.
8. மாவடிப் பள்ளம் 'பாபாஷாகேப்' என்ற இஸ்லாமியர் இப்பெருமானை வணங்கி புத்திரப்பேறு பெற்று, இத்தலத்திற்கு பூமிதானம் செய்தாரென்று கல்வெட்டுக்களால் அறியமுடிகிறது.
9. திருக்குளக்கரையில் காவேரியம்மனுக்குத் தனிக்கோவிலுண்டு.
10. புஷ்கரிணிக்கு வடமேற்கு திக்கில் உள்ள ஆஞ்சநேயரும். அவசியம் சேவிக்கப்பட வேண்டியவராவார்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஸாரநாதன், கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் |
| **தாயார்** | : | ஸாரநாயகி, ஸாரநாச்சியார் |
| **தீர்த்தம்** | : | ஸார புஷ்கரணி |
| **விமானம்** | : | ஸார விமானம் |
| **பிரத்யட்சம்** | : | காவேரித் தாய். |

இது பஞ்ச ஸார க்ஷேத்ரம் என்றும் வழங்கப்படும். தஞ்சையை ஆண்ட அழகிய மணவாள நாயக்க மன்னராலும், மந்திரி நரச பூபாலராலும் பலப்பல கைங்கர்யங்கள், பிரதானச் சுவர்கள் கட்டப்பட்டன. பெருவாரியாக நிலங்களையும் இக்கோவிலுக்கு தானமளித்ததாக கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

**4. திருக்கண்ணமங்கை**

பண்ணினைப் பண்ணில் நின்றதோர் பான்மையைப்
பாலுள் நெய்யினை மாலுருவாய் நின்ற
விண்ணினை விளங்கும் சுடர்ச்சோதியை
வேள்வியை விளக்கினொளி தன்னை
மண்ணினை மலையை அலைநீரினை
மாலை மதியை மறையோர் தங்கள்
கண்ணினைக் கண்களாரளவும் நின்று
கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே.

(பெரிய திருமொழி, 7.10.9)

திருமங்கையாழ்வாரால் மிகப் பரவசத்துடன் பாடிக் கொண்டாடப்பட்ட இத்திருத்தலம், 40 சோழ நாட்டுத் திருப்பதிகளுள் மிகவும் முக்கியமானது. திருச்சேறையிலிருந்து, திருவாரூர் செல்லும் பாதையில் விளங்கும் திருத்தலம்.

**வரலாறு:**

இத்தலம் பற்றி சூதபௌராணிகர் தமதுசீடர்கட்குக் கூறியதாக, பாத்மபுராணம் 5வது காண்டத்தில் ஏழு அத்யாயங்களில் (81 முதல் 87 வரை) விவரிக்கப்படுகிறது.

மூலவர் : பக்தவத்ஸலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள், கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். பிரம்மாண்டமான பேரழகு பொருந்திய திருவுருவம்.

தாயார் : கண்ணமங்கை நாயகி

உற்சவர் : பெரும்புறக் கடல்தாயார் : ஸ்ரீ அபிஷேகவல்லி

தீர்த்தம் : தர்சன புஷ்கரிணி

விமானம் : உத்பல விமானம்

**பிரத்யட்சம் :** முப்பத்து முக்கோடி தேவர்கள், வருணன்.

சிறப்புக்கள் :

1. கிருஷ்ணாரண்யம் என்ற பகுதிக்குள் இத்தலமும் ஒன்று,
2. விமானம், ஆரண்யம், மண்டபம், தீர்த்தம், க்ஷேத்ரம், நதி, நகரம் என்ற ஏழு லக்ஷணங்களால் அமையப் பெற்றதால் 'ஸப்த புண்ய க்ஷேத்ரம்', 'ஸப்தாம்ருத க்ஷேத்ரம்' என்றும் அழைக்கப்படுகிறது.
3. ஓர் இரவில் இங்கு வசித்தாலும் மோக்ஷம் கிட்டும்.
4. பக்தர்களின் இடரை உடனே தீர்ப்பதால் பத்தராவி என்றும், பக்தர்களை விட்டு ஒரு போதும் நீங்காதிருப்பதால் பக்த வத்ஸலர் என்றும் பெருமாள் திருநாமம்.
5. திருமால் பாற்கடலைக் கடைந்த பொழுது பலப்பல பொருட்கள் தோன்ற, கடைசியாக பெண்ணமுதான மஹாலக்ஷ்மி தோன்றினாள். பாற்கடலைக் கடைந்த தோற்றத்துடன் இருந்த எம்பெருமானை நேராக நோக்கி, வெட்கப்பட்டு வெளியேறி இத்தலத்தில் வந்து

தவமிருந்தாள். விஷ்வக்ஸேநர் மூலம் முகூர்த்த நாள் குறித்துக் கொடுத்தனுப்ப, முப்பத்து முக்கோடி தேவர்கள் புடை சூழ, எம்பெருமான் திருமகளைக் கைப்பிடித்தான். ஸ்ரீ மகாலக்ஷ்மியை அடைய எம்பெருமான் தம் பாற்கடலை (சிந்துவை) விட்டு புறத்தே வந்து இங்கு எழுந்தருளியதால், பெருமாளுக்குப் 'பெரும் புறக்கடல்' (பெரிய திருமொழி, 7.10.1) என்பதே திருநாமம். வடமொழியில் 'ப்ருஹத் பஹிஸ்-சிந்து நாதன்' என்பர்.

திருமாமகள் தவமியற்றியதால் 'லக்ஷ்மி வனம்' என்றும் திருமால் திருமாமகள் திருமணம் நடைபெற்றதால் க்ருஷ்ண மங்கள க்ஷேத்ரம் என்றும், ஏழு லக்ஷணங்களும் பொருந்தியதால் ஸப்தாம்ருத க்ஷேத்ரம் என்றும் பெயர்.

6. திருமங்கையாழ்வாரால் மட்டும் 14 பாடல்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.
7. நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தைத் தொகுத்த ஸ்ரீமந்நாதமுனிகளின் சீடரான திருக்கண்ணமங்கையாண்டான், இந்த எம்பெருமானிடம் பெருங் காதல் கொண்டு, கோயில் புல் செதுக்கும் கைங்கரியத்தில் ஈடுபட்டு இப்பெருமானே தஞ்சம் என்றிருந்தார். தம் எஜமானனுக்காக உயிர்விட்ட நாயைக் கண்ட அக்கணத்திலேயே தானும் நாயாக வடிவு கொண்டு எம்பெருமானை நோக்கி ஓடி, ஜோதியாகக் கலந்தார். ஆனி மாத திருவோண நக்ஷத்திரம் இவருடைய திருநக்ஷத்திர விழாவாகக் கொண்டாடப் படுகிறது.
8. சிவனார் 4 உருவமெடுத்து இத்தலத்தின் 4 திக்குகளைக் காக்கிறார்.
9. திருவிக்ரம அவதார காலத்தில், பிரமனால் திருமஞ்சனம் செய்யப்பட்ட தீர்த்தத்தின் ஒரு துளி விழுந்த இடமே இத்தலத்து தர்சன புஷ்கரிணியாயிற்று. சந்திரனின் சாபம் தீர்த்த புஷ்கரிணி.
10. தர்சன புஷ்கரிணியின் தீர்த்தத்தால் பகவான் பிராட்டியை பட்ட மகிஷியாகத் திருமஞ்சனம் செய்ததால் அபிஷேகவல்லி என்று தாயார் பெயர்.
11. வெளிப்புறச் சுவரில் அஞ்ஜலி ஹஸ்தராய் புத்தர் சிலை உள்ளது.
12. அந்தகக் கவி வீரராகவ முதலியாரும், காளமேகப் புலவரும், வடலூர் இராமலிங்க அடிகளாரும் இந்த எம்பெருமானையும் எம்பிராட்டியையும் பாடி உள்ளனர்.

## 5. திரு ஆதனூர்

*"வானவர் தம் முன்னவனை -*
*மூழிக்களத்து விளக்கினை,*
*அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை"*

*(பெரிய திருமடல், கண்ணி 129)*

என்று திருமங்கையாழ்வார் இத்திவ்விய தேசத் திருநாமத்துடன் எம்பெருமானின் திருநாமத்தையும் சேர்த்துரைத்துள்ளார். திருக்குடந்தை யிலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது இத்திருத்தலம். இங்குள்ள எம்பெருமானை ப்ருகு மஹரிஷி ப்ரதிஷ்டை செய்ததாக ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகமத்தில் உள்ள பௌஷ்கர ஸம்ஹிதை உரைக்கும். பிரம்மாண்ட புராணத்தின் 3வது பிரிவில் இத்தலம் பற்றி பேசப்படுகிறது. ஆவாகிய காமதேனு எம்பெருமானிடம் சரணடையத் தவமிருந்த தலம்.

"ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் மாலையைப் பரிசாகப் பெற்று பிருகு முனிவர், தேவேந்திரனுக்கு அம்மாலையை அளித்தார். தேவேந்திரன் அதைத்தன் யானைக்குச் சூட்ட, ஐராவதம் துதிக்கையில் சுழற்றி மிதித்தது. வெகுண்ட முனிவர் அவன் செல்வமழியச் சாபமிட்டார். இந்திரன் திருமாலிடம் பிராயச்சித்தம் கேட்க, மஹாலக்ஷ்மியும் 'ப்ருகு முனிவருக்குப் புதல்வியாக பார்கவி என்ற பெயருடன் பிறந்து வளர்ந்து வருங்கால், திருமால் என்னைத் திருமணம் செய்யவரும் க்ஷேத்திரத்தில் நீ வந்து சேவித்தால் உன் சாபம் தீரும்"என்றாள்.

பிரமனின் தலையைக் கிள்ளியதால், சாபம் பெற்ற சிவனாரின் கையில் பிரம்மகபாலம் ஒட்டியது. அக்னியைக் கொண்டு கபாலத்தைச் சுட்டு எரித்து சாம்பலாக்குமாறு சிவன் கூற, அக்னிக்கும் பிரம்மஹத்தி தோஷம் பிடித்துக் கொண்டது. அக்னியும் இத்தலத்தில் கடும் தவம்செய்து சாபம் நீங்கப் பெற்றார். இத்தலம் தேவாதிதேவர்களின் ஸ்தலமாகக் கருதப்படுகிறது.

**மூலவர்** : ஆண்டளக்கும் ஐயன், தலையின் கீழ் மரக்காலும், இடது கரத்தில் ஓலை எழுத்தாணியுடன் கிழக்கு நோக்கி பள்ளி கொண்ட திருக்கோலம்.

**தாயார்** : பார்கவி, கமலவாஸிநி, ரங்கநாயகி

**உற்சவர்** : அழகிய மணவாளன்

**விமானம்** : ப்ரணவ விமானம்

**வீருக்ஷம்** : புன்னை, பாடலி

**தீர்த்தம்** : சூர்ய தீர்த்தம், சந்திர தீர்த்தம்

**ப்ரத்யட்சம்** : காமதேனு, அக்னி, ப்ருகு முனிவர், திருமங்கை ஆழ்வார் ஆகியோர்.

***சிறப்புக்கள்:***

*1. காமதேனு தவமிருந்ததால், இத்தலத்தில் காமதேனுவுக்கும், நந்தினிக்கும் சிற்பங்கள் உண்டு.*

*2. ஸ்ரீரங்கமும் இத்திருத்தலமும் பல வகைகளில் ஒப்புமையுடையது. காவிரி ஸ்ரீரங்கத்தின் இருபுறமும் பாய்வது போல், இத்தலத்திலும் காவிரியும் கொள்ளிடமும் சூழ்ந்தோடுகிறது. ஸ்ரீரங்கத்தின் கர்ப்பக் கிருஹத்திலுள்ள திருமணத் தூண்களைப் போல் இங்கும் உள்ளது.*

*3. காஷ்மீர் மன்னனின் மகள் பிரம்மரட்சஸால் பீடிக்கப்பட்டாள். அத்துன்பம் தீர, பூமியில் புதையுண்ட இக்கோயிலின் அமைப்பை புனருத்தாரணம் பண்ணுமாறு எம்பெருமான் கனவில் பணித்தான். முன்மாதிரியே கட்டி முடித்ததும், அவ்விராஜ புத்திரியும் குணமடைந்தாள். இது போன்ற பில்லி, சூன்யாதிகளை அழிப்பதிலும் இப்பகுதி பெயர் பெற்றுள்ளது.*

*4. திருமங்கையாழ்வார் திருவரங்கத் திருமதில் கட்டும் பணியில் ஈடுபட்டு கையில் தனமின்றித் தவித்தார். எம்பெருமானிடம் வேண்ட, 'கொள்ளிடக்கரைக்கு வா' என்று பணித்தார். தலைப்பாகை அணிந்து, கையில் எழுத்தாணி, ஓலை, மரக்கால் சகிதமாய் வணிகர் தென்பட, யார் என்று வினவினார். ஸ்ரீரங்கன்*

அனுப்பினதாகக்கூறி, மரக்காலைக் காட்டினார். மனதில் எம்பெருமானை நினைத்து சரணம் சொல்லி, வேண்டிய பொருளை நினைத்தால் மரக்கால் நிறையும் என்று வணிகன் கூறினார். வேலையாட்களுக்கு கூலி தரவேண்டியிருந்ததால், வணிகனிடம் கூலி தருமாறு கேட்டார். வணிகனும், நேர்மையாக உழைத்தவருக்குப் பொன்னாகவும், சோம்பேறிகளுக்கு மணலாகவும் தெரியும் என்றார். பலருக்கும் மணலாகக் காணப்பட, கோபம் அடைந்து வணிகனைத் துரத்தினர். ஆடல்மாவில் ஏறி மங்கை மன்னனும் துரத்த திரு ஆதனூரில் புகுந்ததாக ஐதிகம்.

5. திருவரங்க விமானம் ப்ரணவாக்ருதி விமானம், ஆதனூர் விமானம் ப்ரணவ விமானம், இதிலுள்ள வாஸுதேவன் வளர்ந்து வருவதாக ஐதிகம்.

6. திருஆதனூரின் அருகிலுள்ள நரசிம்மபுரத்தில் ஸ்ரீஅஹோபில மடம் 26,30,37,38ம் பட்டம் ஜீயர்களின் பிருந்தாவனங்கள் உள்ளன.

7. இலங்கையிலிருந்து அயோத்தி செல்லும் வழியில் அனுமன் இவ்வூரில் இளைப்பாறி ஸந்தியாவந்தனம் செய்ததாக வரலாறு. வீர சுதர்சன ஆஞ்சநேயர் சிறந்த வரப்ரஸாதி.

8. திருவரங்கத்து அரங்கனைப் போல, திரு ஆதனூர் எம்பெருமானும் காணத் தெவிட்டாத பேரழகு வாய்ந்தவர்.

## 6. திருப்புள்ளம் பூதங்குடி

திருக்குடந்தைக்கு மிக அருகில் உள்ள திவ்யதேசம், திருமங்கை யாழ்வாரால் 10 பாசுரங்களால் மங்களாசாசனம் பண்ணப்பட்ட திருத்தலம். இத்திருத்தலத்தைப் பற்றி பிரம்மாண்ட புராணமும், பாத்ம புராணமும் குறிப்பிடுகின்றன.

**வரலாறு:**

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது, அவனை எதிர்த்துப் போரிட்ட ஜடாயு, இராவணனின் வாளால் இறகுகள் துண்டிக்கப்பட்டு, 'ராம ராம' என்ற முனகலுடன் கிடக்க, ஸ்ரீலக்ஷ்மணனுடன் வந்த இராமன் ஜடாயுவைக் கண்ணுற்றார். இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றதை அறிவித்து ஜடாயு உயிர் துறந்தான். இராமனும் தன் தந்தைக்குச் செய்ய இயலாது போன சரம கைங்கர்யத்தை ஜடாயுபுக்குச் செய்தான். இறுதிக்கடன் செய்யும் போது பத்தினி அருகில் இல்லாததை இராமன் நினைக்க, பூமிப்பிராட்டியே அருகிலிருந்த பொற்றாமரையில் வந்து நின்று மானசீகமாகக் காட்சி அளிக்க இராமனும் தீர்த்த கைங்கரியத்தைச் செய்து முடித்தான்.

**மூலவர்:** வல்வில் ராமன், புஜங்க சயனம், கிழக்கே திருமுக மண்டலம்.
**தாயார்:** பொற்றாமரையாள்
**விமானம்:** சோபன விமானம்
**ப்ரத்யட்சம்:** ஜடாயு (க்ருத்ர ராஜன்)

**சிறப்புக்கள்:**

1. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஜடாயுவைப் பெரிய உடையார் என்று அழைப்பர். ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் இவரைப் பெரிய தந்தையாகவே பாவித்ததால் தீர்த்த கைங்கரியம் செய்து, மனவமைதி பெற்ற தலம்.
2. ஜடாயுவாகிய புள்ளிற்கு மோட்சம் கொடுத்து அதன் பூத உடலுக்கு இறுதிக்கடன்களைச் செய்து நிறைவேற்றியதால் இத்திருத்தலம் புள்ளம்பூதங்குடியாயிற்று.
3. திருமங்கையாழ்வாருக்குத் தன்னை ஒளிவெள்ளமாகக் காட்டிக் கொடுத்த பெருமாள் "வல்வில் ராமன்".
4. இராமனின் வில்லாண்ட திறமையைக் காட்டும் "வல்வில் ராமன்" என்ற பெயர் 'த்ருடதந்வி' என்று குறிப்பிடப்படுகிறது.
5. நான்கு திருக்கரங்களுடன் சங்கு சக்ரதாரியாக சேவை சாதிக்கும் இராமன் (சயனத் திருக்கோலத்தில்) உள்ள ஸ்தலம் இது ஒன்று தான்.

### *7. திரு நந்திபுர விண்ணகரம்*

*(நாதன் கோவில், தக்ஷிண ஜகந்நாதம்)*

*திருக்குடந்தையிலிருந்து மிக அருகில் 5 கி.மீ தூரத்தில் உள்ள திவ்விய தேசம் இது.*

***மூலவர்*** : *ஜகந்நாதன், நாதநாதன், விண்ணகரப் பெருமாள், வீற்றிருந்த திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.*

***தாயார்*** : *செண்பக வல்லித் தாயார்*

***தீர்த்தம்*** : *நந்தி தீர்த்த புஷ்கரணி*

***விமானம்*** : *மந்தார விமானம்*

***ப்ரத்யட்சம்*** : *நந்தி, சிபி.*

***சிறப்புக்கள்:***

*1. நந்தி இவ்விடத்தில் தவம் செய்து சாபவிமோசனம் பெற்ற தலமாதலால் நந்திபுரம் என்றும், பகவானுக்கு நந்திநாதன் என்றும் பெயர்.*

*2. நந்திவர்மன் கட்டிய கோயில் என்றும், அவன் ஏற்படுத்திய ஊர் என்றும் இதனைக் கூறுவர்.*

*3. திருமங்கையாழ்வார் பத்துப் பாசுரங்களால் பாடியுள்ளார்.*

*4. இத்தலத்தை 'நந்திபணிசெய்த நகர்' என்று திருமங்கையாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.*

*5. சிபிச் சக்ரவர்த்தி தன் உயிரை விட்டு, புறாவின் உயிரைக் காக்க, தராசுத் தட்டில் தன் மாமிசத்தை வைத்து சமம் ஆகாமல் இருக்க, தானே புறாவின் எடைக்கு சமமாக எதிர்த்தட்டில் அமர்ந்த அதிசயத்தைக் காண, கிழக்கு நோக்கி இருந்த பெருமாள் மேற்கு முகமாக ஆனார்.*

*6. இச் சந்நிதி வானமாமலை மடத்து ஆதீனத்தில் உள்ளது.*

### *8.திருவெள்ளியங்குடி*

*திருக்குடந்தையிலிருந்து அணைக்கரை செல்லும் வழியில் சேங்கனூரில் இருந்து 1 கி.மீ. நடக்க திருவெள்ளியங்குடி திவ்விய தேசத்தை அடையலாம்.*

**மூலவர்** : கோலவில்லி ராமன், புஜங்க சயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்** : ச்ருங்கார ஸுந்தரன்(மனங்கவரும் வடிவழகன்).

**தயார்** : மரகத வல்லி

**தீர்த்தம்** : சுக்ர தீர்த்தம், ப்ரஹ்ம தீர்த்தம், இந்திர தீர்த்தம், பராசர தீர்த்தம்.

**தல விருட்சம்:** வாழை

**விமானம்:** புஷ்கலாவர்த்தக விமானம்.

**ப்ரத்யட்சம்:** சுக்ரன், ப்ரஹ்மா, இந்த்ரன், பராசரர், மயன், மார்கண்டேயர், பூமிதேவி

*சிறப்புக்கள்:*

1. திருமங்கையாழ்வார் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.
2. கிருதயுகத்தில் பிரம்ம புத்திரம் என்றும், திரேதா யுகத்தில் பராசுரம் என்றும், துவாபர யுகத்தில் சைந்திர நகரம் என்றும், கலியுகத்தில் பார்கவ புரம் என்றும் பெயர்.
3. கருடாழ்வார் நான்கு திருக்கரங்களுடன், சங்க சக்ரங்களுடன் காட்சியளிக்கிறார்.
4. கருங்கல் தரையில் செவ்வாழை வருடத்திற்கு ஒருமுறை குலை தள்ளி, வாழையடி வாழையாக வளர்வது சிறப்பு .
5. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை பிறந்த ஊரான சேங்கனூர், இத்தலத்திற்கு மிக அருகிலுள்ளது.
6. நவகிரகங்களுக்கு நடுநாயகமாகத் திகழ்கிறது இத்தலம்.
   சூரியன்:சூரியனார்கோவில் வியாழன்:ஆலங்குடி
   சந்திரன்:திருவிந்தளூர் சுக்கிரன்:திருவெள்ளியங்குடி
   செவ்வாய்:வைத்தீச்வரன்கோயில் சனி:திருநள்ளாறு
   புதன்:திருவெண்காடு ராகு,கேது:திருவாஞ்சியம்
7. ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதிகள் தங்கியிருந்து திருப்பணிகள் செய்த திருத்தலம்.

**9. திருக் கண்ணன் கவித்தலம்**

கூற்றமும் சாரா, கொடுவினையும் சாரா, தீ
மாற்றமும் சாரா, வகையறிந்தேன் - ஆற்றங்
கரைக் கிடக்கும் கண்ணன் கடல் கிடக்கும், மாயன்
உரைக் கிடக்கும் உள்ளத் தெனக்கு.

என்று, இத்தலத்தில் பள்ளி கொண்ட பெருமாளை 'ஆற்றங்கரைக் கிடக்கும் கண்ணன்' என்று திருமழிசையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

தஞ்சையிலிருந்து திருவையாறு வழியாக திருக்குடந்தை செல்லும் பாதையில் இத்தலம் உள்ளது. இந்த்ரத்யும்னன் என்ற மன்னன் திருமால் பக்தியில் திளைத்து பல காலம் ஆராதித்தபடி இருந்தான். அவனைக்காண வந்த துர்வாசர், பொறுக்க முடியாமல், கோபாவேசமாக 'விலங்குகளிலேயே மதம் பிடித்த யானையாகக் கடவாய்' என்று சாபமிட்டார். மன்னன் நிலையுணர்ந்து சாப விமோசனம் வேண்டினான். முதலையால் கவ்வப்பட்டு பெருமாளால் மோக்ஷம் கிடைக்கும் என்று வரமருளினார்.

ஹூஹூ என்பவன் நீரில் மூழ்கிக் குளிப்போரின் காலைப் பிடித்து இழுத்து துன்புறுத்தினான். அகத்தியரின் காலையும் பிடித்திழுக்க, முதலையாகுமாறு அவனைச் சபித்தார். அவனும் சாப விமோசனம் வேண்டியபோது, "நீ கஜேந்திரன் என்ற யானையின் காலைப் பிடித்திழுக்கும் போது, திருமாலின் சக்ராயுதம் பட்டு சாப விமோசனம் உண்டாகும்" என்றார். விஷ்ணு புராணத்திலுள்ள இந்த நிகழ்ச்சி, கண்ணன்கவித்தலம் கோயிலின் முன்புள்ள திருக்குளத்தில் நடந்ததாக வரலாறு.

**மூலவர்** : கஜேந்திர வரதன், புஜங்க சயனம், கிழக்கே திருமுகமண்டலம்.

**தாயார்** : ரமாமணிவல்லி (பொற்றாமரையாள்)

**தீர்த்தம்** : கஜேந்திர புஷ்கரணி, கபில தீர்த்தம்

**விமானம்** : ககநாக்ருதிவிமானம்

**ப்ரத்யட்சம்** : கஜேந்திரன் என்ற இந்த்ரத்யும்னன். முதலையாய் இருந்த ஹூஹூ.

*சிறப்புக்கள்:*

*1. 108 திவ்ய தேசங்களில் இரு பிராணிகளுக்கு காட்சி கொடுத்தது இத்தலத்தில் மட்டுமே.*

*2. மிகவும் தொன்மையான க்ஷேத்ரம்*

*3. 'ஆற்றங்கரைக் கிடக்கும் கண்ணன்' என்று திருமழிசை ஆழ்வார் அருளிய திருநாமமே வழங்கப்படுகிறது.*

### *10. ஆடுதுறைப் பெருமாள் கோயில் எனும் திருக்கூடலூர்*

*தாம் தம் பெருமை யறியார், தூது*
*வேந்தர்க் காய வேந்த ரூர்போல்*
*காந்தள் விரல் மென் கலை நன் மடவார்*
*கூந்தல் கமழும் - கூடலூரே.*

*(பெரிய திருமொழி , 5.2.1)*

*என்றபடி, திருமங்கையாழ்வாரால் பத்து பாசுரங்களால் பாடப்பெற்ற இத்திவ்விய தேசம், தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றிலிருந்து கும்பகோணம் செல்லும் பாதையில் உள்ளது. சிறிய கிராமம். இங்கு பெருமாளை எழுந்தருளச் செய்தமையால் ஆடுதுறைப் பெருமாள் கோயில் என்று வழங்கப்படுகிறது.*

*இத்தலத்தை பிரம்மாண்ட புராணம், பாத்ம புராணம், வடமொழியில் உள்ள கூடற் புராணம் - ஆகியவை நன்கு விளக்குகின்றன. திருமால் வராஹ அவதாரம் எடுத்துப் பூமிக்குள் புகுந்தது இந்த இடம் என்று புராணங்கள் உரைக்கின்றன. அம்பரீஷன் விஷயமாகக் கோபம் கொண்ட துர்வாஸர் மீது ஏவப்பட்ட சக்கரத்தாழ்வாரைத் திரும்பப் பெற்ற மஹாவிஷ்ணு, துர்வாஸரை மன்னித்தது இத்தலத்திலே. அம்பரீஷனுக்கு அருளியதால் அம்பரீஷ வரதரென்றும், வையம் காத்த பெருமாளென்றும் பெருமாளுக்குத் திருநாமம்.*

*முன்பொருகால், காவிரியில் பெரு வெள்ளம் ஏற்பட்டு, இக்கோயில் இருந்த இடம் தெரியாமல் மண்மேடாகியது. மூலவரும், உற்சவரும், தாயாரும் இதர விக்ரஹங்களும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு மீனவச் சேரியில் பதிந்தன. ராணி மங்கம்மாள் என்னும் ஒரு*

மஹாராணியின் கனவில் எம்பெருமான் எழுந்தருளி, தனக்குக் கோயில் கட்டுமாறு பணித்தான். இப்போதுள்ள கோவில் ராணியால் கட்டப்பட்டது. சிறப்பாக வழிப்பாடுகள் நடைபெற்றன. ஆனால் தற் சமயம் இத்திருத்தலக்கோவில் எப்பொலிவுமின்றி, பராமரிப்பும் இன்றி முடங்கியுள்ளது.

மூலவர் : வையம் காத்த பெருமாள் (ஜெகத்ரட்சகன்), உய்யவந்தார், கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

தாயார் : பத்மாசனி, புஷ்பவல்லி

தீர்த்தம் : சக்கர தீர்த்தம், இந்திர தீர்த்தம், காவேரி நதி

விமானம் : சுத்த ஸத்துவம் விமானம்

ப்ரத்யட்சம் : அம்பரீஷன், நந்தக முனிவர், காவேரி

சிறப்புக்கள்:

1. நந்தக முனிவரோடு தேவர்கள் கூட்டமாய் வந்து வழிபட்டதால் கூடலூர் என்று பெயர்.
2. காவேரி தவம் செய்து பெருமாளை வழிபட்டு தன் பாவம் தீர்க்கப்பட்ட இடம்.
3. கோயிலின் முன் கூத்தாடும் பாவனையில் ஆஞ்சநேயருக்கு ஒரு சன்னிதி உள்ளது.
4. திருமங்கையாழ்வார், வராஹரூபத்தில் பெருமாள் இத்தலத்தில் நுழைந்து புகுந்ததை, 'புகுந்தானூர்' என்றே குறிப்பிடுகிறார்.

# முடிவுரை

வையகத்துள் நிலவும் பல்வேறு சமயங்களுள் உன்னதமாயும் சிறப்பு மிக்கதாயும் விளங்குவது ஸ்ரீவைஷ்ணவ சமயமாகும். மிகவும் தொன்மை வாய்ந்ததும், தெய்வீகத் தன்மையுடையதுமான இச்சமயத்தின் தோற்றம் காலவரம்பற்றது, மற்றும் உரைப்பதற்கு அரியது. உலக சிருஷ்டிக்காக நான்முகனைப் படைத்த பரம்பொருள் ஸ்ரீமன்-நாராயணன் உலக மக்களின் நன்மைக்காகவும் மேன்மைக்காகவும் வேண்டி ஸ்ரீவைஷ்ணவ சமயத்தைக் காட்டியருளினான்.

இக்காலத்தில் புவியெங்கும் பரவியுள்ள பல்வேறு மதங்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அறிஞர் பெரு மக்களாலும், தீர்க்க தரிசி களாலும் (தொலை நோக்குடையவர்களாலும்) தோற்றுவிக்கப்பட்டன. ஆயினும், ஸ்ரீவைஷ்ணவ சமயம் அவ்வாறின்றி, எல்லாம் வல்ல இறைவன்(அகடிதகடநா சாமர்த்தியம் கொண்டவன்) ஸ்ரீமந் நாராயணனின் பெருங்கருணையால், பலப்பல யுகங்களுக்கு முன்னமேயே, அதாவது லக்ஷக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் இவ்வுலகம் தோன்றிய நாளிலிருந்து நிலவும் தெய்வீக சமயமாகும்.

கோடிக்கணக்கான உயிர்களின் வளமான வாழ்விற்கும் சிறப்பிற்கு மென்றே இந்நாள்வரை தோன்றிய எண்ணற்ற சமயங்களுள் பல காலப் போக்கில் ஏற்பட்ட இயற்கை விளைவுகளுக்கும், பயங்கர போராட்டங் களுக்கும் எதிர்ப்புகளுக்கும் ஆளாகி அழிந்து போய்விட்டபோதிலும் கூட, ஸ்ரீ வைஷ்ணவ சமயம் பல யுகாந்தரங்களாக துருவர், பிரஹ்லாதர் போன்ற பரம பாகவதோத்தமர்களாலும், நாரதர், வசிஷ்டர், பராசரர், வியாசர் முதலான முனிசிரேஷ்டர்களாலும், போற்றப்பட்டு வந்தமையால் அழியாது நிலைத்திருப்பது கண்கூடாகும். மஹாத்மாக்களாலும், மாதவத்தோர்களாலும் வளர்க்கப்பட்டதும், தொன்று தொட்டே பெருமைவாய்ந்ததுமான ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தின் சீர்மையைத் தங்கள்

அரிய பாசுரங்களால் தமிழகமெங்கும் தழைத்தோங்கும்படிச் செய்த பெருமை ஆழ்வார்கள் பன்னிருவரைச்சாரும் என்பது சரித்திரம் கூறும் உண்மையாகும்.

ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் சிறப்பினையும், தொன்மையையும் தமிழகத்தில் மட்டுமின்றி பாரதநாடெங்கும் பரப்ப அரும்பாடு பட்டவர் ஸ்ரீபகவத் ராமானுஜர் ஆவார். லக்ஷ்மீநாதன் (திருமகள் கேள்வன்) தொடங்கி, நான்முகன், பல மஹரிஷிகள், வியாசர், போதாயனர் முதலிய பெரியோர்களால் வளர்க்கப்பட்டு ஸ்ரீராமானுஜர் வரை வந்த ஸ்ரீவைஷ்ணவ சமயம், விசிஷ்டாத்வைத தத்துவம் என்னும் பெயர் பெற்று விளங்குகின்றது. இவ்விரண்டையும் இணைத்துப் போஷித்து வளர்த்தார் ஸ்ரீராமானுஜர். இவ்விரண்டு நதிகளுமே எம்பெருமானாராகிய ஏரியில் வந்து, தேங்கி, அங்கிருந்து உலக மக்களாகிய பயிர்களுக்குப் பாய்ந்து, இன்றளவும் பயன்பட்டு வருகின்றனது. பூலோக வைகுண்டம் என வழங்கப்படும் ஸ்ரீரங்கத்து செல்வமனைத்தையும் திருத்தி வளர்த்தவர் ஸ்ரீராமாநுஜர் (யதிராஜர்). பலப் பல கோயில்களையும், திருக் குளங்களையும் கட்டிக் காத்துப் பராமரித்ததோடு, அனைவரும் வைணவர்களே என்ற கருத்தை நன்கு புரிந்து கொள்ளச் செய்தவரும் இம்மஹானாகிய யதிச்ரேஷ்டரே. விஷ்ணு இல்லாத இடம், பொருள் என்று ஒன்று இல்லாததால் உலகில் உள்ள அனைத்துச் சேதன அசேதனங்களும் (உயிர்களும், பொருள்களும்) விஷ்ணுவினால் நிறைந்தவை. விஷ்ணுவினால் பாதுகாக்கப்படுகின்றன. அவராலேயே தாங்கப்படுகின்றன, இயக்கப்படுகின்றன. இவ்வாறு, இத்தகைய அடிப்படைக் கொள்கைகளைப் பாமரனும் அறியும்படி அருளிச் செய்தும், தன் வாழ்நாளில் வாழ்ந்து காட்டியும், சிறந்த முன்னுதாரண மாகவே திகழ்ந்தவர் அவர்.

அவர் "அகில புவன ஜன்ம ஸ்தேம பங்காதி லீலே" எனத் தொடங்குகின்ற ஸ்ரீபாஷ்ய மங்கள சுலோகத்தில் எம்பெருமானை, அடைய பக்தி ஒன்றே சிறந்த மார்க்கம் என்று "சேமுஷீ பக்திரூபா" எனக் காட்டினார். பரமத பங்கம் செய்து, தம் சிந்தாந்தத்தை நிலை நிறுத்தவும் பொதுவில் அனைவருக்கும் காட்டிய மார்க்கம் பக்தி மார்க்கம். தன்னைச் சேர்ந்த அடியார்களுக்கு, அந்தரங்கமான வழிகாட்டியாக இருந்து,

வருடத்தின் மிகச் சிறந்த நாளான பங்குனி உத்திரத்தில் திருவரங்கத்து எம்பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியில், "கத்ய த்ரயம்"என்னும் உயர்ந்த வடமொழி நூல் மூலம் விண்ணப்பித்துக் காட்டியது சரணாகதி என்ற மிக உத்தமமான மார்கமாகும்.

குறி என்றும் நெறி என்றும் ஒரு வழக்கு உண்டு தமிழில், 'குறி' என்ற சொல் அடைய வேண்டியதைக் காட்டுகிறது. அதாவது இலக்கு அல்லது பேறு. ஆறு என்றும் வழங்கும் 'நெறி' என்பது வழி - இலக்கை அடைய நாம் கடைப்பிடிக்க வேண்டிய சிறந்த வழி. சம்பிரதாயத்தில் 'குறி' என்பது திருநாடு சென்றடைவதையும், அங்கு ஸ்ரீமந்நாராயணனுக்குத் தொண்டு செய்வதையும் உணர்த்தும். நெறி என்பது அப்பேரின்ப நிலையை அடைவதற்குரிய பாங்கான முறையான சரணாகதியை உணர்த்தும்.

சரணாகதியே மற்ற வழிகளை விட எளிதானது என்றும் உடன் பயன் தர வல்லது என்றும் வேதாந்த நூல்களிலும், பின்பு வந்த அறநூல்களிலும் வலியுறுத்தப்பட்டதாயினும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலே காட்டப்பட்ட கருத்துகள் மிக எளிமையாகவும், ஈரச் சொல்லாகவும் ஞானம் கனிந்த முழுநலமாகவும் காணப்படுகின்றன. ஆழ்வார்களின் பாடல்கள் அமுத மாரியாக, வாடின பயிருக்கு உயிர் தரும் வான்நீர் போல, பிறப்பு - இறப்புச்சுழலாகிய ஸம்ஸாரம் எனும் பெருந்தீயில் அகப்பட்டு அல்லலுறும் ஆன்மாக்களின் தாபத்தைப் போக்கி குளிர்விப்பனவாக உள்ளன.

எம்பெருமானை கண்ணுக்கு இனியன், அக்காரக்கனி என்றெல்லாம் ஆழ்வார்கள் பாடினர். ஸ்ரீ கோதை நாச்சியார், "மனத்துக்கினியான்" என்று எம்பெருமானைப் போற்றியுள்ளாள். மாறாக் காதல் கொண்டு மயங்க வைக்கும் எம்பெருமானை, நற்குணங்களின் உறைவிடம், குணக்கடல் என்றெல்லாம் நம் பூர்வாசார்யர்கள் போற்றியுள்ளனர். "மேன்மையும் நீர்மையும் வடிவழகும் கூடிய பசுங் கூட்டமாயிற்று பரத்துவம்" என்பது வியாக்கியானம்.

ஸ்ரீவைகுண்டம் என்னும் பரமபதத்தில் அமர்ந்த திருக்கோலத்துடன் பரமபதநாதனாக, பரந்தாமனாக ஸ்ரீதேவி,பூதேவி, நீளாதேவி ஆகியோர்

புடை சூழ்ந்து இருக்க, நித்யஸூரிகள் ஸதா பார்த்துக் கொண்டு ஸேவித்திருக்க, நித்யர்களும் முக்தர்களும் 'ஹாவு ஹாவு' என்ற ஸாம கான இன்னிசை எழுப்ப, இருக்கும் நிலை, எம்பெருமானின் பரத்துவம்.

தன்னை வியூகப்படுத்தி, அரவினணை மேல் அரவிந்தப் பாவையான திருமாமகள் சேவடிபிடிக்க திருப்பாற்கடலில் அனந்த சயனனாக, கிடந்த திருக்கோலத்துடன் இருப்பது எம்பெருமானின் அடுத்த நிலை. தேவர்கள் அபயக்குரல் எழுப்பும் போதும் லோகத்தில் ஸாதுபரித்ராணம், துஷ்ட நிக்ரஹம் பண்ண வேண்டிய கட்டாயம் ஏற்படும் போதும், க்ஷீராப்தி நாதனாக மந்திர த்ரஷ்டாக்களான ரிஷிகளும் போற்றும்படி எழுந்தருளி இருக்கும் நிலை வியூகநிலை. இன்ன காலத்தில் இன்னவருக்கு இன்ன தேசத்தில், இப்படிப்பட்ட துன்பம் களையத் தான் இன்ன தோற்றத்தில் அவதாரம் செய்ய சங்கல்பித்து இருப்பதைத் தெரிவித்து, பொதுமக்களின் மனத்தில் ஆறுதலையும், எதிர்பார்ப்பையும் தருவிக்கும் நிலை "அவதாரங்கள்" என்னும் விபவ நிலை.

அடியார்களை உய்விக்க, விபவ அவதாரங்களை முன்பு ஏற்றுக்கொண்டு, தோன்றிய எம்பெருமான் இக்கலியுகத்தில், அர்ச்சாவதாரமாகத் திருக்கோயில்களில் நின்ற திருக்கோலத்தில் ஸித்தோபாயமாகக் காட்சி அளிப்பது எளிமையின் எல்லை நிலம்.

யசோதையின் கயிற்றுக் கட்டுண்டு நின்ற காட்சியை எளிமைக்கும், மூவுலகும் இருள் தீர நடந்தமையை நீர்மைக்கும், இராமனாய் அவதாரம் செய்து இலங்கையைக் கட்டழித்த நீர்மையை செம்மைக்கும், பாண்டவர்கட்காகத் தூது நடந்து சென்றதை பரிவுக்கும், அமரர்கள் தொழுதேத்த நிற்கும் தன்மையை தலைமைக்கும் பூர்வாசார்யர்கள் உதாரணமாகக் காட்டுவர்.

ஸ்வாமித்துவம், வாத்ஸல்யம் (பரிவு), சௌசீல்யம் (நீர்மை), சௌலப்யம் (எளிமை) என்ற இந்நான்கும் குண சதுஷ்டயம் என்று வழங்கப்படும். இவையே எம்பெருமானின் அவதாரங்களுக்கு மூலகாரணம் எனலாம். இவற்றோடு ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்ய, சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்களும் சேர்ந்து பகவான் என்ற பதத்திற்கு அறு

குணங்களுடையவன் என்ற பொருளைக் காட்டுகிறது. "ஆர்ஜவம் என்ற நேர்மை" குணம் எம்பெருமானுக்கே உள்ள அசாதாரணமான குணம். மனோ, வாக், காயத்தினால் ஒருபடி பட்டிருத்தல் என்பது பொருள்,எதை நினைக்கிறானோ, அதையே பேசி, அதையே செய்பவன் நேர்மையாளனாகிறான். பிரக்ருதியின் முக்குணக் கலப்பினால் அதனோடு தொடர்புடைய காலம் வரை 'கரணத்ரய சக்தி' என்பதில் லயிப்பது மிகவும் அரிது.

இவ்வளவே எம்பெருமானின் குணங்களா? என்று அளவிட்டு அறியமுடியாதபடி எண்ணற்கரியன் அவன். எண்ணிலும் வருபவன் அவன், அனந்த கல்யாண குணங்களை உடையவன். குண பரிபூர்ணனான நம்பி, பரமபதத்தில் உள்ள பரிபூரணத்துவத்தோடே, விபவ அவதாரங்களிலம், அர்ச்சைத் திருமேனியோடு கோயில்களிலும் எழுந்தருளியுள்ளான். அங்கும் எம்பெருமானுக்கு குண பூர்த்தி உண்டு. இந்த லீலாவிபூதியில் எப்பெயர் கொண்டும், எந்த தேசத்திலும், எந்த வஸ்துவிலும் எம்பெருமான் எழுந்தருளி இருப்பதாக எவன் நெஞ்சினால் நினைக்கிறானோ, அதன்படியே எம்பெருமான் ஆகிறான். ஆகவே, உட்கண்ணால் காணமுடியாத பரமபத நாதனை, புறக் கண்ணால் கண்டு அனுபவிக்கும் படி, பலவாகி பரந்தும் நிறைந்தும் உள்ளான்.

அந்தந்த தேசாசாரத்தின்படி வழிபாட்டு முறைகள், அனுட்டானங்கள் மாறி இருக்குமே ஒழிய, எம்பெருமானின் கல்யாண குணங்கள் எங்கும் நிறைந்தே ஒன்று போலவே இருக்கும். இந்தியாவில் தொன்மையான ஒரு காலத்தில் வராஹ அவதார வழிபாடுகள் மட்டும் அதிகமாக இருந்ததென்று உணர முடிகிறது. அதாவது ஸ்ரீராம, கிருஷ்ண, விபவத்தில் - அவதாரங்களாக எம்பெருமான் மானிட ரூபத்தில் தோன்றுவதற்கு முன்பு உண்டான மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ம அவதாரங்களில் வராஹ அவதார வழிபாடு மட்டுமே இந்தியா முழுவதும் மேன்மை யுற்றிருந்தது.

திருமலை, திருக்கடன்மல்லை, திருவிடவெந்தை, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகியன வராஹத் தலங்களேயாகும். அதாவது இங்கெல்லாம் தற்போதுள்ள அமைப்பிலான ஸ்தலங்கள் கட்டப் படுவதற்கு முன்பு

வராஹ மூர்த்திகளும், வராஹ வழிபாடு மட்டுமே இருந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே தொன்றுதொட்டு பாரதத்தில் வைஷ்ணவம் தான் பரவி, விரவியிருந்தது என்பதையும் எளிதில் உணரலாம். ஒவ்வொரு ஜீவாத்மாவின் உள்ளிருந்தும் அதைத்தாங்கி அந்தர்யாமியாக - மறைமுகமாக, பூமியினுள் உள்ள நிலத்தடி நீர் போல வெளியே ப்ரத்யக்ஷமாகக் கண்ணால் பார்க்கமுடியாத நிலையில் நம் உள்ளே, உள்ளுக்குள் உணர்வாய், உணர்வுக்குள் உயிராய் தன்சக்தியைக் காட்டுகிறான் எம்பெருமான். ஞானிகளாலும், சிறந்த பக்தர்களாலும் இனிய இந்த அனுபவம் உணரப்படும். ஆனால் சாமான்யர்கள் பரம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்னுமிவைகளை கண்ணால் நேராகக் காணாமல், கருத்தால் அணுக முடியாமல் நாத்திகவாதிகளாகவோ அன்றி நாத்திகம் கலந்த ஆத்திகவாதிகாளவோ விளங்குவர். பரமபதம் சென்று, கண்டு வந்து சொன்னவர் எவருமில்லை. சென்றவர் எவரும் திரும்பியதில்லை. எம்பெருமானும் எளிதில் எவருக்கும் அளிப்பதுமில்லை. பரமபத வாழ்வை அனுபவிக்கும் நித்திய சூரிகளுமல்ல நாம். வியூகத்தைக் கண்டு அதிசயிக்க நாம் தேவர்களுமல்ல, விபவ அவதாரங்கள் நிகழ்ந்த காலக் கட்டத்தில் நாம் எப்படிப்பட்ட பிறவிகளாக எந்த சூழலில் இருந்தோம் என்பதை அந்தர்யாமியாய் இருப்பதை அறியும் ஆற்றலும் நமக்கு இல்லை. எனவே ஒருவன், இறையன்புடையவனாய், தங்கம், வெள்ளி, மரம், கல், சாளக்கிராமம் முதலிய பொருட்களில் ஏதேனுமொரு கருப் பொருளில் தன் மனதிற்கு உகந்தவாறும், சாத்திரங்களில் கூறிய முறை வழுவாமலும் ஒரு உருவத்தை பிரதிஷ்டை செய்து வழிபடும் முறைக்கு அருச்சை அல்லது அர்ச்சாவதார வழிபாடு என்று பெயர். இதுவே விக்கிரக ஆராதனை அல்லது உருவ வழிபாடு என்று வழங்கப்படுகிறது.

மனிதர்கள் தம் முயற்சியால் செய்யாமல், எம்பெருமான் தானே, பக்தர்களின் வேண்டுகோளுக்காக உகந்து, அருச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளியதுண்டு. பக்தர்கள் விரும்பிய உருவங்களில் இந்த அர்ச்சா வடிவங்களில் எம்பெருமான் தன்னை வெளிக்காட்டியதுண்டு. கலியுகத்தில் அனுட்டானங்களும், இணை உணர்வும் குறைந்திருக்கும் நிலையில், அருச்சை போன்று எளிதாக எம்பெருமானை வழிபடும் இடம் வேறெதுவுமில்லை. நம் உள்ளத்தில் பக்தி என்னும் ஆசை வளர்ந்து,

எம்பெருமான் திருவடிகளே தஞ்சம் என்று அடைக்கலம் புகுந்து உய்யும் ஆறாக திருக்கோயில்கள் உள்ளன.

"புகல் ஒன்றில்லா அடியேன் நின்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"[1] என்ற ஆழ்வார் திருவாய்மொழிப்படி நமக்கு அடைக்கலம் திருவடியிணைகளே! முக்தி அடைந்தவன் பரமபதத்தில் இருந்தபடி பரந்தாமனை அனுபவித்துக் கொண்டு, ஆனந்த ஸாகரத்தில் மூழ்கியிருப்பான். கொள்ளமாளாத இன்பவெள்ளம் அவனது அநுபவம். பூலோகத்தில் நித்ய சேவை சாதிக்கும் திருமலையப்பனையோ, திருக்குடந்தை ஆராவமுதனையோ, துவாரகாநாதனையோ, அரங்கநகரப்பனையோ நித்தியஸூரிகள் சேவிக்க எண்ணினால், இயலாது. பெரியாழ்வார் "போயினால் பின்னை இத்திசைக்கென்றும் பிணை கொடுக்கிலும் போக ஒட்டாரே"[2] என்று இக்கருத்தைக் குறிப்பிடுகிறார்.

அதாவது பரமபதத்தில் இருக்கும் முக்தனை எம்பெருமான் போகவிடுவதில்லை. பூவுலகில் இருப்போருக்கு அருச்சையில் சேவை தந்தருளும் திருமாலையன்றி வேறு அடைக்கலமில்லை. எனவே அர்ச்சாவதாரமே நம்மை எம்பெருமானிடம் நெருக்கிக் கொண்டு சென்று பரமபதத்தில் முக்தர்களில் ஒருவனாக ஆக்கும். நம்மை உய்விக்கும் பொருட்டே எம்பெருமான், நின்றநிலை, இருந்தநிலை, கிடந்தநிலை என்றும் இன்னும் வேறு நிலைகளிலும் காட்சியளித்தவாறும், விபவ அவதாரத்தில் தான் தோன்றிய அதே உருவத்தோடு இப்போதும் விக்ரஹ ரூபத்தில் காணக் கிடைக்கிறான்.

ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட கோயில்களே திவ்யதேசங்கள் என வழங்கப்படுகின்றன. இந்நில உலகில் உள்ளவை 106 திவ்விய தேசங்கள். இவற்றில் எம்பெருமானைச் சேவித்த பின், எம்பெருமானே மீதமுள்ள இரு திவ்விய தேசங்களான திருப்பாற்கடலுக்கும், திருநாட்டுக்கும் அழைத்துச் சென்று சேவை தந்தருளுகிறான் என்பது நமது வைணவ ஸம்ப்ரதாய சித்தாந்தம்.

1. திருவாய்மொழி, 6.10.10.

2. பெரியாழ்வார் திருமொழி, 4.5.2.

ஆழ்வார்கள் பன்னிருவருள், மதுரகவியாழ்வார் மட்டும் எம் பெருமானை, நேரிடையாக மங்களாசாசனம் செய்யாமல், அப் பெருமானையே ஸதா மங்களாசாசனம் செய்த நம்மாழ்வாரையே ஏத்தி, "தேவு மற்றறியேன்"[1] என்றபடி, சத்ருக்னன் படியில் வாழ்ந்து காட்டியவர். "த்வத்தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:" என்ற ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதம் 18ம் ஸ்லோகமும் "தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என்ற ஸ்வாமி தேசிகனின் அதிகார ஸங்கிரஹமும் இக்கருத்தையே எடுத்துரைக்கின்றன.

ஆழ்வார்கள் பதினொருவரால் மங்களாசாசனம் பண்ணப்பட்ட ஸ்தலம் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம் மட்டுமே.

ஆழ்வார்கள் பதின்மர் மங்களாசாசனம் செய்தது: 2 திவ்விய தேசங்கள் -- திருவேங்கடமும் திருப்பாற்கடலும்.

ஆழ்வார்கள் எண்மர் மங்களாசாசனம் செய்த ஸ்தலம் - பரமபதம்.

ஆழ்வார்கள் எழுவர் மங்களாசாசனம் செய்த ஒரே ஸ்தலம் திருக்குடந்தை என்னும் கும்பகோணம்.

ஆழ்வார்கள் அறுவர் மங்களாசாசனம் செய்த தலம்:
திருமாலிருஞ்சோலை என்னும் அழகர் கோயில்.
ஆழ்வார்கள் ஐவரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட தலங்கள் - 6
ஆழ்வார்கள் நால்வர் மங்களாசாசனம் செய்த தலங்கள் - 3
ஆழ்வார்கள் மூவர் மங்களாசாசனம் செய்த தலங்கள் - 5
இருஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த தலங்கள்: 21
ஒரு ஆழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட தலங்களின் எண்ணிக்கை : 67

ஆக மொத்தம் 108 திவ்விய தேசங்களை ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

---

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு, 2.

108 திவ்விய தேசங்களில் நின்ற திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களின் எண்ணிக்கையே அதிகமாகும். எம்பெருமானின் நின்ற திருக்கோலம் உள்ள 67 ஸ்தலங்களின் பகுப்பு:

அ. கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 39

ஆ. மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 12

இ. தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 14

ஈ. வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 2

அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள திவ்விய தேசங்களின் எண்ணிக்கை: 17

அ. கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 13

ஆ. மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 3

இ. தெற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - இல்லை

ஈ. வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 1

சயனத் திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்களின் எண்ணிக்கை: 24

அ. கிழக்கு திசை நோக்கிய சயன திருக்கோலம் - 39

ஆ. மேற்கு நோக்கிய சயன திருக்கோலம் - 18

இ. தெற்கு நோக்கிய சயன திருக்கோலம் - 3

ஈ. வடக்கு நோக்கிய சயன திருக்கோலம் - இல்லை

பொதுவாகத் திசையைக் குறிக்குமிடத்து, அவை மூலவர் நோக்கியுள்ள திசையையே குறிப்பதாகும். மூலவர் எந்தெந்த ஸ்தலத்தில் எத்திசை நோக்கியுள்ளாரோ, அதன்படி மேற்கண்ட கணக்கீடு காட்டப்பட்டுள்ளது.

ஒரே சன்னிதியில் நின்ற, இருந்த, மற்றும் கிடந்த என்ற மூன்று திருக்கோலங்கள் உண்டு. அவ்வாறு அமையப்பெற்ற ஸ்தலங்களுக்குத் திருநீர்மலை, திருக்கோட்டியூர், மதுரை கூடலழகர், திருவல்லிக்கேணி முதலிய திவ்யதேசங்களை உதாரணமாகக் கூறலாம்.

பொதுவாக, ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவது நம் மனத்தை அமைதியுறச் செய்ய உதவுகிறது. பலவித ஈர்ப்புகளினால் கவரப்பட்ட மனம், பலமான அழுத்தங்களுக்கு ஆட்படுகிறது. கோவிலின் பெரிய

கோபுரமும், பரந்த வானமும், அதன் வண்ணச் சேர்த்தியும் காணுபவனின் அகவாயுள் நுழைகிறது. கண்ணும் மனமும் தன்னையுமறியாமல் குழப்பங்களில் இருந்து விடுபடுகிறது. கோபுரத்தில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்களின் அழகில் ஈடுபட்டு, அதைத் தொடர்ந்த புராணக் காட்சிகளில் ஊடுருவி அப்படியே எம்பெருமானின் திவ்விய கல்யாண குணங்களிலும், அவனுடைய எண்ணிறந்த திவ்விய (அஸாதாரண) சேஷ்டிதங்களையும் அசைபோட ஆரம்பிக்கிறது. இதுவே அவன் திவ்விய மங்கள விக்கிரகத்தை ரசித்துப் பார்க்கும் நிலைக்கு நம் மனத்தைத் ஏவுகிறது. எம்பெரு மானுடைய சுபாச்ரயத்திருமேனியை சேவிக்கப் பழகிய கண்ணும் மனமும், உலகியல் விஷயங்களில் (விஷயாந்தரங்களில்) ஈடுபடுவது குறைந்து விடுகிறது. ஆலய வழிபாட்டுமுறையை அறிந்து சேவிப்பது இன்னும் நம் நிலையை உயர்த்துகிறது.

**ஆலய வழிபாட்டு முறை:**

பாஞ்சராத்திர ஆகமத்தில் குறிப்பிட்டுள்ள படி: (பண்டிதர் ஸ்ரீராமன் பட்டாச்சாரியார் ஸ்வாமி தொகுத்து உதவிய குறிப்புகள்)

1. அவரவர் ஸம்ப்ரதாயப்படி துணிகளை அணிந்து நெற்றியில் விதிப்படி திருநாமம் தரித்துக்கொண்டு பெருமாள் கோவிலுக்குச் செல்ல வேண்டும்.
2. கை, கால்களை சுத்தமாக அலம்பிக்கொண்டு, த்வஜஸ்தம்பத்தின் அடியில் பலிபீடம் இருந்தால், அதற்கு முன்பாக ஸாஷ்டாங்க ப்ரணாமம் செய்ய வேண்டும்.

பாஞ்சராத்ரம் சொல்லியபடி:

*பத்ப்யாம் கராப்யாம் ஜானுப்யாம் மனஸா ச தியா ததா।*
*அஹங்காரேண சாத்மானம் நிபத்ய தரணீதலே॥*

கை, கால்கள், முழங்கால், மனம், புத்தி இவைகளை நன்றாகத் தரையில் படும்படி, அஹங்காரம் துளியுமில்லாமல் பூமியில் விழுந்து தொழுவதே ஸாஷ்டாங்க ப்ரணாமமாகும்.

3. சேவித்த பிறகு, மூன்று முறை தன்னுடைய ஆசார்யனைத் தியானித்து அவர் தனியனைச் சொல்வது உத்தமம்.

4. கோவிலுக்குள் நுழைந்ததும் அனுசந்திக்க வேண்டிய சுலோகம்:
கூர்மாதீன் திவ்ய லோகாந் ததனுமணிமயம் மண்டபம் தத்ர சேஷம் தஸ்மின் தர்மாதி பீடம் ததுபரி கமலம் சாமர க்ராஹிணீச்ச। விஷ்ணும் தேவீ-விபூஷாயுத கணமுரகம் பாதுகே வைநதேயம் ஸேனேசம் த்வாரபாலான் குமுதமுககணான் விஷ்ணு பக்தான் ப்ரபத்யே॥

(பாஞ்சராத்ரம்)

5. த்வஜஸ்தம்பத்தின் அடியிலிருந்து பிரதக்ஷிணமாக ஸன்னிதியை வலம் வரவேண்டும்.
6. நிதானமாக ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். பூரண கர்ப்பிணிநடை போன்றும், பசுமாட்டின் நடை போன்றும் மெதுவாக வலம் வரவேண்டும்.
7. முதலில் ஆழ்வார் ஆசார்யர்கள் சன்னிதிகளில் அவர்களைச் சேவிக்க வேண்டும்.
8. பிறகு தாயார் சன்னிதிக்குச்சென்று தாயாரைச் சேவிக்க வேண்டும்.
9. விஷ்வக்ஸேனரை சேவித்துவிட்டு, நடு மண்டபத்தில் பகவானை நினைத்து தெண்டனிட்டு, த்வாரபாலகர்களுடைய அனுமதியைப் பெற்றபின், சன்னிதி முன்பாக அந்தந்த திவ்விய தேசப் பாசுரங்களுடன் பெருமாளை சேவிப்பது உத்தமம். பகவானுடைய தீர்த்தம் மற்றும் ப்ரசாதங்களை மிக்க வணக்கத்துடன் பெற்றுக் கொள்ள வேண்டும்.
10. "சிந்தையினால், சொல்லினால், செய்கையால்"[1] என்றபடி முக்கரண சுத்தியுடன் வணங்க வேண்டும்.
11. முதலில் சன்னிதி முன் அடக்கமாக நிற்றல் வேண்டும்.
12. பிறகு சாஷ்டாங்கமாகப் பணிதல்; மீண்டும் நிற்றல்
13. முதுகு வளைந்தபடி ஸேவித்து, பெருமாளின் திருவடியை ஸேவித்தல். ('ங' ப்போல் வளைந்து சேவிக்க வேண்டும்.)
14. இல்லங்களில் பகவானைத் துதிப்பது உத்தமம். அதைவிட பன்முறை சிறந்தது ஆலயங்களில் வழிபடுதல்.

"பரார்த்தோ ஸூர்ய ஸத்ருச:
க்ருஹார்த்தா கிருஹ தீபவத்"

1. திருவாய்மொழி, 7.10.10.

வீட்டில் பூஜை செய்வது, வீட்டில் ஏற்றிவைக்கும் விளக்கு ஏற்படுத்தும் வெளிச்சம் போல; ஆலயத்தில் பூஜை என்பது சூரியனுடைய அகண்ட பிரகாசம் போல (ஸ்ரீ பாஞ்சராத்ரம் - ஈச்வர ஸம்ஹிதை)

ஒவ்வொரு திவ்விய தேசமும் ஏழுவிதமான புண்ணியங்களை உடையதாக இருக்கும்.

"க்ஷேத்ரம், வநம், நதீ, ஸிந்து, புரம் புஷ்கரிணீ ததா
விமானம் ஸப்த புண்யஞ்ச ..."

க்ஷேத்ரமஹிமை

க்ஷேத்ரமஹிமையைக் காணப்புக்கால், நம்முடைய ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட திவ்ய தேசமான, திருக்குடந்தை மிகுந்த பெருமை பெற்றது. பிரளய காலத்தில் சிருஷ்டிக்கு உண்டான விதையும் வேதமும் ஒரு குடத்தில் அடக்கப்பட்டது. பிரளயஜலப் பெருக்கு, குடத்தை இமயமலைச் சிகரத்தினின்று சோழ தேசத்திற்கு கொணர்ந்தது. குடத்தினின்று அமுதம் பெருக்கெடுத்து ஓடிய (பிரவஹித்த) இடமே கும்பகோணமாயிற்று என்பர்.

(1) "யோ நர: கும்பகோணே'ஸ்மிந் க்ஷணார்த்தமபி திஷ்ட்டதி/
கரஸ்த்தம் தத்ர கைவல்யம் கிமுதாந்யா விபூதய: //"

திருக்குடந்தையில் ஒரு க்ஷணகாலம் இருக்கும் மனிதனுக்கு கைவல்யம் வையகத்திலேயே கிடைக்கிறது. பின், வேறு ஐச்வர்யங்களுக்குக் கேட்கவா வேண்டும்! - எனப் பெருமை பேசுகிறது கும்பகோண ஸ்தல மங்கள சுலோகம்.

(2) த்ரிம்சத் கோடி வஸுருத்ர திவாகராதி
தேவாதி தேவகண ஸந்தத ஸேவ்யமாநம்/
அம்போஜ ஸம்பவ சதுர்முக கீயமாநம்
வந்தே சயாநமிஹ போகிநி சார்ங்கபாணிம்//

இந்திரன், ருத்ரன், சூரியன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களாலும் நிரந்தரம் ஸேவிக்கப்படுபவனும், பகவானின் நாபீ கமலத்தில் உண்டான நான்முகனால் துதிக்கப்படுபவனும், திருக்

குடந்தையில் பள்ளி கொண்டிருப்பவனுமான சார்ங்கபாணியை எப்போதும் வணங்குகிறேன்.

இத் திவ்ய தேசம் உபய ப்ரதான க்ஷேத்ரம் என்று வழங்கப்படுகிறது. மூலவருக்கு எவ்வளவு பெருமைகள் உண்டோ அவ்வளவும் உற்சவருக்கும் உண்டு. ஸ்ரீ ஆராவமுதனுடைய அனைத்துப் பெருமைகளும் உற்சவரான ஸ்ரீ சார்ங்கபாணியையும் சாரும்.

*(3) உத்தானசாயிநமுதார கிரீட சூடம்*
*உத்புல்ல பத்ம நயநம் ஹ்யுபதாந பாஹும் ।*
*ஆஜாநு பாஹுமமலம் பணிராஜ தல்பே*
*சார்ங்கேச மச்யுதமஹம் ப்ரணதோ'ஸ்மி நித்யம் ॥*

*உத்தான சயனத்தில் இருப்பவனும், மகுடம் தரித்தவனும், மலர்ந்த தாமரைக் கண்களை உடையவனும், தலையணையாக வைக்கப்பட்ட திருக்கரங்களை உடையவனும், நீண்ட புஜங்களை உடையவனும், பவித்திரனும், ஆதிசேஷனாகிற படுக்கையில் பள்ளி கொண்ட பெருமானு மாகிற ஸ்ரீ சார்ங்கராஜனை அனுதினமும் அடிதொழுகிறேன்.*

*(4) ஏவம் சார்ங்க தரம் பூஷ்ணும் யே ப்ரபந்நா: பராயணம் ।*
*ந தேஷாம் யமஸாலோக்யம் ந ச தே நரகௌகஸ: ॥*

*ஸ்ரீ சார்ங்கராஜனை அடைக்கலம் கொண்டவனுக்கு யமபயமோ, நரகபயமோ அண்டாது. ஏனெனில் ஸ்ரீ ஆராவமுதன் ஒரு தெவிட்டாத இன்னமுதனன்றோ!*

*ஸ்ரீ திருக்குடந்தை ஆராவமுதன் விஷயமான நான்கு மங்களாசாசன சுலோகங்கள் ஸ்ரீ கோபால மஹாதேசிகன் அருளிச் செய்ததுள்ளார். திருக்குடந்தை, நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் விளைந்த திருப்பதி என்று போற்றப்படுகிறது. அமுத வனமும், காவிரி நதியும், கல்யாணபுரமும், ஹேமபுஷ்கரிணியும், வைதிக விமானமும் கொண்ட பெருமை உடையது இத்திருப்பதி.*

*இவ்வாறே திருக்குடந்தைக்கு அருகிலுள்ள நாச்சியார் கோயில் எனப்படும் திருநறையூரையோ, திருச்சேறை எனப்படும் பஞ்சசார க்ஷேத்திரத்தையோ ஆய்வுக்கான தலைப்பாகக் கொண்டு திவ்விய தேசங்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளலாம்.*

# ஸ்ரீ அபர்யாப்தாம்ருத ஸுப்ரபாதம்

1. *ஸ்ரீமத் கோமள வல்லீச கும்பகோண புரீசவர।*
*அபர்யாப்தாம்ருத ஸ்வாமிந் ஸுப்ரபாதம் தவாத்ய போ: ||*

*ஸ்ரீ தேவியான கோமள வல்லீயுடன் கூடியவராயும், குடந்தையின் நாயகனாக விளங்குகிற ஆராவமுதனே! திருப்பள்ளியெழுத்தருளாயே!*

2. *வேதா: புராண நிவஹை ரிதிஹாஸவர்க்கை:*
*வேதாந்த யுக்ம விவசா த்ருத வந்திருபா:*
*ப்ரபோதிகீ: பரிபடந்தி சுபாஸ்துதீஸ்தே*
*ஸ்ரீ சார்ங்கராஜ பகவந்! தவ ஸுப்ரபாதம்.*

*வேதங்கள் புராணங்கள் இதிஹாஸங்களுடனும் இரண்டு வேதாந்தங் களுடனும் துதிபாடகர்கள் துதிபாடுகின்றனர்.*

*இவ்வாறாக, நித்யஸூரிகள், ஆழ்வார்கள், ஆசார்யவர்கங்கள், முனிசிரேஷ்டர்கள், இந்திராதி தேவர்கள், கந்தர்வ கூட்டங்கள் ஆக பலரும் எம்பெருமானை பள்ளியுணர்த்தக் குழுமி உள்ளரை - என்று பதினேழு சுலோகங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது. கடைசீ சுலோகம்:*

17. *ஜயது ஜயது நித்யம் கும்பகோணாதி தேவ:*
*ஜயது ஜயது நித்யம் கோமளாம்பா ஸஹாய:।*
*ஜயது ஜயது நித்யம் த்ருப்திதூராம்ருதாத்மா*
*ஜயது ஜயது நித்யம் சார்ங்கராஜ: ப்ரஸன்ன:||*

*திருக்குடந்தையின் தலைவனும், கோமளவல்லீ ஸமேதனும் ஆராத அமுதனான சார்ங்கராஜனே, தங்களுக்கு என்றென்றும் மங்கள முண்டாகட்டும்।*

*ஸ்ரீ அபர்யாப்தாம்ருத த்யாநம்*

*1.* கும்பகோண மஹா க்ஷேத்ரே ப்ரஹ்ம ஹத்யாபநோதனே |
காவேர்யா தக்ஷிணே தீரே ஹேம புஷ்கரிணீதடே ||

ப்ரஹ்மஹத்யை முதலான பாபங்களைப் போக்கும் திருக்குடந்தை என்னும் மஹாக்ஷேத்திரத்தில், காவேரியின் தெற்கே, ஹேம புஷ்கரிணிக் கரையில் எழுந்தருளி இருக்கும் ஆராவமுதனைத் (அபர்யாப்தாம்ருதனை) தியானிப் போம்!

*20.* வேத வேதாங்க வேதார்த்த வேதமந்த்ர ஸ்வரூபிணம் |
ஸ்ரீபூமி ஸஹிதம் தேவம் சார்ங்க தந்வாநம் ஆச்ரயே ||

வேதம், வேதாங்கங்கள், உபநிடதம், மந்த்ரம் ஆகிய ஸ்வரூபங்கள் உடையவரும், ஸ்ரீதேவி, பூமிதேவியுடன் கூடியவரும், சார்ங்கம் என்னும் வில்லைக் கையில் கொண்டவராயுமுள்ள எம்பெருமானைச் சரணம் அடைகிறேன்.

*("அபர்யாப்தாம்ருத த்யாநம்" என்ற தலைப்பில் 20 சுலோகங்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றில் முதலும் முடிவும் மட்டும் இங்கே கொடுக்கப் பட்டுள்ளது.)*

*அபர்யாப்தாம்ருத த்யான ஸோபானம்*

பதின்மூன்று சுலோகங்கள் இத்துதி நூல், திருக்குடந்தை தேசிகனால் அருளிச் செய்யப்பட்டுள்ளது.

*1.* ஸத்யம் ஜ்யோதி: ச்ருதி பரிஷதாம் அப்ரமேயம் ப்ரமேயம்
கல்யாணாநாம் அவிகலக்ருஹம் பாவநம் பாவநாநாம் |
ஆவிர்பூதம் கநக ஸரிதோ தக்ஷிணே தீரபாகே
சார்ங்கேசாக்யம் விநதசரணம் பா[4]து சித்தே ஸதா மே ||

முதல் சுலோகமான இது பொருட்செறிவு மிக்கது. இவ்வாறே 13 சுலோகங்களும் அர்த்த புஷ்டியுடன், ஆசார்யரின் பக்திப் பெருக்கைக் காட்ட வல்லனவாயுள்ளன.

முதல் சுலோகத்தின் பொருள்:

வேத உபநிடதங்கள் காட்டும் சோதியாயும், வேத உபநிடதங்கள் மூலமாகவே உணர முடிந்தவராயும், வேறுவழியில் உணர முடியாதவராயும், மங்களங்களுக்கெல்லாம் மங்களமாகவும், பவித்ரங்களுக்கெல்லாம் பவித்ரமாகவும், பொற்றா-மரையின் தென் கரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சார்ங்கராஜன் என் நெஞ்சில் என்றும் பிரகாசிக்கட்டும்.

இரண்டாம் சுலோகம் முதலாக, படிப்படியே ஸ்ரீ சார்ங்க ராஜனின் ஸௌந்தர்யங்களைக் காட்டும் திருவடித் தாமரைகள், திருமுழங்கால்கள், திருத்தொடைகள், திருவரை (இடை), திருக் கொப்பூழ் எனப்படும் திருவுந்தி, திருமார்வம், இரு புஜங்கள், திருமுக மண்டலம், திருக்குழல், ஆகியவற்றின் மிக அழகிய வருணனைகளோடு, பதினொன்றாம் சுலோகத்தில் ஆராவமுதனின் ஸமுதாய சோபையைப் பாடிக் கொண்டாடுகிறார். பன்னிரண்டாம் சுலோகத்தில் வைதிக விமானத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதேவி, பூதேவி ஸமேத ஆராவமுதன் தன் நெஞ்சில் நிறைந்துள்ளமையைக் காட்டி, இத்துதிநூலை நாடோறும் வாசிப்பவர்களுக்கு உண்டாகும் நன்மைகளாக ஆயுள் ஆரோக்ய ஐச்வர்யங்களைக் குறிப்பிடுகிறார்.

ஸ்ரீஆராவமுதன் மங்களாசாசன ஸ்தோத்திரம், ஸ்ரீ அராவமுதன் ஸ்தோத்திரங்கள், ஸ்ரீ சார்ங்கபாணி கராவலம்பம், ஸ்ரீ கோமள வல்லீ தியானம் முதலான பல ஸ்தோத்திரங்கள் இயற்றப்பட்டுள்ளன.

*(குறிப்பு: பின் வரும் ஸ்ரீ கோமளா தண்டகம் என்னும் பகுதி, லிஃப்கோ பதிப்பாகிய "ஸகல காரியஸித்தி தரும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்" (தொகுத்தவர்: கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியர், சென்னை-17, 1972) என்னும் நூலிலிருந்து (ப. 192-194) கொடுக்கப்பட்டுள்ளது.)*

ஸ்ரீயை நம:

# ஸ்ரீ கோமளா தண்டகம்

ஸ்ரீ கோமளா தண்டகம் என்னும் இந்த ஸ்தோத்ரம் திருக்குடந்தை (கும்பகோணம்) ஸ்ரீ ஆராவமுதனின் திருத் தேவியான ஸ்ரீ கோமளவல்லித் தாயாரின் ஸ்வரூத்ருப கல்யாண குண விபவங்களை வர்ணிக்கும் ஸ்தோத்ரமாகும். இந்தத் தண்டகம் ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி திருக்குடந்தை மஹாதேசிகன் அருளியதென்று பெரியோர்கள் சொல்லுவர்.

காளிதாஸ மஹாகவியினால் இயற்றப்பட்ட ச்யாமளா தண்டகத்தை ஞாபகப்படுத்தும் வகையில் கோமளா தண்டகமென்ற இந்த ஸ்தோத்ரம் அழகும்-நயமும்-அர்த்தபுஷ்டியும் உள்ள சொற்களில் அமைந்துள்ளதெனில் மிகையாகாது.

இந்த ஸ்தோத்ரத்தை எல்லோரும் பாராயணம் செய்து ஸ்ரீ ஆராவமுதன், ஸ்ரீ கோமளவல்லித் தாயார் அநுக்ரஹம் பெறுவோமாக.

ஜய து³க்³த⁴ாப்³தி⁴தநயே
ஜய ஶார்ங்க³ த⁴ரப்ரியே॥
ஜய காருண்ய ஸுரபே⁴
ஜய லாவண்ய வாரிதே⁴ ॥

முதல் சரணம்

ஜய ஜய ஜய தி³வ்யதி³ந்தீ³வர ச்ச²ாய கூலங்கஷஸ்யந்தி³ காலிந்தி³காऽமந்த³ மந்த³ாநிலோத³ஞ்சி வீசீஸமீசீந வேணீ ப⁴வத் கேஶ பாஶாதிதீ² பூ⁴த பாதே⁴ாத⁴ரே।

பீதவாஸோத⁴ரே! பி³ம்ப³ ஶோணாத⁴ரே!

ஜ்ரும்ப⁴மாணாம்ருதாபீ⁴ஶு பி³ம்ப³ாயுதேநாஶு ஸம்ப்ராப்த ஸௌந்த³ர்ய வக்த்ராரவிந்தே³!

த³ரஸ்பந்த³ பக்ஷ்மத்³வயீ பக்ஷ ஸம்லக்ஷ்ய சக்ஷுர் மிலிந்தே³!

ஸுத⁴ா ஸத்⁴ர்யுகு³க்திச்⁴ ச²லோத்³யந் மரந்தே³!
கி³ரம் தே³ஹி தே³வீடி³தும் த்வாபி⁴வந்தே³!
ரத³ஸ்பர்தி⁴ குந்தே³நுரஜ்யந் முகுந்தே³!

ஶரத்பர்வ சந்த்³ர க்ஷுரச்சந்த்³ரிகாऽக³ர்வ க³ர்வைக ஸர்வங்கஷஸ்பா²ர ரோசிஸ் ஸ்பு²ரந்மந்த³ஹாஸே! லஸச்சந்த்³ர ஹாஸே! தநீயோநதப்⁴ருயுகீ³யோபமாநீய த³ாமோத³ மாநேஷு சஞ்சச் ச³ராஸே! த³யாஸார ஸாரோல்லஸத்

த்[3]ருக்[3]விலாஸே! ததோ ப[4]க்திபா[4]ஜாம் க்ருதாம்ஹோ நிராஸே!

மணீமண்ட[3]ல ப்ரோல்லஸத் குண்ட[3]லே! தஜ்ஜிதோ த[3]க்[3]ர ப[4]ாப[4]ாநுமந் மண்ட[3]லே!

கம்பு[3]து[3]ஷ்ப்ராப கண்ட[2]ாப[4]ாலங்க்ருதே! கம்ஸஜித் ஸத்க்ருதே! கஞ்ஜக[3]ர்ப்ப[4] ஸ்தி[2]தே!

கும்பி[4] கும்ப[4] ப்ரதித்[3] வந்த்[3]வி வக்ஷோருஹே! ப[3]ாஹு த்[3]ம்போ[4]ல்லஸத் கல்பகாநோகஹே!

ஶாதகும்ப[4]த்[3]யுதே! ஸாது[4]கு[3]ம்ப[4]ஸ்துதே!

ஹே ஸரஸ்வத்ஸுதே!

யோகி[3]ஹ்ருத்[3]து[3]ர்க்[3]ரஹாகாரமத்[4]யே! மஹாபோ[4]கி[3] மத்[4]யே ஶயாதீ[4]ஶவக்ஷஸ் ஸ்த[2]லாவாஸ ஶ்ரீலேஶகி[2]லா-ஶாஸ்யலீலே! கலா புஷ்கலே!

மஞ்ஜு ஶிஞ்ஜாந மஞ்ஜீர சஞ்சத்பதே[3]! கிஞ்ச கஞ்ஜத் பதே[3]! ஸர்வ ஸம்பத்ப்ரதே[3]॥

## இரண்டாவது சரணம்

கமிதுருரஸி கௌஸ்துப[4]ாப[4]ாபரீவாஹ ப[3]ாலாத-போத[3]ார பாத[3]ப்ரபே[4]! பாஹி பத்[3]மே ஶபே[4]!

பத்[3]மஸம்லாஞ்சி[2]தே! ப்ரத்தஸத்[3]வாஞ்சி[2]தே! பக்[4]த லோகாஞ்சிதே!

வேத[3]வேத[3]ாந்த வேத்[3]யேऽந்ய து[3]ர்நிக்[3]ரஹோதீ[3]ர்ண தௌ[3]ர்க[3]த்யவைத்[3]யேऽநவத்[3]யே!

வதூ[4]மாத்ரது[3]ஷ்ப்ராப ஸத்[3]ரூபதே[4]யே! ஜக[3]த்பாவயந் நாமதே[4]யே! ஹரேரூபதே[4]யாநுரூபே! த்[3]ருஶா நிர்ஜித த்ரஸ்த ஸத்ரூபதே[4]யே!

வபுஶ்ஶோப[4]யாதே[4]ாப[4]வஜ் ஜாதரூபேऽதி லாவண்ய ராமா ஸமாஜாபி[4]ராமே! ரமே!

மஞ்ஜு கஞ்ஜஸ்பு[2]ரத்பாணி பாதே[3]ாருஹே!பம்ப்[4]ர மத்[3]ப[3]ம்ப[4]ரப்ரேயஸீ பாளிகாமோஹவிஶ்ராணந ப்ரக்ரியை காக்[3]ர புங்க[2]ாநு புங்க[2]ாநு த[4]ாவத் கடாஹப்ரவாஹே! ம்ருணாலப்ரதிஸ்பர்தி[4] ப[3]ாஹே!!

லலாடே லஸத்சித்ரகீ சக்ரித ந்யங்கு நாபே[4]! ஸுத[4]ா யாஸ் ஸநாபே[4]ऽநுப[4]ாவா துலாவிப்ரப[4]ாஸ்வத் துலாகோடி யுக்தேऽம்ருதஸ்யந்தி[3] ஸூக்தே!

அபி[4] வந்த[3]ாரு மந்த[3]ார ஸந்தாநஶாகே[2]! விஶாகே[2]ஶ லோகேஶ மேகே[4]ஶயாநாதி[3] நாநா தி[3]வௌகோபி[4]ராராதி[4] தே! ப[4]ாரதீ நந்தி[3]தே! பார்வதீநந்தி[3]தே! வாஸவீ ஸேவிதே! கா ஸமா தே[3]வி தே॥

### மூன்றாவது சரணம்

அயி ஜநநி த³யாஸுதா⁴ஸார ஸம்ப்லாவிதாபாங்க³ ஸம்ப⁴ாவிதோயஸ்த்வயாவாஸ பூ⁴மி; ஸ்ரியாநந்ய ஸாத⁴ா-ரணீபூ⁴தயாஸ்லிஷ்யதே தாவத³த்⁴யுஷ்யதே।

தத்³க்³ருஹத்³வார முத்³யந்மதை³ ரத்³ரிவத்³ ப³ந்து⁴ரை ரப்யுத³ஞ்சந், மருத்³ப³ாந்த⁴வைஸ் ஸைந்த⁴வைரம் ஸமம் மண்ட³லீ நந்த³நைஸ்யந்த³நை: பத்திபி⁴: ப்ராப்த ஸம்பத்திபி⁴ர் விஸ்ம்ருதாபத்திபி⁴ஸ் ஸம்ஹதிர் வைரிணும் தேந ஸஞ்ஜீயதே।

ஜாயதே தத்³த்³விஷாம் ப்ராணநம் காநநம் தஸ்ய சேத³ாநநம் ப⁴ாரதீ மஞ்ஜுப⁴த்³ராஸநம் ஸாஸநம்।

தஸ்ய சேத் ஸர்வஸர்வம்ஸஹாதீ⁴ஸ சூட³ாயதே।

தத்³வஸீ போ³ப⁴வீத்யுர்வஸீ பூ⁴யதே, பத்பரீரம்ப⁴ ஸம்பரம்ப⁴யா ரம்ப⁴யா,

வாஹநம் தஸ்ய சைராவதோ வாத³வா வாரிதே³ா, கீ³யதே। தத்³யஸஸ்ஸர்வ ஹாஹாதி³க³ந்த⁴ர்வவர்கை³ரலம் புஷ்கலம்।

தத்⁴யஸஸ் ஸ்ரோதஸா ஸர்வதி³க் பூர்யதே।

தஸ்ய ஸித்⁴யந்தி நாநாபுமர்த³ா: விநா தேந கே வா ஸமர்த்த³ா ஜநா: கிம் பரம் வர்ண்யதே।

யத்தவாபாங்க³தோ விஸ்வமேதச் சரஸ்த³ாவராகார மத்⁴யேத⁴தே।

பாஹி பத்³மாலயே! பாஹிபத்³மாநநே! பாஹி காருண்ய ஸிந்தே⁴ா!

நமஸ்தே ஸமஸ்தேப்ஸிதார்த்த³ ப்ரத³ாநைகதாநைக ஹஸ்தே! முஹுஸ்தே புநஸ்தே நமஸ்தே ஸமஸ்தே நமஸ்தே நமஸ்தே நம: ।

ஸாமாதி³ ஸ்ருதிகே⁴ாஷிதாத்மவிப⁴வா
ஹேமாரவிந்த³ாஸநா
த⁴ாமாத⁴ :⁴க்ருத தி³வ் யகாஞ்சந ருசிஸ்
ஸோமாபி⁴ராமாநநா।
ராமாஸார்ங்க³த⁴ரஸ்ய கோமலலதா
நாமாஸ்து பூ⁴மௌ ஸதாம்
ஸீமா ஸத்³கு⁴ண ஸம்பத³ா மவிரத
க்ஷேமாய ப⁴ாமாமணி: ॥
பத்யு: ப்ரப⁴ாவலயி கௌஸ்துப⁴வைஜயந்தீ
ஸ்ரீவத்ஸபூ⁴ஷணமுர: பரிபூ⁴ஷயந்தீ।
து³க்த⁴ாம்பு³ராஸி குலமங்க³ள வைஜயந்தீ
ஸ்ரீகோமளாஸ்து ஹததம் ஸுகு³ணைர் ஜயந்தீ॥

**ஸ்ரீ கோமளா தண்டகம் ஸம்பூர்ணம்**

# துணை நூல் பட்டியல்


1. சந்தமிகு தமிழ் மறை (நாலாயிர திவ்ய பிரபந்தம்) பதிப்பாசிரியர் : நாட்டேரி கிடாம்பி விஜயராகவாச்சாரியார் நான்காம் பதிப்பு : ஸுபானு, சித்திரை மீ 2003.
2. நாலாயிர திவ்யப் பிரபந்தம், மறுபதிப்பு 1999, வெளியீடுவோர் : ஸ்ரீ வைணவப் பேரவை, 31, உலகப்பவீதி, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2.
3. நாலாயிர திவ்வியப் பிரபந்தம், பதிப்பு 1987, திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை, 32, பெருமாள் முதலித்தெரு, இராயப்பேட்டை, சென்னை - 4.
4. நாலாயிர திவ்ய பிரபந்தம், காரிமாறன் கலைக் காப்பகம் பதிப்பு: 2001, தேரடித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.
5. முத்லாயிரம் - நாலாயிர திவ்யப் பிரபந்தம், தெளிவுரை - முனைவர் மதி சீனிவாசன், ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ் பதிப்பு 2002, ஆழ்வார் ப்ளாட்ஸ் 150, ஆழ்வார்பேட்டை தெரு, சென்னை -18.
6. பெரியதிருமொழி - நாலாயிர திவ்யப் பிரபந்தம், பதிப்பு - 2002 ஸ்ரீவராகி பிரிண்டர்ஸ், சென்னை - 18.
7. திருவாய்மொழி - நாலாயிர திவ்யப் பிரபந்தம், பதிப்பு 2002, ஸ்ரீவராகி பிரிண்டர்ஸ், சென்னை - 18.
8. இயற்பா - நாலாயிர திவ்யப் பிரபந்தம், பதிப்பு 2002, ஸ்ரீவராகி பிரிண்டர்ஸ், சென்னை - 18.
9. ஸ்ரீ வைஷ்ணவம் (பதிப்பு 1994) ஆசிரியர் R. இராமஸ்வாமி ராமாநுஜ தாஸர், ஆழ்வார்கள் அமுத நிலையம், 37, சௌத் கூவம் ரோட், கோமளீசுவரன் பேட்டை, சென்னை - 8.
10. 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச விராஜமான திவ்ய தம்பத்யோ: நாமாவளி: லீலாம்ருதம் - ஆசிரியர் 1. ஸ்ரீ.உ.வே K.R பத்மநாபன் 2. ஸ்ரீ K. ரமண சுந்தரம் (முதல் பதிப்பு ஜனவரி 2000), ராஜன் அண்ட் கோ அச்சகம், சென்னை - 1.

11. சந்தமிகு தமிழ் மறை - மூன்றாம் அனுபந்தம் திவ்ய தேசக் குறிப்பு பராங்குச மன்றம், (பதிப்பு 1964) சென்னை.

12. 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேசங்கள் ஒரு தாஸாநு தாஸரின் பக்திப் பயணம். நான்கு பகுதிகள், ஆசிரியர் முனைவர் ஆர். ராமானுஜம், சென்னை.

13. வகுளாபரணச் சடகோபர் - ஸ்ரீரங்கம் ஸ்ரீராமஸ்வாமி ஐயங்கார், டி.வி.எஸ். சாரிடீஸ், சென்னை.

14. 108 திருப்பதிகளில் திருமால் திருவுருவங்கள் (பதிப்பு - 2001) தொகுப்பாசிரியர்கள் : திரு. S. ஜெயபாலன், கொமாரபாளையம், ஈரோடு. திரு. Dr. N.V. பார்த்தசாரதி, தியாகராய நகர், சென்னை, ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ், ஆழ்வார்பேட்டை, சென்னை -18.

15. 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச வைபவமும் புராண அபிமான ஸ்தலங்களும் (யாத்ரிகர்கள் வழிகாட்டி) பதிப்பு - 2001, தொகுப்பு வீரராகவன், தி.லிட்டில் ப்ளவர் கம்பெனி, தி.நகர், சென்னை - 17.

16. 108 வைணவ திவ்யதேச ஸ்தலவரலாறு, ஆசிரியர் வைணவச் சுடராழி ஆ. எதிராஜன் B.A., காரைக்குடி, பதிப்பகத்தார் ஸ்ரீ வைணவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், காரைக்குடி - 2 (மூன்றாவது பதிப்பு 1997).

17. தல வரலாறு ஸ்ரீ கோமளவல்லித் தாயார் ஸ்ரீ சார்ங்கபாணி ஸ்வாமி திருக்கோவில் கும்பகோணம், எம். டபிள்யு. என். அச்சகம், சென்னை - 5.

18. திருக்குடந்தை அருள்மிகு சார்ங்கபாணி ஸ்வாமி திருக்கோயில் - தலவரலாறு வெளியீடு : அருள்மிகு சார்ங்கபாணி சுவாமி திருக்கோயில், ஆசிரியர். திரு. N.S. தாதாசாரியார், கும்பகோணம் பதிப்பு 1984.

19. இரண்டாம் திருவந்தாதி - பூதத்தாழ்வார் அருளிய (பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானம் அப்பிள்ளையுரை, ஸுதர்சனர் இயற்றிய விவரணம்) பதிப்பாசிரியர் ஸுதர்சனர், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி இரண்டாம் பதிப்பு 1993.

20. பேயாழ்வார் அருளிய மூன்றாம் திருவந்தாதி, பெரிய வாச்சான் பிள்ளை வியாக்யானம், அப்பிள்ளையுரை ஸுதர்சனர் விவரணம். பதிப்பாசிரியர் ஸுதர்சனர் - புத்தூர் அக்ரஹாரம், திருச்சி இரண்டாம் பதிப்பு 1990.

21. திருமங்கை மன்னன் அருளிய பெரிய திருமொழி (3 பாகங்கள்) (பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானம், அப்பு அரும்பதம், உரையுடன்) ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபை, அச்சிட்டோர்: ஸ்ரீ ரங்க நாச்சியார் அச்சகம், ஸ்ரீரங்கம், 1999.

22. திருமங்கையாழ்வார் அருளிச் செய்த பெரிய திருமொழி - உரை 2 பகுதிகள், ஆசிரியர்: T.S. ராஜகோபாலன், ஆழ்வார் அமுத நிலையம் கோமளீசுவரன் பேட்டை, சென்னை - 2, பதிப்பு 1989.

23. பெரியதிருமொழி, ஸ்ரீ உத்தமூர் தி. வீரராகவாசார்யர் ஸ்வாமி இயற்றிய ப்ரபந்த ரக்ஷை, உபய வேதாந்த க்ரந்தமாலை, விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீசபை, சென்னை - 17, 1969.

24. பகவத் விஷயம் - ஐந்தாம் பத்து, ஸ்ரீஸுதர்சனர் டிரஸ்ட், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17, பதிப்பு 1998.

25. பகவத் விஷயம் - திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் தொகுதி 5, ஆசிரியர்: பு.ரா. புருஷோத்தம நாயுடு, சென்னை பல்கலைக் கழகம், பதிப்பு 1980.

26. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி 5-6-7 பத்துகள், (பதி) கே. ஆர். பத்மநாபன், ஸ்ரீ ரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஆசிரமம், ஸ்ரீரங்கம், பதிப்பு 1991.

27. திருவாய்மொழி - உரை, ஆழ்வார்கள் அமுத நிலையம், சென்னை - 2 ஆசிரியர் Dr மதி ஸ்ரீநிவாஸன், பதிப்பு 1994.

28. தர்மஸாரம் - ஸதுபதேசம் - 4, ஸ்ரீ உ.ப.கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா, பதிப்பு - 2001, சென்னை - 18.

29. ஸ்ரீ அஹோபில மடம் 43ம் பட்டம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ வீரராகவ சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் சதமான மஹோத்ஸவ மலர், சென்னை - 4, 2001.

30. ஸ்ரீ அஹோபில மடம் 45ம் பட்டம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ நாராயண யதீந்த்ர மஹாதேசிகன் ஸப்ததி மலர், ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா, சென்னை - 4, 1996.

31. ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீபாத கைங்கர்ய ஸபை 57ம் ஆண்டு நிறைவு மலர், மைலாப்பூர், சென்னை - 4, 2003.

32. ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் புரிசை நடாதூர் ஸ்ரீ உ.ப. கிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி சதாபிஷேக (81வது திருநக்ஷத்ர) மலர். பதிப்பு 2002.

ஆங்கில நூல்கள்


1. Temples: Shree Vaikunthanath Devasthan, Calcutta, Pub: Ranganathachari, (12A, Kali Krushna Tagore St., Calcutta), Saroj Printers, 156, Tardeo Road, Bombay.

2. Sri Vaishnava Divya Desams: 108 Thirupathi-s, Compiled by Sri L.V. Gopalan, Visishtadvaita Pracharini Sabha, Sri Desika Vidya Bhavanam, 27, Venkatasa Agraharam, Chennai - 4, 1972.

3. 108 Vaishnavite Divya Desams (Vol. 1 - 6) by Ms. M.S. Ramesh, T.T. Devasthanam Publication, Tirupati (1992 - 2000).




# திவ்விய தேசங்கள் :
# திருக்குடந்தை (கும்பகோணம்) — ஓர் ஆய்வு

பிஎச்.டி. (முனைவர்) பட்டத்திற்காக
சென்னை பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

மேற்பார்வையாளர்

Dr. V.K.S.N. ராகவன், M.A., Ph.D.
துறைத்தலைவர்
வைணவத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்

ஆய்வாளர்

திருமதி S.கோமளவல்லி, M.A.
வைணவத்துறை
சென்னைப்பல்கலைக்கழகம்




வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
செப்டம்பர் 2004

இயல் 6

## முடிவுரை

வையகத்துள் நிலவும் பல்வேறு சமயங்களுள் உன்னதமாயும் சிறப்பு மிக்கதாயும் விளங்குவது ஸ்ரீவைஷ்ணவ சமயமாகும். மிகவும் தொன்மை வாய்ந்ததும், தெய்வீகத் தன்மையுடையதுமான இச்சமயத்தின் தோற்றம் காலவரம்பற்றது, மற்றும் உரைப்பதற்கு அரியது. உலக சிருஷ்டிக்காக நான்முகனைப் படைத்த பரம்பொருள் ஸ்ரீமன்-நாராயணன் உலக மக்களின் நன்மைக்காகவும் மேன்மைக்காகவும் வேண்டி ஸ்ரீவைஷ்ணவ சமயத்தைக் காட்டியருளினான்.

இக்காலத்தில் புவியெங்கும் பரவியுள்ள பல்வேறு மதங்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அறிஞர் பெரு மக்களாலும், தீர்க்க தரிசி களாலும் (தொலை நோக்குடையவர்களாலும்) தோற்றுவிக்கப்பட்டன. ஆயினும், ஸ்ரீவைஷ்ணவ சமயம் அவ்வாறின்றி, எல்லாம் வல்ல இறைவன்(அகடிதகடநா சாமர்த்தியம் கொண்டவன்) ஸ்ரீமந் நாராயணனின் பெருங்கருணையால், பலப்பல யுகங்களுக்கு முன்னமேயே, அதாவது லக்ஷக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் இவ்வுலகம் தோன்றிய நாளிலிருந்து நிலவும் தெய்வீக சமயமாகும்.

கோடிக்கணக்கான உயிர்களின் வளமான வாழ்விற்கும் சிறப்பிற்கு மென்றே இந்நாள்வரை தோன்றிய எண்ணற்ற சமயங்களுள் பல காலப் போக்கில் ஏற்பட்ட இயற்கை விளைவுகளுக்கும், பயங்கர போராட்டங் களுக்கும் எதிர்ப்புகளுக்கும் ஆளாகி அழிந்து போய்விட்டபோதிலும் கூட, ஸ்ரீ வைஷ்ணவ சமயம் பல யுகாந்தரங்களாக துருவர், பிரஹ்லாதர் போன்ற பரம பாகவதோத்தமர்களாலும், நாரதர், வசிஷ்டர், பராசரர், வியாசர் முதலான முனிசிரேஷ்டர்களாலும், போற்றப்பட்டு வந்தமையால் அழியாது நிலைத்திருப்பது கண்கூடாகும். மஹாத்மாக்களாலும், மாதவத்தோர்களாலும் வளர்க்கப்பட்டதும், தொன்று தொட்டே பெருமைவாய்ந்ததுமான ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தின் சீர்மையைத் தங்கள்

அரிய பாசுரங்களால் தமிழகமெங்கும் தழைத்தோங்கும்படிச் செய்த பெருமை ஆழ்வார்கள் பன்னிருவரைச்சாரும் என்பது சரித்திரம் கூறும் உண்மையாகும்.

ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் சிறப்பினையும், தொன்மையையும் தமிழகத்தில் மட்டுமின்றி பாரதநாடெங்கும் பரப்ப அரும்பாடு பட்டவர் ஸ்ரீபகவத் ராமானுஜர் ஆவார். லக்ஷ்மீநாதன் (திருமகள் கேள்வன்) தொடங்கி, நான்முகன், பல மஹரிஷிகள், வியாசர், போதாயனர் முதலிய பெரியோர்களால் வளர்க்கப்பட்டு ஸ்ரீராமானுஜர் வரை வந்த ஸ்ரீவைஷ்ணவ சமயம், விசிஷ்டாத்வைத தத்துவம் என்னும் பெயர் பெற்று விளங்குகின்றது. இவ்விரண்டையும் இணைத்துப் போஷித்து வளர்த்தார் ஸ்ரீராமானுஜர். இவ்விரண்டு நதிகளுமே எம்பெருமானாராகிய ஏரியில் வந்து, தேங்கி, அங்கிருந்து உலக மக்களாகிய பயிர்களுக்குப் பாய்ந்து, இன்றளவும் பயன்பட்டு வருகின்றனது. பூலோக வைகுண்டம் என வழங்கப்படும் ஸ்ரீரங்கத்து செல்வமனைத்தையும் திருத்தி வளர்த்தவர் ஸ்ரீராமாநுஜர் (யதிராஜர்). பலப் பல கோயில்களையும், திருக் குளங்களையும் கட்டிக் காத்துப் பராமரித்ததோடு, அனைவரும் வைணவர்களே என்ற கருத்தை நன்கு புரிந்து கொள்ளச் செய்தவரும் இம்மஹானாகிய யதிச்ரேஷ்டரே. விஷ்ணு இல்லாத இடம், பொருள் என்று ஒன்று இல்லாததால் உலகில் உள்ள அனைத்துச் சேதன அசேதனங்களும் (உயிர்களும், பொருள்களும்) விஷ்ணுவினால் நிறைந்தவை. விஷ்ணுவினால் பாதுகாக்கப்படுகின்றன. அவராலேயே தாங்கப்படுகின்றன, இயக்கப்படுகின்றன. இவ்வாறு, இத்தகைய அடிப்படைக் கொள்கைகளைப் பாமரனும் அறியும்படி அருளிச் செய்தும், தன் வாழ்நாளில் வாழ்ந்து காட்டியும், சிறந்த முன்னுதாரண மாகவே திகழ்ந்தவர் அவர்.

அவர் "அகில புவன ஜன்ம ஸ்தேம பங்காதி லீலே" எனத் தொடங்குகின்ற ஸ்ரீபாஷ்ய மங்கள சுலோகத்தில் எம்பெருமானை, அடைய பக்தி ஒன்றே சிறந்த மார்க்கம் என்று "சேமுஷீ பக்திரூபா" எனக் காட்டினார். பரமத பங்கம் செய்து, தம் சிந்தாந்தத்தை நிலை நிறுத்தவும் பொதுவில் அனைவருக்கும் காட்டிய மார்க்கம் பக்தி மார்க்கம். தன்னைச் சேர்ந்த அடியார்களுக்கு, அந்தரங்கமான வழிகாட்டியாக இருந்து,

வருடத்தின் மிகச் சிறந்த நாளான பங்குனி உத்திரத்தில் திருவரங்கத்து எம்பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியில், "கத்ய த்ரயம்"என்னும் உயர்ந்த வடமொழி நூல் மூலம் விண்ணப்பித்துக் காட்டியது சரணாகதி என்ற மிக உத்தமமான மார்கமாகும்.

குறி என்றும் நெறி என்றும் ஒரு வழக்கு உண்டு தமிழில், 'குறி' என்ற சொல் அடைய வேண்டியதைக் காட்டுகிறது. அதாவது இலக்கு அல்லது பேறு. ஆறு என்றும் வழங்கும் 'நெறி' என்பது வழி - இலக்கை அடைய நாம் கடைப்பிடிக்க வேண்டிய சிறந்த வழி. சம்பிரதாயத்தில் 'குறி' என்பது திருநாடு சென்றடைவதையும், அங்கு ஸ்ரீமந்நாராயணனுக்குத் தொண்டு செய்வதையும் உணர்த்தும். நெறி என்பது அப்பேரின்ப நிலையை அடைவதற்குரிய பாங்கான முறையான சரணாகதியை உணர்த்தும்.

சரணாகதியே மற்ற வழிகளை விட எளிதானது என்றும் உடன் பயன் தர வல்லது என்றும் வேதாந்த நூல்களிலும், பின்பு வந்த அறநூல்களிலும் வலியுறுத்தப்பட்டதாயினும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலே காட்டப்பட்ட கருத்துகள் மிக எளிமையாகவும், ஈரச் சொல்லாகவும் ஞானம் கனிந்த முழுநலமாகவும் காணப்படுகின்றன. ஆழ்வார்களின் பாடல்கள் அமுத மாரியாக, வாடின பயிருக்கு உயிர் தரும் வான்நீர் போல, பிறப்பு - இறப்புச்சுழலாகிய ஸம்ஸாரம் எனும் பெருந்தீயில் அகப்பட்டு அல்லலுறும் ஆன்மாக்களின் தாபத்தைப் போக்கி குளிர்விப்பனவாக உள்ளன.

எம்பெருமானை கண்ணுக்கு இனியன், அக்காரக்கனி என்றெல்லாம் ஆழ்வார்கள் பாடினர். ஸ்ரீ கோதை நாச்சியார், "மனத்துக்கினியான்" என்று எம்பெருமானைப் போற்றியுள்ளாள். மாறாக் காதல் கொண்டு மயங்க வைக்கும் எம்பெருமானை, நற்குணங்களின் உறைவிடம், குணக்கடல் என்றெல்லாம் நம் பூர்வாசார்யர்கள் போற்றியுள்ளனர். "மேன்மையும் நீர்மையும் வடிவழகும் கூடிய பசுங் கூட்டமாயிற்று பரத்துவம்" என்பது வியாக்கியானம்.

ஸ்ரீவைகுண்டம் என்னும் பரமபதத்தில் அமர்ந்த திருக்கோலத்துடன் பரமபதநாதனாக, பரந்தாமனாக ஸ்ரீதேவி,பூதேவி, நீளாதேவி ஆகியோர்

புடை சூழ்ந்து இருக்க, நித்யஸுரிகள் ஸதா பார்த்துக் கொண்டு ஸேவித்திருக்க, நித்யர்களும் முக்தர்களும் 'ஹாவு ஹாவு' என்ற ஸாம கான இன்னிசை எழுப்ப, இருக்கும் நிலை, எம்பெருமானின் பரத்துவம்.

தன்னை வியூகப்படுத்தி, அரவினணை மேல் அரவிந்தப் பாவையான திருமாமகள் சேவடிபிடிக்க திருப்பாற்கடலில் அனந்த சயனனாக, கிடந்த திருக்கோலத்துடன் இருப்பது எம்பெருமானின் அடுத்த நிலை. தேவர்கள் அபயக்குரல் எழுப்பும் போதும் லோகத்தில் ஸாதுபரித்ராணம், துஷ்ட நிக்ரஹம் பண்ண வேண்டிய கட்டாயம் ஏற்படும் போதும், க்ஷீராப்தி நாதனாக மந்திர த்ரஷ்டாக்களான ரிஷிகளும் போற்றும்படி எழுந்தருளி இருக்கும் நிலை வியூகநிலை. இன்ன காலத்தில் இன்னவருக்கு இன்ன தேசத்தில், இப்படிப்பட்ட துன்பம் களையத் தான் இன்ன தோற்றத்தில் அவதாரம் செய்ய சங்கல்பித்து இருப்பதைத் தெரிவித்து, பொதுமக்களின் மனத்தில் ஆறுதலையும், எதிர்பார்ப்பையும் தருவிக்கும் நிலை "அவதாரங்கள்" என்னும் விபவ நிலை.

அடியார்களை உய்விக்க, விபவ அவதாரங்களை முன்பு ஏற்றுக்கொண்டு, தோன்றிய எம்பெருமான் இக்கலியுகத்தில், அர்ச்சாவதாரமாகத் திருக்கோயில்களில் நின்ற திருக்கோலத்தில் ஸித்தோபாயமாகக் காட்சி அளிப்பது எளிமையின் எல்லை நிலம்.

யசோதையின் கயிற்றுக் கட்டுண்டு நின்ற காட்சியை எளிமைக்கும், மூவுலகும் இருள் தீர நடந்தமையை நீர்மைக்கும், இராமனாய் அவதாரம் செய்து இலங்கையைக் கட்டழித்த நீர்மையை செம்மைக்கும், பாண்டவர்கட்காகத் தூது நடந்து சென்றதை பரிவுக்கும், அமரர்கள் தொழுதேத்த நிற்கும் தன்மையை தலைமைக்கும் பூர்வாசார்யர்கள் உதாரணமாகக் காட்டுவர்.

ஸ்வாமித்துவம், வாத்ஸல்யம் (பரிவு), சௌசீல்யம் (நீர்மை), சௌலப்யம் (எளிமை) என்ற இந்நான்கும் குண சதுஷ்டயம் என்று வழங்கப்படும். இவையே எம்பெருமானின் அவதாரங்களுக்கு மூலகாரணம் எனலாம். இவற்றோடு ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்ய, சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்களும் சேர்ந்து பகவான் என்ற பதத்திற்கு அறு

குணங்களுடையவன் என்ற பொருளைக் காட்டுகிறது. "ஆர்ஜவம் என்ற நேர்மை" குணம் எம்பெருமானுக்கே உள்ள அசாதாரணமான குணம். மனோ, வாக், காயத்தினால் ஒருபடி பட்டிருத்தல் என்பது பொருள்,எதை நினைக்கிறானோ, அதையே பேசி, அதையே செய்பவன் நேர்மையாளனாகிறான். பிரக்ருதியின் முக்குணக் கலப்பினால் அதனோடு தொடர்புடைய காலம் வரை 'கரணத்ரய சக்தி' என்பதில் லயிப்பது மிகவும் அரிது.

இவ்வளவே எம்பெருமானின் குணங்களா? என்று அளவிட்டு அறியமுடியாதபடி எண்ணற்கரியன் அவன். எண்ணிலும் வருபவன் அவன், அனந்த கல்யாண குணங்களை உடையவன். குண பரிபூர்ணனான நம்பி, பரமபதத்தில் உள்ள பரிபூரணத்துவத்தோடே, விபவ அவதாரங்களிலம், அர்ச்சைத் திருமேனியோடு கோயில்களிலும் எழுந்தருளியுள்ளான். அங்கும் எம்பெருமானுக்கு குண பூர்த்தி உண்டு. இந்த லீலாவிபூதியில் எப்பெயர் கொண்டும், எந்த தேசத்திலும், எந்த வஸ்துவிலும் எம்பெருமான் எழுந்தருளி இருப்பதாக எவன் நெஞ்சினால் நினைக்கிறானோ, அதன்படியே எம்பெருமான் ஆகிறான். ஆகவே, உட்கண்ணால் காணமுடியாத பரமபத நாதனை, புறக் கண்ணால் கண்டு அனுபவிக்கும் படி, பலவாகி பரந்தும் நிறைந்தும் உள்ளான்.

அந்தந்த தேசாசாரத்தின்படி வழிபாட்டு முறைகள், அனுட்டானங்கள் மாறி இருக்குமே ஒழிய, எம்பெருமானின் கல்யாண குணங்கள் எங்கும் நிறைந்தே ஒன்று போலவே இருக்கும். இந்தியாவில் தொன்மையான ஒரு காலத்தில் வராஹ அவதார வழிபாடுகள் மட்டும் அதிகமாக இருந்ததென்று உணர முடிகிறது. அதாவது ஸ்ரீராம, கிருஷ்ண, விபவத்தில் - அவதாரங்களாக எம்பெருமான் மானிட ரூபத்தில் தோன்றுவதற்கு முன்பு உண்டான மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ம அவதாரங்களில் வராஹ அவதார வழிபாடு மட்டுமே இந்தியா முழுவதும் மேன்மை யுற்றிருந்தது.

திருமலை, திருக்கடன்மல்லை, திருவிடவெந்தை, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகியன வராஹத் தலங்களேயாகும். அதாவது இங்கெல்லாம் தற்போதுள்ள அமைப்பிலான ஸ்தலங்கள் கட்டப் படுவதற்கு முன்பு

வராஹ மூர்த்திகளும், வராஹ வழிபாடு மட்டுமே இருந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே தொன்றுதொட்டு பாரதத்தில் வைஷ்ணவம் தான் பரவி, விரவியிருந்தது என்பதையும் எளிதில் உணரலாம். ஒவ்வொரு ஜீவாத்மாவின் உள்ளிருந்தும் அதைத்தாங்கி அந்தர்யாமியாக - மறைமுகமாக, பூமியினுள் உள்ள நிலத்தடி நீர் போல வெளியே ப்ரத்யக்ஷமாகக் கண்ணால் பார்க்கமுடியாத நிலையில் நம் உள்ளே, உள்ளுக்குள் உணர்வாய், உணர்வுக்குள் உயிராய் தன்சக்தியைக் காட்டுகிறான் எம்பெருமான். ஞானிகளாலும், சிறந்த பக்தர்களாலும் இனிய இந்த அனுபவம் உணரப்படும். ஆனால் சாமான்யர்கள் பரம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்னுமிவைகளை கண்ணால் நேராகக் காணாமல், கருத்தால் அணுக முடியாமல் நாத்திகவாதிகளாகவோ அன்றி நாத்திகம் கலந்த ஆத்திகவாதிகாளவோ விளங்குவர். பரமபதம் சென்று, கண்டு வந்து சொன்னவர் எவருமில்லை. சென்றவர் எவரும் திரும்பியதில்லை. எம்பெருமானும் எளிதில் எவருக்கும் அளிப்பதுமில்லை. பரமபத வாழ்வை அனுபவிக்கும் நித்திய சூரிகளுமல்ல நாம். வியூகத்தைக் கண்டு அதிசயிக்க நாம் தேவர்களுமல்ல, விபவ அவதாரங்கள் நிகழ்ந்த காலக் கட்டத்தில் நாம் எப்படிப்பட்ட பிறவிகளாக எந்த சூழலில் இருந்தோம் என்பதை அந்தர்யாமியாய் இருப்பதை அறியும் ஆற்றலும் நமக்கு இல்லை. எனவே ஒருவன், இறையன்புடையவனாய், தங்கம், வெள்ளி, மரம், கல், சாளக்கிராமம் முதலிய பொருட்களில் ஏதேனுமொரு கருப் பொருளில் தன் மனதிற்கு உகந்தவாறும், சாத்திரங்களில் கூறிய முறை வழுவாமலும் ஒரு உருவத்தை பிரதிஷ்டை செய்து வழிபடும் முறைக்கு அருச்சை அல்லது அர்ச்சாவதார வழிபாடு என்று பெயர். இதுவே விக்கிரக ஆராதனை அல்லது உருவ வழிபாடு என்று வழங்கப்படுகிறது.

மனிதர்கள் தம் முயற்சியால் செய்யாமல், எம்பெருமான் தானே, பக்தர்களின் வேண்டுகோளுக்காக உகந்து, அருச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளியதுண்டு. பக்தர்கள் விரும்பிய உருவங்களில் இந்த அர்ச்சா வடிவங்களில் எம்பெருமான் தன்னை வெளிக்காட்டியதுண்டு. கலியுகத்தில் அனுட்டானங்களும், இணை உணர்வும் குறைந்திருக்கும் நிலையில், அருச்சை போன்று எளிதாக எம்பெருமானை வழிபடும் இடம் வேறெதுவுமில்லை. நம் உள்ளத்தில் பக்தி என்னும் ஆசை வளர்ந்து,

எம்பெருமான் திருவடிகளே தஞ்சம் என்று அடைக்கலம் புகுந்து உய்யும் ஆறாக திருக்கோயில்கள் உள்ளன.

"புகல் ஒன்றில்லா அடியேன் நின்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"[1] என்ற ஆழ்வார் திருவாய்மொழிப்படி நமக்கு அடைக்கலம் திருவடியிணைகளே! முக்தி அடைந்தவன் பரமபதத்தில் இருந்தபடி பரந்தாமனை அனுபவித்துக் கொண்டு, ஆனந்த ஸாகரத்தில் மூழ்கியிருப்பான். கொள்ளமாளாத இன்பவெள்ளம் அவனது அநுபவம். பூலோகத்தில் நித்ய சேவை சாதிக்கும் திருமலையப்பனையோ, திருக்குடந்தை ஆராவமுதனையோ, துவாரகாநாதனையோ, அரங்கநகரப்பனையோ நித்தியஸூரிகள் சேவிக்க எண்ணினால், இயலாது. பெரியாழ்வார் "போயினால் பின்னை இத்திசைக்கென்றும் பிணை கொடுக்கிலும் போக ஒட்டாரே"[2] என்று இக்கருத்தைக் குறிப்பிடுகிறார்.

அதாவது பரமபதத்தில் இருக்கும் முக்தனை எம்பெருமான் போகவிடுவதில்லை. பூவுலகில் இருப்போருக்கு அருச்சையில் சேவை தந்தருளும் திருமாலையன்றி வேறு அடைக்கலமில்லை. எனவே அர்ச்சாவதாரமே நம்மை எம்பெருமானிடம் நெருக்கிக் கொண்டு சென்று பரமபதத்தில் முக்தர்களில் ஒருவனாக ஆக்கும். நம்மை உய்விக்கும் பொருட்டே எம்பெருமான், நின்றநிலை, இருந்தநிலை, கிடந்தநிலை என்றும் இன்னும் வேறு நிலைகளிலும் காட்சியளித்தவாறும், விபவ அவதாரத்தில் தான் தோன்றிய அதே உருவத்தோடு இப்போதும் விக்ரஹ ரூபத்தில் காணக் கிடைக்கிறான்.

ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட கோயில்களே திவ்யதேசங்கள் என வழங்கப்படுகின்றன. இந்நில உலகில் உள்ளவை 106 திவ்விய தேசங்கள். இவற்றில் எம்பெருமானைச் சேவித்த பின், எம்பெருமானே மீதமுள்ள இரு திவ்விய தேசங்களான திருப்பாற்கடலுக்கும், திருநாட்டுக்கும் அழைத்துச் சென்று சேவை தந்தருளுகிறான் என்பது நமது வைணவ ஸம்ப்ரதாய சித்தாந்தம்.

---

1. திருவாய்மொழி, 6.10.10.

2. பெரியாழ்வார் திருமொழி, 4.5.2.

ஆழ்வார்கள் பன்னிருவருள், மதுரகவியாழ்வார் மட்டும் எம் பெருமானை, நேரிடையாக மங்களாசாசனம் செய்யாமல், அப் பெருமானையே ஸதா மங்களாசாசனம் செய்த நம்மாழ்வாரையே ஏத்தி, "தேவு மற்றறியேன்"[1] என்றபடி, சத்ருக்னன் படியில் வாழ்ந்து காட்டியவர். "த்வத்தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:" என்ற ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதம் 18ம் ஸ்லோகமும் "தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என்ற ஸ்வாமி தேசிகனின் அதிகார ஸங்கிரஹமும் இக்கருத்தையே எடுத்துரைக்கின்றன.

ஆழ்வார்கள் பதினொருவரால் மங்களாசாசனம் பண்ணப்பட்ட ஸ்தலம் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம் மட்டுமே.

ஆழ்வார்கள் பதின்மர் மங்களாசாசனம் செய்தது: 2 திவ்விய தேசங்கள் -- திருவேங்கடமும் திருப்பாற்கடலும்.

ஆழ்வார்கள் எண்மர் மங்களாசாசனம் செய்த ஸ்தலம் - பரமபதம்.

ஆழ்வார்கள் எழுவர் மங்களாசாசனம் செய்த ஒரே ஸ்தலம் திருக்குடந்தை என்னும் கும்பகோணம்.

ஆழ்வார்கள் அறுவர் மங்களாசாசனம் செய்த தலம்:
திருமாலிருஞ்சோலை என்னும் அழகர் கோயில்.
ஆழ்வார்கள் ஐவரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட தலங்கள் - 6
ஆழ்வார்கள் நால்வர் மங்களாசாசனம் செய்த தலங்கள் - 3
ஆழ்வார்கள் மூவர் மங்களாசாசனம் செய்த தலங்கள் - 5
இருஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த தலங்கள்: 21
ஒரு ஆழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட தலங்களின் எண்ணிக்கை : 67

ஆக மொத்தம் 108 திவ்விய தேசங்களை ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

---

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு, 2.

108 திவ்விய தேசங்களில் நின்ற திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களின் எண்ணிக்கையே அதிகமாகும். எம்பெருமானின் நின்ற திருக்கோலம் உள்ள 67 ஸ்தலங்களின் பகுப்பு:

அ. கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 39

ஆ. மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 12

இ. தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 14

ஈ. வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம் - 2

அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள திவ்விய தேசங்களின் எண்ணிக்கை: 17

அ. கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 13

ஆ. மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 3

இ. தெற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - இல்லை

ஈ. வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 1

சயனத் திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்களின் எண்ணிக்கை: 24

அ. கிழக்கு திசை நோக்கிய சயன திருக்கோலம் - 39

ஆ. மேற்கு நோக்கிய சயன திருக்கோலம் - 18

இ. தெற்கு நோக்கிய சயன திருக்கோலம் - 3

ஈ. வடக்கு நோக்கிய சயன திருக்கோலம் - இல்லை

பொதுவாகத் திசையைக் குறிக்குமிடத்து, அவை மூலவர் நோக்கியுள்ள திசையையே குறிப்பதாகும். மூலவர் எந்தெந்த ஸ்தலத்தில் எத்திசை நோக்கியுள்ளாரோ, அதன்படி மேற்கண்ட கணக்கீடு காட்டப்பட்டுள்ளது.

ஒரே சன்னிதியில் நின்ற, இருந்த, மற்றும் கிடந்த என்ற மூன்று திருக்கோலங்கள் உண்டு. அவ்வாறு அமையப்பெற்ற ஸ்தலங்களுக்குத் திருநீர்மலை, திருக்கோட்டியூர், மதுரை கூடலழகர், திருவல்லிக்கேணி முதலிய திவ்யதேசங்களை உதாரணமாகக் கூறலாம்.

பொதுவாக, ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவது நம் மனத்தை அமைதியுறச் செய்ய உதவுகிறது. பலவித ஈர்ப்புகளினால் கவரப்பட்ட மனம், பலமான அழுத்தங்களுக்கு ஆட்படுகிறது. கோவிலின் பெரிய

கோபுரமும், பரந்த வானமும், அதன் வண்ணச் சேர்த்தியும் காணுபவனின் அகவாயுள் நுழைகிறது. கண்ணும் மனமும் தன்னையுமறியாமல் குழப்பங்களில் இருந்து விடுபடுகிறது. கோபுரத்தில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்களின் அழகில் ஈடுபட்டு, அதைத் தொடர்ந்த புராணக் காட்சிகளில் ஊடுருவி அப்படியே எம்பெருமானின் திவ்விய கல்யாண குணங்களிலும், அவனுடைய எண்ணிறந்த திவ்விய (அஸாதாரண) சேஷ்டிதங்களையும் அசைபோட ஆரம்பிக்கிறது. இதுவே அவன் திவ்விய மங்கள விக்கிரகத்தை ரசித்துப் பார்க்கும் நிலைக்கு நம் மனத்தைத் ஏவுகிறது. எம்பெருமானுடைய சுபாச்ரயத்திருமேனியை சேவிக்கப் பழகிய கண்ணும் மனமும், உலகியல் விஷயங்களில் (விஷயாந்தரங்களில்) ஈடுபடுவது குறைந்து விடுகிறது. ஆலய வழிபாட்டுமுறையை அறிந்து சேவிப்பது இன்னும் நம் நிலையை உயர்த்துகிறது.

**ஆலய வழிபாட்டு முறை:**

பாஞ்சராத்திர ஆகமத்தில் குறிப்பிட்டுள்ள படி: (பண்டிதர் ஸ்ரீராமன் பட்டாச்சாரியார் ஸ்வாமி தொகுத்து உதவிய குறிப்புகள்)

1. அவரவர் ஸம்ப்ரதாயப்படி துணிகளை அணிந்து நெற்றியில் விதிப்படி திருநாமம் தரித்துக்கொண்டு பெருமாள் கோவிலுக்குச் செல்ல வேண்டும்.
2. கை, கால்களை சுத்தமாக அலம்பிக்கொண்டு, த்வஜஸ்தம்பத்தின் அடியில் பலிபீடம் இருந்தால், அதற்கு முன்பாக ஸாஷ்டாங்க ப்ரணாமம் செய்ய வேண்டும்.

பாஞ்சராத்ரம் சொல்லியபடி:

*பத்ப்யாம் கராப்யாம் ஜானுப்யாம் மனஸா ச தியா ததா।*
*அஹங்காரேண சாத்மானம் நிபத்ய தரணீதலே॥*

கை, கால்கள், முழங்கால், மனம், புத்தி இவைகளை நன்றாகத் தரையில் படும்படி, அஹங்காரம் துளியுமில்லாமல் பூமியில் விழுந்து தொழுவதே ஸாஷ்டாங்க ப்ரணாமமாகும்.

3. சேவித்த பிறகு, மூன்று முறை தன்னுடைய ஆசார்யனைத் தியானித்து அவர் தனியனைச் சொல்வது உத்தமம்.

4. கோவிலுக்குள் நுழைந்ததும் அனுசந்திக்க வேண்டிய சுலோகம்:
கூர்மாதீன் திவ்ய லோகாந் ததனுமணிமயம் மண்டபம் தத்ர சேஷம் தஸ்மின் தர்மாதி பீடம் ததுபரி கமலம் சாமர க்ராஹிணீச்ச| விஷ்ணும் தேவீ-விபூஷாயுத கணமுரகம் பாதுகே வைநதேயம் ஸேனேசம் த்வாரபாலான் குமுதமுககணான் விஷ்ணு பக்தான் ப்ரபத்யே||

(பாஞ்சராத்ரம்)

5. த்வஜஸ்தம்பத்தின் அடியிலிருந்து பிரதக்ஷிணமாக ஸன்னிதியை வலம் வரவேண்டும்.
6. நிதானமாக ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். பூரண கர்ப்பிணிநடை போன்றும், பசுமாட்டின் நடை போன்றும் மெதுவாக வலம் வரவேண்டும்.
7. முதலில் ஆழ்வார் ஆசார்யர்கள் சன்னிதிகளில் அவர்களைச் சேவிக்க வேண்டும்.
8. பிறகு தாயார் சன்னிதிக்குச்சென்று தாயாரைச் சேவிக்க வேண்டும்.
9. விஷ்வக்ஸேனரை சேவித்துவிட்டு, நடு மண்டபத்தில் பகவானை நினைத்து தெண்டனிட்டு, த்வாரபாலகர்களுடைய அனுமதியைப் பெற்றபின், சன்னிதி முன்பாக அந்தந்த திவ்விய தேசப் பாசுரங்களுடன் பெருமாளை சேவிப்பது உத்தமம். பகவானுடைய தீர்த்தம் மற்றும் ப்ரசாதங்களை மிக்க வணக்கத்துடன் பெற்றுக் கொள்ள வேண்டும்.
10. "சிந்தையினால், சொல்லினால், செய்கையால்"[1] என்றபடி முக்கரண சுத்தியுடன் வணங்க வேண்டும்.
11. முதலில் சன்னிதி முன் அடக்கமாக நிற்றல் வேண்டும்.
12. பிறகு சாஷ்டாங்கமாகப் பணிதல்; மீண்டும் நிற்றல்
13. முதுகு வளைந்தபடி ஸேவித்து, பெருமாளின் திருவடியை ஸேவித்தல். ('ங' ப்போல் வளைந்து சேவிக்க வேண்டும்.)
14. இல்லங்களில் பகவானைத் துதிப்பது உத்தமம். அதைவிட பன்முறை சிறந்தது ஆலயங்களில் வழிபடுதல்.

"பரார்த்தோ ஸூர்ய ஸத்ருச:
க்ருஹார்த்தா கிருஹ தீபவத்"

1. திருவாய்மொழி, 7.10.10.

வீட்டில் பூஜை செய்வது, வீட்டில் ஏற்றிவைக்கும் விளக்கு ஏற்படுத்தும் வெளிச்சம் போல; ஆலயத்தில் பூஜை என்பது சூரியனுடைய அகண்ட பிரகாசம் போல (ஸ்ரீ பாஞ்சராத்ரம் - ஈச்வர ஸம்ஹிதை)

ஒவ்வொரு திவ்விய தேசமும் ஏழுவிதமான புண்ணியங்களை உடையதாக இருக்கும்.

"க்ஷேத்ரம், வநம், நதீ, ஸிந்து, புரம் புஷ்கரிணீ ததா
விமானம் ஸப்த புண்யஞ்ச ..."

க்ஷேத்ரமஹிமை

க்ஷேத்ரமஹிமையைக் காணப்புக்கால், நம்முடைய ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட திவ்ய தேசமான, திருக்குடந்தை மிகுந்த பெருமை பெற்றது. பிரளய காலத்தில் சிருஷ்டிக்கு உண்டான விதையும் வேதமும் ஒரு குடத்தில் அடக்கப்பட்டது. பிரளயஜலப் பெருக்கு, குடத்தை இமயமலைச் சிகரத்தினின்று சோழ தேசத்திற்கு கொணர்ந்தது. குடத்தினின்று அமுதம் பெருக்கெடுத்து ஓடிய (பிரவஹித்த) இடமே கும்பகோணமாயிற்று என்பர்.

(1) "யோ நர: கும்பகோணே'ஸ்மிந் க்ஷணார்த்தமபி திஷ்ட்டதி/
கரஸ்த்தம் தத்ர கைவல்யம் கிமுதாந்யா விபூதய: //"

திருக்குடந்தையில் ஒரு க்ஷணகாலம் இருக்கும் மனிதனுக்கு கைவல்யம் வையகத்திலேயே கிடைக்கிறது. பின், வேறு ஐச்வர்யங்களுக்குக் கேட்கவா வேண்டும்! - எனப் பெருமை பேசுகிறது கும்பகோண ஸ்தல மங்கள சுலோகம்.

(2) த்ரிம்சத் கோடி வஸுருத்ர திவாகராதி
தேவாதி தேவகண ஸந்தத ஸேவ்யமாநம்/
அம்போஜ ஸம்பவ சதுர்முக கீயமாநம்
வந்தே சயாநமிஹ போகிநி சார்ங்கபாணிம்//

இந்திரன், ருத்ரன், சூரியன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களாலும் நிரந்தரம் ஸேவிக்கப்படுபவனும், பகவானின் நாபீ கமலத்தில் உண்டான நான்முகனால் துதிக்கப்படுபவனும், திருக்

குடந்தையில் பள்ளி கொண்டிருப்பவனுமான சார்ங்கபாணியை எப்போதும் வணங்குகிறேன்.

இத் திவ்ய தேசம் உபய ப்ரதான க்ஷேத்ரம் என்று வழங்கப்படுகிறது. மூலவருக்கு எவ்வளவு பெருமைகள் உண்டோ அவ்வளவும் உற்சவருக்கும் உண்டு. ஸ்ரீ ஆராவமுதனுடைய அனைத்துப் பெருமைகளும் உற்சவரான ஸ்ரீ சார்ங்கபாணியையும் சாரும்.

*(3)* உத்தானசாயிநமுதார கிரீட சூடம்

உத்புல்ல பத்ம நயநம் ஹ்யுபதாந பாஹும் ।

ஆஜாநு பாஹுமமலம் பணிராஜ தல்பே

சார்ங்கேச மச்யுதமஹம் ப்ரணதோ'ஸ்மி நித்யம் ॥

உத்தான சயனத்தில் இருப்பவனும், மகுடம் தரித்தவனும், மலர்ந்த தாமரைக் கண்களை உடையவனும், தலையணையாக வைக்கப்பட்ட திருக்கரங்களை உடையவனும், நீண்ட புஜங்களை உடையவனும், பவித்திரனும், ஆதிசேஷனாகிற படுக்கையில் பள்ளி கொண்ட பெருமானு மாகிற ஸ்ரீ சார்ங்கராஜனை அனுதினமும் அடிதொழுகிறேன்.

*(4)* ஏவம் சார்ங்க தரம் பூஷ்ணும் யே ப்ரபந்நா: பராயணம் ।

ந தேஷாம் யமஸாலோக்யம் ந ச தே நரகௌகஸ: ॥

ஸ்ரீ சார்ங்கராஜனை அடைக்கலம் கொண்டவனுக்கு யமபயமோ, நரகபயமோ அண்டாது. ஏனெனில் ஸ்ரீ ஆராவமுதன் ஒரு தெவிட்டாத இன்னமுதனன்றோ!

ஸ்ரீ திருக்குடந்தை ஆராவமுதன் விஷயமான நான்கு மங்களாசாசன சுலோகங்கள் ஸ்ரீ கோபால மஹாதேசிகன் அருளிச் செய்ததுள்ளார். திருக்குடந்தை, நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் விளைந்த திருப்பதி என்று போற்றப்படுகிறது. அமுத வனமும், காவிரி நதியும், கல்யாணபுரமும், ஹேமபுஷ்கரிணியும், வைதிக விமானமும் கொண்ட பெருமை உடையது இத்திருப்பதி.

இவ்வாறே திருக்குடந்தைக்கு அருகிலுள்ள நாச்சியார் கோயில் எனப்படும் திருநறையூரையோ, திருச்சேறை எனப்படும் பஞ்சசார க்ஷேத்திரத்தையோ ஆய்வுக்கான தலைப்பாகக் கொண்டு திவ்விய தேசங்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளலாம்.